# ஆண் பெண்

# இரேகைசாஸ்திரம்

அ. முத்துவடிவேல் முதலியாரவர்களால்
வெளியிட்டது.

1938

உடையாள் துணை

பதினெண்சித்தர்களில் ஒருவராகிய

இராமதேவர் சோதிட திறவுகோலென்னும்

ஆண் பெண்

# இரேகைசாஸ்திரம்



(மூலமும்-உரையும்.)

## உரோமரிஷி சோதிடசிந்தாமணி

மூலமும் உரையும் அடங்கியது

ஆக பாடல்கள் - 520



இவை

செஞ்சி. ஏகாம்பரமுதலியாரவர்களால்

உரை எழுதப்பட்டு,

மாணுவரம் கணிதநூற்புலவர்

நாராயணசாமி முதலியாரவர்களால்

பரிசோதித்ததை,

அ. முத்துவடிவேல் முதலியாரால்

சென்னை

பூமகள்விலாச அச்சுக்கூடத்தில்

பதிப்பித்தது.

1938



விலை] [தபா 1

# ரிஜிஸ்டர் அறிவிப்பு



இதனால் சகலருக்குந் தெரிவிப்பது யாதெனில்:—இந்த "இராம தேவர் சோதிடமென்னும் இரேகைசாஸ்திரம் மூலத்திற்கும், உரோம ரிஷிசோதிட சிந்தாமணி மூலத்திற்கும்" ம-ா-ா-ஸ்ரீ செஞ்சி-ஏகாம்பர முதலியார் அவர்களால் உரை எழுதப்பட்டுள்ள இந்நூலை ம-ா-ா-ஸ்ரீ, மயிலை-திருவேங்கடமுதலியார் தன்பேரால் காபிரயிட் ரிஜிஸ்டர்செய்து அச்சிட்டு விற்பனைசெய்து அனுபவித்து வந்ததை, ஷையாரிடம் ரிஜிஸ்டர் சுதந்தரத்தை அடியிற் கையொப்பமிட்டுள்ள நான் கிரயத்திற்குப்பெற்று அச்சிட்டு மகாகனம்பொருந்திய கவர்ண்மெண்டார் அவர்கள்சட்டப்படி என்பேரால் காபிரயிட் செய்திருப்பதால் பிறர் இந்நூலை அச்சிடுதல் கூடாது. அப்படி அச்சிட்டால் அதனால் உண்டாகும் நஷ்டத்தை வசூல் செய்யப்படும். அல்லாமலும் காபிரயிட் உல்லங்கனம் செய்த குற்றத்திற்கும் உட்படுவார்கள் என்பதைத் தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

இப்படிக்கு,

அ. முத்துவடிவேல் முதலியார்,

நெ-24, தாண்டவராயப்பிள்ளை வீதி, சென்னை.

சிவமயம்

# சாற்றுக்கவிகள்

கோயமுத்தூர் ஜில்லா அவனாசி க்ஷேத்திரத்தில் வசிக்கும்
நடராஜர் திருப்பணி தருமம்
## ஸ்ரீமது சிவஞானதேசிகர் அவர்கள் இயற்றியது

எண்சீரடி யாசிரிய விருத்தம்

மகிமைபெறுஞ்சென்னனூஞ் சோலைசூழ்வாவியு
மருநிரை மூலங்கள்பலவும்
மங்களமிகும்பெரம் பூரில்வளர்பாஞ்சால
மணிநைமட லெழுதும்நேசன்
திகழ்கிரணசந்திராதித்தர் முறைபிசகினுந்
திரைகடலி நீர்வற்றினுந்
தினையளவுநீதிதவறுச் சுகிர்தகுணசீலச்
செம்மல்பொன் னம்பலக்குரிசில்
சுகநளினவரபுத்திர சாமர்த்தியவாறுமுகத்
துரையன்பு கூர்ந்துதிவ்ய
சுந்தரவினோதாதி புரியினுரைதிருவேங்கடற்
றோன்றலா லுண்டுசெய்த
உகமையுள்ளசென்னையில் வாணிவிலாசமெனு
மோதுமச் சிற்பதித்து
உற்றஇராமதேவர் சோதிடம்இரேகைசாஸ்த்ரம்
ஓங்கப்பேர் பெற்றனரோ.

---

திருவண்ணாமலை
## வீரபத்திர முதலியாரால் இயற்றியது

ஆசிரிய விருத்தம்

கார்கொண்டமுகிலினம் வளமருவுமலைகளுங்
கந்தமூலங்கள் பலவும்
கமழ்கின்றமருமலர்ச் சோலையொடுவாவியுங்
கதித்தசெங் நெற்பயிர்கள்சூழ்
பேர்மிகும்பெரம்பூரில் புகழ்கின்றதளவாசன்
பெட்புறுபொன் னம்பலக்குரிசில்
பேசரியபுகழ்பெற்ற ஆறுமுகனெனும்வள்ளல்
பெருமையாய்ச் சோதிடத்திற்

சீர்கொண்டபாடலுரை இராமதேவர்செப்புஞ்
செந்தமிழ்மூந் நூற்றுப்பத்தும்
ஜெயங்கொளும்உரோமரிஷி இருநூற்றுப்பத்துமுச்
சேரவைந் நூற்றிருபதும்
நேர்கொண்டவாணி விலாசமெனுமச்சுதனில்
நீணிலத் தோர்மதிக்க
நீட்டினன்புகழவுங் காட்டினன்றன்கீர்த்தி
நிறுவினன் புவியின்மாதோ.

---

ம-ள-ள-ஸ்ரீ காஞ்சீபுரம் மணியம்

## சண்முகமுதலியாரவர்களால் பாடியது

அறுசீர்க்கழி நெடிலாசிரிய விருத்தம்

பேராருமித்தரையில் மானிடர்க்குஆதாரப்
பொருளென் றுய்ந்து
சீராருங்கணிதநூல் யாவையுமேவொறுங்குற்றுச்
சிந்தா தாக்கி
யேராரும்சித்தர்களில் ராமதேவனெனுங்குறவ
னெளிதிற் றந்த
ஆராருஞ்சோதிடத்தை அச்சிட்டீந்தானறுமுக வள்ளலெனும்
அருளு ளோனே.

---

யாழ்ப்பாணம் உபாத்தியாயர் ம-ள-ள-ஸ்ரீ,

மணிமந்திர வயித்திய

## இராமசாமிநாயுடு அவர்களால் பாடியது

அறுசீர்க்கழி நெடிலாசிரியச் சந்தவிருத்தம்

மனங்கொண்டான் சித்தர்கனூல் யாவையுமே
மதியிட் டாய்ந்து
தனங்கொண்டான் பதியின்மிசை விதிநூலைத்
தனமெம் மோரை
இனங்கொண்டான் யெழில்கொண்டான் யெண்டிசையும்
புகழத் தக்க
களங்கொண்டா னறுமுகத் தோன்றலெனக்
கதித்து ளோனே.

---

# இரேகை சாஸ்திர அட்டவணை

அட்டவணை முற்றிற்று.

உ

சிவமயம்

# இராசி கிரக நட்சத்திரக் குறி

இப்பூமியின்கண்ணுள்ள மானிடர்களுடைய அவயவங்களுக்குரிய இராசிகளும், நவக்கிரகங்களும், திதிகளும், நட்சத்திரங்களும் கூறப்படுகின்றன.

| | | | |
|---|---|---|---|
| மீனம் | மேஷம் | ரிஷபம் | மிதுன |
| கும்பம் | மேற்கு | | கடகம் |
| | தெற்கு | உருவம் வடக்கு | |
| மகரம் | கிழக்கு | | சிங்கம் |
| தனுசு | விருச்சிகம் | துலாம் | கன்னி |

## கிரகசரீரம்

தலை-செவ்வாயாகும், முகம்-சுக்கிரனாகும், கண்டம்-புதனாகும், தோள்-சந்திரனாகும், மார்பு-சூரியனாகும், வயறு-குருவாகும், துடை-சனியாகும், இராகு கேது-கணைக்காலாகும்.

## இராசிசரீரம்

மேஷம்-தலை, ரிஷபம்-வாய், மிதுனம்-தோள், கடகம்-மார்பு, சிங்கம்-முலை, கன்னி-வயறு, துலாம்-முதுகு, விருச்சிகம்-அறை, தனுசு-துடை, மகரம்-கணுக்கால், விழி இவைரெண்டுமாகும். கும்பம்-புறவடி, மீனம்-உள்ளடி, இப்படி இராசிநிலையிற் பிணிகளென்றும் வந்த கோட்களால் "இராமதேவர்" அருள்பெற்றுப் பேசவேண்டும்.

## நட்சத்திர அங்கக்குறி

கார்த்திகை-தலை, உரோகணி-நெற்றி, மிருகசீரிஷம்-புருவம், வாதிரை-கண், புனர்பூசம்-முகம், பூசம்-மேலுதடு, ஆயிலியம்-கீழு மகம்-மோவாய், பூரம்-வலக்கை, உத்திரம்-இடக்கை, அஸ்தம்

விரல், சித்திரை-கழுத்து, சுவாதி-மார்பு, விசாகம்-முலை, அனுஷம்-வயறு, கேட்டை-இடை, மூலம்-முதுகு, பூராடம்-அறை, உத்திராடம்-பீஜம், திருவோணம்-ஆண்குறி, அவிட்டம்-குதம், சதையம்-வலதுதுடை, பூரட்டாதி-இடதுதுடை, உத்திரட்டாதி-முழந்தாள், இரேவதி-கணைக்கால், அசுவனி-புரவடி, பரணி-உள்ளங்கால். இந்த ஸ்தானத்தில் நல்வினை தீவினை கிரகநிலைகண்டு சொல்லவேண்டும்.

## நந்திதேவர் தேவர்களுக்கு உபதேசித்த நவக்கிரக பூஜை எந்திரம்

இவ்வெந்திரத்தில்
நவக்கிரகம் அடைக்கவேண்டும்

| | | | | |
|---|---|---|---|---|
| ஃ | | அ-ஆ | இ | |
| ஃ | ட-ண<br>வடகிழக்கு<br>புதநிலை | ச-ஞ<br>கிழக்கு<br>சுக்கிரநிலை | ல-வ<br>தென்கிழக்கு<br>சந்திரநிலை | [illegible] |
| [illegible] | த-ந<br>வடக்கு<br>குருநிலை | ய-ர<br>மத்தியம்<br>சூரியநிலை | க-ங<br>தெற்கு<br>குஜன்நிலை | [illegible] |
| [illegible] | ற-ன<br>வடமேற்கு<br>கேதுநிலை | ப-ம<br>மேற்கு<br>சனிநிலை | ழ-ள<br>தென்மேற்கு<br>இராகுநிலை | [illegible] |
| | [illegible] | [illegible] | [illegible] | |

## சக்கரம் அமைக்கும் வகை

வண்டிசக்கரம்போல் மூன்றுவட்டம் வரிசையாகக் கீறி மத்தியில் இராசியை அடைத்து அதற்கு மையமாக உருவம் நிறுத்தி மேற்கண்ட இராசியிலுள்ளபடி திக்குகளை அடைத்து கிழக்கு முதலாகக்கொண்டு வலமாக முப்பது நாட்களுக்குள்ள திதிகளைச் சுற்றிலும் வரிசையாக அமைத்து, அதற்கு மேல்வட்டத்தில் கார்த்திகைமுதல் பரணியீறாக இருபத்தேழு நட்சத்திரத்தையும் அடைத்துக்கொள்ளவேண்டும்.

பூர்வம் தக்கனுடைய வேள்வியை அடுத்த தேவர்களுக்கு கிடைத்த இடுக்கண் சகியாது கைலையைச் சூழ்ந்த அமரரைக் கண்ணுற்ற நந்தீசுரபகவானை வினவுங்கால் வரைந்த இந்த நவக்கிரக பூசையை அன்னோருக்கு உபதேசித்தருளி இவ்வாறு சிலநாள் பூசிப்பீராகில் சீக்கிரம் தம்தம் இடுக்கந்தீர்ந்து சுகமடைவீரெனத் திருவாய்மலர்ந் தருளினவாம். அதுபோல் இப்பூமியின்கண்ணுள்ள மானிடர் ஒவ்வொருவருக்கும் எந்தக்கிரகம் வேதை செய்கின்றனவோ அந்தக் கிரகத்துக்குரிய வாரந்தோறும் பூசித்துவரில் மனோவியாகூலந் தீர்ந்து ஆனந்த மடைவாரென்பது திண்ணமென்று "இராமதேவர்" திருவாய் மலர்ந்தருளிய வாக்கியம்.

மேற்கண்டிருக்கும் எந்திரங்களில் நவநாயகர்கள் பொருந்தியிருக்கும் வரைகளின் புறம்பாயுள்ள அக்ஷரங்களை அந்தந்தத் திக்குகளுக்கு உயிரெழுத்தென்று மத்தியில் நிறுத்துவீராகவும். ஒவ்வொரு வரையின்கண்ணுள்ள கிரகங்களுக்கு வலமிடமாகவிருக்கும் அக்ஷரங்களை கிரகத்தின் மெய்யெழுத்தெனப் பதிக்கவும்.

---

## பூசை செய்யும் விவரம்

**ச ஞ** கிழக்கு இந்திரதிசையி லிருக்கும் சுக்கிரனுக்கு ஆபரணம்-வயிரம், பூ - வெண்தாமரை, சமித்து - அத்தி, குங்கிலையில் வெண்ணை சேர்ந்த சாதத்துடன் இனிப்பாகிய பதார்த்தமும் மொச்சக்கொட்டை சேர்ந்த பலகாரமுமாக வெள்ளிக்கிழமையில் படைத்து தூபதீபங் கொடுத்து தியானித்துச் சாப்பிட வேதனைதராது. சுக்கிரன் பாதுகாப்பான்.

**ல வ** தென்கிழக்கு அக்கினிமூலையில் இருக்கும் சந்திரனுக்கு ஆபரணம்-முத்து, பூ-வெள்ளல்லி, முருங்கை-சமித்து, தித்திப்புச் சேர்ந்த பதார்த்தம் அரிசிமாவின் பலகாரம் விளாவிலையில் தயிர்சேர்ந்த சாதம்படைத்து தூபதீபங்கொடுத்து சந்திரனை மனதில் தியானித்து திங்கட்கிழமைதோறும் பூசித்துவர நன்மையைத்தருவான்.

**க ங** தெற்கு எமன்றிசையிலிருக்கும் செவ்வாயினுக்கு ஆபரணம்-பவளம், பூ-செண்பகம், கருங்காலி-சமித்து, கடம்பயிலையில் வெண்ணையுடன் சேர்ந்த சாதம் துவர்ப்பு உள்ள பதார்த்தம் துவரையில் செய்த பதார்த்தத்துடன் படைத்து செவ்வாய்க்கிழமையில் தியானித்துவர கொடுமைதராது காப்பான்.

ழ ளா தென்மேற்கு நிருதிமூலையில் இருக்கும் இராகுவிற்கு ஆபரணம்-கோமேதகம், பூ-மந்தாரை, சமித்து-அறுகு, இதுகளுடன் தாழமிலையில் சுத்த அன்னமும் புளிப்புசேர்ந்த பதார்த்தமும் உளுந்து சேர்ந்த பலகாரத்துடன் எந்தவாரமானபோதினும் 7½-நாழிகைக்கு மேல் படைத்து தூபதீபங்கொடுத்து தியானித்துசாப்பிட தொந்தரை தராது இரட்சிப்பான்.

ப ம மேற்கு வருணதிசையி லிருக்கும் சனிக்கு ஆபரணம்-நீலம், பூ-கருங்குவளை, சமித்து-வன்னி, இதுகளுடன் சனிக்கிழமையில் ஆலயிலையில் மாம்பழத்துடன் சாதமும் சிகப்புசேர்ந்த பதார்த்தம் எள்ளுசேர்ந்த பலகாரத்துடன் படைத்து தூபதீபங் கொடுத்து தியானித்து சாப்பிட இம்சைதராது இரட்சிப்பான்.

ற ன வடமேற்கு வாயுவ் மூலையிலிருக்கும் கேதுவுக்கு ஆபரணம் - வைடூரியம், பூ - செவ்வல்லி, சமித்து-தர்ப்பை, இதுகளுடன் தாழமிலையில் சுத்த அன்னம் படைத்து புளிப்புசேர்ந்த பதார்த்தமும் கொள்ளுசேர்ந்த பலகாரமும் சமர்ப்பித்து எந்தவாரமானபோதினும் 7½-நாழிகைக்கு மேற்பட்டு தூபதீபங் கொடுத்து தியானித்து சாப்பிட தன்தேவதை தடுத்து பாதுகாப்பான்.

த ந வடக்கு குபேரதிசையிலிருக்கும் குருவிற்கு ஆபரணம்-புஷ்பராகம், பூ-முல்லை, சமித்து-அரசு, இதுகளுடன் அரசனிலையில் வெள்ளைசாதமும் தித்திப்பு பதார்த்தமும் கடலைசேர்ந்த பலகாரமும் வியாழக்கிழமையில் படைத்துத் தியானித்து தூபதீபங் கொடுத்துச் சாப்பிட ஆக்கிருஷணஞ் செய்யாது காத்துவருவான்.

ட ண வடகிழக்கு ஈசான்னியத்திலிருக்கும் புதனுக்கு ஆபரணம்-பச்சை, பூ-வெண்காந்தம், சமித்து-நாயுருவி, வேப்பிலையில் சர்க்கரையுடன் சாதமும் உப்புமாவுடன் பச்சைப்பயறு பலகாரத்துடன் புதன்கிழமைதினம் படைத்து தியானித்து தூபதீபங்கொடுத்து சாப்பிட தன் வலிமையைச் செய்யாது காப்பாற்றுவான்.

ய ர மத்தியஸ்தானத்திலிருக்கும் சூரியனுக்கு ஆபரணம்-மாணிக்கம், சமித்து-எருக்கு, கடுகுசேர்ந்த சோறும் காரஞ்சேர்ந்த துவட்டல், புஷ்பம்-செந்தாமரை, கோதுமைச்சேர்ந்த பலகாரத்துடன் ஞாயிற்றுக்கிழமையில் தூபதீபங்கொடுத்து சூரியதெரிசனஞ் செய்து சாப்பிட தனது குரூரத்தைக்காட்டானென்பது ஆசிரியர் வாக்கியமாகும்.

---

உ

# அஷ்டவர்க்கம்

| | | | | |
|---|---|---|---|---|
| | ரவி | 1-2-4-7-8-9-10-11 | ஆக | 8 |
| | மதி | 3-6-10-11 | ,, | 4 |
| (சூரியன் | குசன் | 1-3-4-7-8-9-10-11 | ,, | 8 |
| பரல் | புதன் | 3-5-6-9-10-11-13 | ,, | 7 |
| 48-க்கு | குரு | 5-6-9-11 | ,, | 4 |
| விபரம்) | புகர் | 6-7-11 | ,, | 3 |
| | சனி | 1-2-4-7-8-9-10-11 | ,, | 8 |
| | லக்கினம் | 3-4-6-10-11-12 | ,, | 6 |
| | ரவி | 3-6-7-8-10-11 | ,, | 6 |
| | மதி | 1-3-6-7-10-11 | ,, | 6 |
| (சந்திரன் | குசன் | 2-3-5-6-9-10-11 | ,, | 7 |
| பரல் | புதன் | 1-3-4-5-7-8-10-11 | ,, | 8 |
| 49-க்கு | குரு | 1-4-7-8-10-11-12 | ,, | 7 |
| விபரம்) | புகர் | 3-4-5-7-9-10-11 | ,, | 7 |
| | சனி | 3-5-6-11 | ,, | 4 |
| | லக்கினம் | 3-9-10-11 | ,, | 4 |
| | ரவி | 3-5-8-10-11 | ,, | 5 |
| | மதி | 3-6-11 | ,, | 3 |
| (செவ்வா | குசன் | 1-2-4-7-8-10-11 | ,, | 7 |
| பரல் | புதன் | 3-5-6-12 | ,, | 4 |
| 39-க்கு | குரு | 6-10-11-12 | ,, | 4 |
| விபரம்) | புகர் | 6-9-11-12 | ,, | 4 |
| | சனி | 1-4-7-8-9-10-11 | ,, | 7 |
| | லக்கினம் | 1-3-6-10-11 | ,, | 5 |
| | ரவி | 5-6-9-11-12 | ,, | 5 |
| | மதி | 2-4-6-8-10-11 | ,, | 6 |
| (புதன் | குசன் | 1-2-4-7-8-9-10-11 | ,, | 8 |
| பரல் | புதன் | 1-3-5-6-9-10-11-12 | ,, | 8 |
| 54-க்கு | குரு | 6-8-10-12 | ,, | 4 |
| விபரம்) | புகர் | 1-2-3-4-5-8-9-11 | ,, | 8 |
| | சனி | 1-2-4-7-8-9-10-11 | ,, | 8 |
| | லக்கினம் | 1-2-4-6-8-10-11 | ,, | 7 |

| | | | | |
|---|---|---|---|---|
| | ரவி | 1-2-3-4-7-8-9-10-11 | ஆக | 9 |
| | மதி | 2-5-7-9-11 | ,, | 5 |
| (குரு | குசன் | 1-2-4-7-8-10-11 | ,, | 7 |
| பரல் | புதன் | 1-2-4-5-6-9-10-11 | ,, | 8 |
| 56-க்கு | குரு | 1-2-3-4-7-8-10-11 | ,, | 8 |
| விபரம்) | புகர் | 2-5-6-9-10-11 | ,, | 6 |
| | சனி | 3-5-6-12 | ,, | 4 |
| | லக்கினம் | 1-2-4-5-6-7-9-10-11 | ,, | 9 |
| | ரவி | 8-11-12 | ,, | 3 |
| | மதி | 1-2-3-4-5-8-9-11-12 | ,, | 9 |
| (சுக்கிரன் | குசன் | 3-5-6-9-11-12 | ,, | 6 |
| பரல் | புதன் | 3-5-6-9-11 | ,, | 5 |
| 52-க்கு | குரு | 5-8-9-10-11 | ,, | 5 |
| விபரம்) | புகர் | 1-2-3-4-5-8-9-10-11 | ,, | 9 |
| | சனி | 3-4-5-8-9-11 | ,, | 6 |
| | லக்கினம் | 1-2-3-4-5-8-9-11 | ,, | 8 |
| | ரவி | 1-2-4-7-8-10-11 | ,, | 7 |
| | மதி | 3-6-11 | ,, | 3 |
| (சனி | குசன் | 3-5-6-10-11-12 | ,, | 6 |
| பரல் | புதன் | 6-8-9-10-11-12 | ,, | 6 |
| 39-க்கு | குரு | 9-11-12 | ,, | 3 |
| விபரம்) | புகர் | 6-11-12 | ,, | 3 |
| | சனி | 3-5-6-11 | ,, | 4 |
| | லக்கினம் | 1-3-4-6-10-11 | ,, | 6 |

## வெண்பா

*அட்டவர்க்கவிந்திரவிக் காறெட்டாமம்புலிக்கொன்*
*றெட்டுசனிசேய்முப்பத் தொன்பதாம்-இட்டபுதற்*
*கைம்பத்துநான்குகுருக் காறெட்டோடெட்டா*
*மைம்பத்திரண்டு புகர்க்காம்.*

[இந்தப்படி அந்தந்தக் கிரகங்களுக்குச் சொன்ன பரலை அந்தந்தக் கிரகங்களிலிருக்கிற வீடுமுதலாகக் கொண்டும் லக்கினத்தைத்தொட்டும் எண்ணிப்போடுவது.]

நா.அ.நா.அ. இலங்கை



# அஷ்டவர்க்கப் பலன்

## சூரியனஷ்டவர்க்க பலன்

ஜன்மலக்கினத்திலும் சந்திரலக்கினத்திலும் பரல் குறைந்திருந்தாலும் சூரியன் நீச்சனாகவிருந்தாலும் பிதாவுக்கு அரிஷ்டம், 5-ம் 9-ம் ராசியில் 30-க்கு குறைந்தபரலோடு சூரியன்நின்றால் பிதாவுக்கும் 25-ல் 3-பரலோடு சூரியனிருக்க 9-ல் ராகுவிருக்க பிதாவுக்கு 5-வருஷத்தில் நிரியாணம். குறைந்தபரலோடு 5-ல் சூரியன் சந்திரன் செவ்வாய் சனியிருந்தால் சாதகனுடைய மாதா பிதா சகோதரருக்கு அரிஷ்டம்.

## சந்திரனஷ்டவர்க்க பலன்

சந்திரன்நின்ற ராசிக்கு 4-ம் ராசிப்பரலை எண்ணிக்கண்ட தொகை மாதா சகோதரர். இதுவும் முன்போலப் பெண்கிரகங் கொடுத்ததும் ஆண்கிரகங் கொடுத்ததுங் கண்டு சொல்லலாம். லக்கினத்துக்கு 4-ம் ராசியைக்கொண்டும் சொல்வது லக்கினத்திலும் சந்திரலக்கினத்திலும் அதிகமாகவிருந்து அதில் சுபரிருந்தாலும் பார்த்தாலும் அதிபதி பலத்தாலும் மாதாவுக்கு தீர்க்காயுள். ஏகாதிபத்திய சோதனையானபின் சந்திரனின்றராசியில் பரலையும் லக்கினமுதல் 4-ராசிப் பரலையும் பெருக்கி 27-ல் கழித்தமிச்சத்தில் பூர்வபக்ஷத்தில் பிறந்தவனுக்கு அச்சுவினி முதலாகவும் அமரபக்ஷத்தில் பிறந்தவனுக்கு அவிட்ட முதலாகவும் எண்ணிக்கண்ட நக்ஷத்திரத்தில் சனி வருங் காலம் மாதாவுக்குப் பீடை, சந்திரன்வருங்காலம் சுகம்.

## செவ்வாயஷ்டவர்க்க பலன்

செவ்வாய்நின்ற ராசிக்கு 3-ம் ராசிக்கதிபதி நின்ற ராசின்பரலை எண்ணிச் சகோதரபலன் சொல்லவும். செவ்வாய்நின்ற ராசிக்கு 3-ம் ராசியின் பரலைக்கொண்டு இளையசகோதரஞ் சொல்லவும். இதுவு முன் போல் ஆண்பெண் கிரகங்களாற்சொல்லவும். செவ்வாய்நின்ற ராசியின் சோத்தியப்பரலை 3-ம் ராசிப்பரலால் பெருக்கி 27-ல் கழித்து முன் போல வளர்பிறை தேய்பிறையறிந்து எண்ணிக்கண்ட நக்ஷத்திரத்தில் சனிவரச் சகோதரபீடை, குருவரச் சகோதரசவுக்கியம்.

## புதனஷ்டவர்க்க பலன்

புதன் கேந்திரத்திரிகோணங்களில் 5-க்கு மேற்பட்ட பரலோடிருக்க குருபார்க்க நல்ல வித்தையுண்டு. 2-க்கு அதிபதி 5-பரலோடு பகை நீச்சம் நீங்கினவிடத்திலிருக்க கணிதமும் சிற்பமும் வரும். புதனிருக்கும் ராசிக்கதிபதி சுபனாய்க் கேந்திரத்திரிகோணமேற அதில் 5-பரனுக்கு மேலிருந்தால் வித்துவானும்.

## குருஅஷ்டவர்க்க பலன்

குருநின்றராசிக்கு 5-ம் ராசிப்பரல் எத்தனையோ அத்தனை புத்திரருண்டு. இதையும் முன்போலவே ஆண்பெண் சொல்லவும். லக்கினத்

துக்கு 5-ம் ராசியினாலும் சொல்லலாம். குரு பலவானாக விருக்க வேண்டும். லக்கினத்திலும் 5-ம் இடத்திலும் பாபக்கிரகமிருந்தால் புத்திரஹானி. லக்கினத்துக்கு 5-ல் மூன்றுபரலிருந்தால் அற்ப புத்திர யோகம். 5-ம் ராசி சமுதாயப்பரலை சோத்தியப்பரலாலே பெருக்கி 27-ல் கழித்த மிச்சம் முன்போலே அச்சுவினி அவிட்டமுதலாக வெண்ணிக்கண்ட நக்ஷத்திரத்தில் குருவருங்கால் புத்திரருண்டு.

## சுக்கிரனஷ்டவர்க்க பலன்

சுக்கிரன் நின்றராசிக்கு 7-ம் ராசியில் எத்தனை பரலிருக்கிறதோ அத்தனை களத்திரமாம். அது சூரியன்கொடுத்த பரலாயின் தந்தை வர்க்கத்திலும், சந்திரன்கொடுத்த பரலாயின் தாய்வர்க்கத்திலும், சனி செவ்வாய் கொடுத்த பரலாயின் அன்னியவர்க்கத்திலும் களத் திரமுண்டாம். லக்கினத்துக்கு ஏழில் சுக்கிரனிருந்தால் களத்திர பலன். சனியிருந்தால் ரோககளத்திரம். புதனிருந்தால் களத்திர யீனம். செவ்வாய் சூரியனிருந்தால் காந்தருவகளத்திரமாம்.

## சனி அஷ்டவர்க்கபலன்

லக்கினத்து 8-ம் ராசியிலிருந்த சமுதாயப்பரலையும், சனிநின்ற ராசியின் சோத்தியப்பரலையும், பெருக்கிக் கண்டதொகை வருஷத்தில் ஜாதகனுக்கு தகத்து ஷடிதொகையை 27-ல் கழித்து மிச்சத்தை அச்சு வினி அவிட்டமுதலாக முன்போல எண்ணிக்கண்ட நக்ஷத்திரத்தில் சனி வருங்காலம் தேகபீடை. சனிநின்றராசி சோத்தியப்பரலையும் லக் கினத்தின் சமுதாயப்பரலையும் பெருக்கிக்கண்ட தொகையை 27-ல் கழித்த மிச்சத்தில் முன்போற்கண்ட நட்சத்திரத்தில் சனிவருங்கால் தேகபீடை, லக்கினமுதல் சனி இருந்த ராசிவரையிலுமுள்ள சோத் தியபரல்களையும் குளிகனிருக்கிறராசிமுதல் லக்கினவரையுமுள்ள ராசி களின் சோத்தியப்பரல்களையும் பெருக்கி 27-ல்கழித்தசேடத்தைமுன் போல எண்ணிக்கண்ட நக்ஷத்ரத்தில் சனிவருங்காலம் நிரியாணமாம்.

## சோத்தியப்பரலென்று சொல்லாதவைகள் சமுதாயப்பரலாம்

சர்வாஷ்டவர்க்கத்தில் 11-ல் 12-ல் குறைந்து 10-ல் அதிகப்பட் டால் இராஜயோகம். 10-ல் குறைந்து 12-ல் அதிகப்பட்டால் அதிக செலவு. 11-ல் குறைந்து 10-ல் அதிகப்பட்டால் செய்தொழிலில் லாப மில்லை. லக்கினமுதல் சனிநின்ற ராசிவரையுள்ள பரலை எண்ணிக் கண்ட தொகை வருஷத்தில் கண்டமுண்டு. ஏகாதிபத்திய சோதனை யானபின் 8-லுள்ள பரலையும் லக்கினபரலையும் பெருக்கி 27-ல் கழித்த சேடத்தை அசுபதிமுத லெண்ணிக்கண்ட நக்ஷத்திரத்தில் சனிவரும் போது கண்டமுண்டு. திரிகோணசோதனையானபின்னும் பார்க்கலாம். வளர்பிறையிற் பிறந்தவனுக்கு அசுபதிமுதலாகவும் தேய்பிறையில் பிறந்தவனுக்கு அவிட்டமுதலாக யெண்ணிக்காணவும்.

---




உள்ளங்கையில் இருக்கப்பட்ட இரேகைகள்


மணிக்கட்டுரேகை


மச்சரேகை


தலைரேகை


வேதரேகை


திரிகோணரேகை


அஷ்டகோணரேகை


திரிசூலரேகை

டமரரேகை


வேல்ரேகை


கத்திரேகை

கன்னரேகை


மகரரேகை

தாய்ரேகை


சூலரேகை

பிதுர்ரேகை





ஆயுள்ரேகை


கோவுரேகை

தனரேகை

வித்யாரேகை


வீட்டுரேகை


தனுசுரேகை

குடைரேகை


கோதுமரேகை


சித்திரரேகை


அன்னரேகை


துவஜரேகை




தேவாலயரேகை


செடிரேகை


தடாகரேகை


ரதரேகை


கமலரேகை

பாணரேகை


புஷ்பரேகை


சந்தானரேகை

அலரேகை


கையிலிருக்கப்பட்டகுடையின்ரூபம்


நாற்கோணரேகை


கலசரேகை


தராசுரேகை


எழுத்தாணிரேகை


அஸ்வரேகை


ஆனைதலைரேகை


கிராமச்சின்ன
ரேகை


கஜரேகை


அங்குசரேகை


குண்டலரேகை


பாவலிரேகை


சந்திரரேகை


சங்குரேகை


விஷமசதுர்ரேகை


சூரியரேகை


யோனிரேகை


விரல்சக்கரரேகை


பல்லக்குரேகை


கங்கணரேகை


ஆட்டுதலைரேகை


பர்வதரேகை



நேத்திரரேகை



கெதரேகை



சிறியவிரல் சக்கர ரேகை

நீட்டுகீத்துரேகை



பெருவிரல் சக்கரம் நடுவிரல் கணுவிரலி லிருக்கப்பட்ட எவ ரேகை

நாற்கோணரேகை



ஆள்காட்டிவிரல் சக்கரரேகை

கைவிரல்கணுவிரலி லிருக்கப்பட்ட எவ ரேகை

நீட்டுகீத்துரேகை



உள்ளங்கை இடப்பக்க ரேகை





நடுவிரலி லிருக்கும் சங்கு எவரேகை

நீட்டுகீத்துரேகை





புத்திரரேகை

உள்ளங்கை வலப்பக்கம் ஸ்திரீசின்ன ரேகை



பவுத்திரவிரல் சக்கரரேகை

நீட்டுகீத்துரேகை







ஆயுள்ரேகை

சீபசுவஸ்திகரேகை

சிவமயம்

மானிடர்களின் உள்ளங்கை

# இரேகை சாஸ்திரம்



## கைவிரல்

கையின் சிறுவிரல் அணிவிரல்மட்டும் இருக்கப்பெற்றவனுக்கு வயது-100, அணிவிரல் மேலிறைக்குமே லிருக்கப்பெற்றவனுக்கு வயது-90, மேலிறைக்குச் சரியாயிருக்கப்பெற்றவனுக்கு வயது-80, மேலிறைக்குச் சற்றுகீழிருக்கப்பெற்றவனுக்கு வயது-75, மேலிறைக் கீழிறை ஆகிய இரண்டு நடுவுக்குச் சற்று மேலாக இருக்கப்பெற்றவனுக்கு வயது-70, மேலிறைக்கும் கீழிறைக்கும் கரு நடுவாயிருக்கப் பெற்றவனுக்கு வயது-60, அதற்குச் சற்று கீழிருக்கப்பெற்றவனுக்கு வயது-50, அதிலுந் தாழ்ந்திருக்கப் பெற்றவர்களுக்கெல்லாம் வயது முறையே அற்பமாகும்; கிலேசமுமுண்டு.

## உள்ளங்கை ரேகை

உள்ளங்கைரேகை அற்பமாய் சிவந்து சிறுத்திருக்கப்பெற்றவன் செல்வமும் ஆயுளுமுடையவனு யிருப்பான். கனத்திருக்கப்பெற்றவன் துக்கமுடையவனு யிருப்பான். வலதுகையில் சங்குசக்கரம்போல் இருக்கப்பெற்றவன் மிகுந்த திரவிய வருமானமுள்ளவனும் இரப்பவர்க்குக் கொடுப்பவனுமா யிருப்பான். மச்சரேகை யிருக்கப்பெற்றவன் மிகுந்த செல்வமுடையவனு யிருப்பான். குடைபோ லிருக்கப்பெற்றவன் உதாரகுணமுடையவனு யிருப்பான். தமரகம்போ லிருக்கப்பெற்றவன் புகழுடையவனு யிருப்பான். வாள்போலிருக்கப்பெற்றவன் வீரியவானு யிருப்பான். கும்பம்போ லிருக்கப்பெற்றவன் பொறுமையுடையவனுயிருப்பான். சந்திரன்போலிருக்கப்பெற்றவன் வித்துவானு யிருப்பான். வெண்சாமரம்போ லிருக்கப்பெற்றவன் வெகு ஜனங்களோடு கூடிவாழ்வன். தாமரைப்புஷ்பம்போ லிருக்கப்பெற்றவன் என்னுளும் லக்ஷ்மிவிலாசம் உடையவனு யிருப்பான். மாலைபோலிருக்கப் பெற்றவன் போகபாக்கியத்தோ டிருப்பான். வேல்போலிருக்கப் பெற்றவன் வெற்றியுடையவனு யிருப்பான். இலிங்கம்போல் இருக்கப் பெற்றவன் சிவபத்தி முதலிய தேவதாபக்தி யுடையவனு யிருப்பான். ரிஷபம்போ லிருக்கப்பெற்றவன் வாகனப்ரதிஷ்டை யுடையவனு யிருப்பான். மணிக்கட்டுமுதல் நடுவிரல் நுனிவரைக்கும் ஒருரேகை யிருக்

கப்பெற்றவன் ஞானியாயிருப்பான். அது நடுவிரல் அடியிலே வந்திருக்கப்பெற்றவன் வித்துவானு யிருப்பான். அது சிறுவிரல் அடியிலே வந்திருக்கப்பெற்றவன் செல்வமுடையவனு யிருப்பான். அணிவிரலடியிலே வந்திருக்கப்பெற்றவன் ஆபரணமும் கிலேசமுமுடையவனுயிருப்பான். சுண்டுவிரலடியிலேவந்திருக்கப்பெற்றவன் காமவிகாரியாவான். பெருவிரல் நடுவிலே வந்திருக்கப்பெற்றவன் பல மாதரையணைவான். உள்ளங்கையில் வந்திருக்கப்பெற்றவன் செல்வமும் புத்திர சம்பத்து முடையவனு யிருப்பான். அந்தரேகை யில்லாதிருக்கப்பெற்றவன் மூடனுயிருப்பான். உள்ளங்கை ரேகை பருத்துப் புகை நிறமா யிருக்கப்பெற்றவன் மகா பாவியாவான்.

## விரல்களின் இறை

பெருவிரலின் இரையில் சங்கிலிபோல் ஒருரேகை யிருக்கப்பெற்றவன் பலராலும் தொழப்படுவான். நடுஇறை பிளவாகயிருக்கப்பெற்றவன் வெகுதானிய முடைபவனு யிருப்பான். ஒன்றுயிருக்கப்பெற்றவன் அலேச்சலுடையவனு யிருப்பான். மேல்இறை ஒன்றுயிருக்கப்பெற்றவன் பக்தியுடையவனு யிருப்பான். பலபலவிதமாக இருக்கப்பெற்றவன் கபடுடையவனு யிருப்பான். வலதுகை பெருவிரலின் இறைமேல் வலஞ்சுழி இருக்கப்பெற்றவன் வெகு செல்வமுடையவனு யிருப்பான். இடஞ்சுழி இருக்கப்பெற்றவன் ஆயுள்விர்த்தி யுடையவனு யிருப்பான். மடிப்பிருக்கப்பெற்றவன் வறுமை யுடையவனு யிருப்பான். சுண்டுவிரலின் அடி இறையொன்றுயிருக்கப்பெற்றவன் வறுமை யுடையவனு யிருப்பான். பலவாயிருக்கப்பெற்றவன் வெற்றியுடையவனு யிருப்பான். நடுஇறை ஒன்றுயிருக்கப்பெற்றவன் சிக்கனமுடையவனு யிருப்பான். பலவாயிருக்கப்பெற்றவன் கபடுடையவனு யிருப்பான். மேலிறையின்மேல் வலஞ்சுழி யிருக்கப்பெற்றவன் அதிக சம்பத்துடையவனு யிருப்பான். இடஞ்சுழி யிருக்கப்பெற்றவன் நல்ல புத்தியுடையவனு யிருப்பான். மடிப்பிருக்கப்பெற்றவன் வீண்செலவுடையவனு யிருப்பான். நடுவிரலில் ஒருரேகை யிருக்கப்பெற்றவன் சிக்கனமுள்ளவனு யிருப்பான். பலரேகை இருக்கப்பெற்றவன் விதரண முள்ளவனு யிருப்பான். மேல்இறை யொன்று யிருக்கப்பெற்றவன் வித்தையுள்ளவனு யிருப்பான். பலவாயிருக்கப்பெற்றவன் கபடுள்ளவனு யிருப்பான். மேல்இறையின் மேல் வலஞ்சுழி இருக்கப்பெற்றவன் மந்திரியாவான். இடஞ்சுழி இருக்கப்பெற்றவன் புத்திமானு யிருப்பான். வலதுகையின் நடுவிரல் அடிஇறை யொன்றுயிருக்கப்

பெற்றவன் செல்வவானு யிருப்பான். பலவாயிருக்கப்பெற்றவன் துன்பமுடையவனு யிருப்பான். நடுவிரல் நடுஇறை யொன்ருயிருக்கப் பெற்றவன் வித்தையுடையவனு யிருப்பான். பலவாயிருக்கப்பெற்றவன் ஸ்திரீபோகமுடையவனுயிருப்பான். நடுவிரல் மேலிறையொன்ரு யிருக்கப்பெற்றவன் அற்பபோகமுடையவனு யிருப்பான். பலவா யிருக்கப்பெற்றவன் அதிக போகமுடையவனுயிருப்பான். நடுவிரல் மேலிறைமேல் வலஞ்சுழியிருக்கப்பெற்றவன் சுகபோஜனமுடையவனு யிருப்பான். இடஞ்சுழியிருக்கப்பெற்றவன் சுகபோஜன மில்லாதவனு யிருப்பான். மடிப்பா யிருக்கப்பெற்றவன் வீண்செல வுடையவனு யிருப்பான். வலதுகை அணிவிரல் அடியிறை யொன்ருயிருக்கப்பெற்றவன் போகமுள்ளவனு யிருப்பான். இரண்டாயிருக்கப்பெற்றவன் வெகுபூஷணமுள்ளவனுயிருப்பான். பலவாயிருக்கப்பெற்றவன்வெற்றி யுள்ளவனு யிருப்பான். நடுஇறை யொன்ரு யிருக்கப்பெற்றவன் அலைந்து திரிவான். பலவாயிருக்கப்பெற்றவன் பந்துக்களை இரக்ஷிப்பான். மேலிறை யொன்ருயிருக்கப்பெற்றவன் தேசாந்திரியாவான். பலவாயிருக்கப்பெற்றவன் அதிக காமியாவான். அணிவிரல் மேலிறை மேல் வலஞ்சுழி யிருக்கப்பெற்றவன் யாவரிடத்து முபசாரமுள்ளவனு யிருப்பான். இடஞ்சுழி யிருக்கப்பெற்றவன் அதிக வார்த்தையாடுகிறவனு யிருப்பான். மடிப்பாயிருக்கப்பெற்றவன் கிலேசமுடையவனு யிருப்பான். வலதுகையின் சிறுவிரல் அடியிறை யொன்ருயிருக்கப் பெற்றவன் கபடுடையவனு யிருப்பான். பலவாயிருக்கப்பெற்றவன் விகடகுண முடையவனு யிருப்பான். நடுஇறை யொன்ருயிருக்கப் பெற்றவன் அழகுடையவனு யிருப்பான். பலவாயிருக்கப்பெற்றவன் ஆயுள்விர்த்தியுடையவனு யிருப்பான். மேல்இறை யொன்ருயிருக்கப் பெற்றவன் எடுத்த காரியத்தைச் சாதிப்பவனுயிருப்பான். பலவாயிருக்கப் பெற்றவன் ஏழையாயிருப்பான். மேல்இறை மேல் வலஞ்சுழி யிருக்கப்பெற்றவன் தீர்க்காயுளுடையவனு யிருப்பான். இடஞ்சுழி யிருக்கப்பெற்றவன் பலமுடையவனு யிருப்பான். மடிப்பாயிருக்கப் பெற்றவன் வெகு செலவுடையவனுயிருப்பான். புருஷர்களுக்கு இடதுகையும் ஸ்திரீகளுக்கு வலதுகையும் பார்க்கக்கூடாது. வலதுகையில் ஆறுவிர லிருக்கப்பெற்றவன் மிகுந்த செல்வமுடையவனு யிருப்பான். இடதுகையி லாறுவிரலிருக்கப்பெற்றவன் மிடியுடையவனுயிருப்பான். சிறுவிரலின்கீழே கையோரத்தி லொருரேகை யிருக்கப்பெற்றவன் ஒரு விவாகமுள்ளவனு யிருப்பான். இரண்டுரேகை யிருக்கப்பெற்ற

வன் இரண்டு விவாகமுள்ளவனு யிருப்பான். மூன்றுரேகை யிருக்கப் பெற்றவன் மூன்று விவாகமுள்ளவனுயிருப்பான். நான்குரேகையிருக் கப்பெற்றவன் நான்கு விவாகமுள்ளவனு யிருப்பான். ஐந்துரேகை முதல் விரல் அடி இறையின் கீழ்வரையில் எத்தனைரேகை இருக்கப் பெற்ருனே அத்தனை புத்திரர்களை யுடையவனு யிருப்பான்.

## புறங்கை

புறங்கை மிருதுவா யுயர்ந்திருக்கப்பெற்றவன் செல்வமு மழகு முள்ளவனு யிருப்பான். புறங்கை நரம்பெழுப்பெற்றவன் வறுமை யாளனு யிருப்பான். உரோகமிருக்கப்பெற்றவன் ஈகையற்றவனு யிருப்பான்.

## கைநகம்

கைவிரல்நகம் மிருதுவா யிருக்கப்பெற்றவன் செல்வமுடையவனு யிருப்பான். உரமாயிருக்கப்பெற்றவன் காமவிகாரமுடையவனு யிருப் பான். சிவந்திருக்கப் பெற்றவன் செல்வமுடையவனு யிருப்பான். வெளுத்திருக்கப்பெற்றவன் வறுமையுடையவனுயிருப்பான். விரல்கள் மெல்லியதா யிருக்கப்பெற்றவன் அழகும் ஆயுள்விர்த்தியுமுடையவனு யிருப்பான். பருத்திருக்கப்பெற்றவன் திடவானுயிருப்பான். நீண் டிருக்கப்பெற்றவன் குணவானு யிருப்பான். குறுகியிருக்கப்பெற்றவன் வறுமையுடையவனு யிருப்பான்.

## முழங்கை

முழங்கை பருத்திருக்கப்பெற்றவன் செல்வமுங் கபடுமுடைய வனுயிருப்பான். சிறுத்திருக்கப்பேற்றவன் வறுமையுடையவனு யிருப் பான். நரம்புதோன்றி யிருக்கப்பெற்றவன் துக்கமுடையவனு யிருப் பான். எலும்பெழுப்பெற்றவன் வறுமையுடயவனு யிருப்பான். முழங்கைச்சந்தில் வலஞ்சுழி யிருக்கப்பெற்றவன் விதரணவானு யிருப் பான். இடஞ்சுழியிருக்கப்பெற்றவன் உலுத்தனுயிருப்பான். முழங்கை மயிர் சிறுத்துக் கறுத்திருக்கப்பெற்றவன் எந்நேரமும் பெண்போக முடையவனு யிருப்பான். சூழ்ந்திருக்கப்பெற்றவன் வறுமையுடைய வனு யிருப்பான். பருத்திருக்கப்பெற்றவன் பலமுடையவனு யிருப் பான். முழங்கைக்குமேல் தோள்வரையில் மயிரில்லாதிருக்கப் பெற்ற வன் அழகுடையவனு யிருப்பான். மயிரிருக்கப்பெற்றவன் வறுமையும் விதரணமும் உடையவனு யிருப்பான்.

---

# இராமதேவர் சோதிடம்

## 310



உரையாசிரியர்:

செஞ்சி. ஏகாம்பர முதலியார்.





உ

சிவமயம்

பதினேண் சித்தர்களில் ஒருவராகிய

# இராமதேவர் சோதிடம்-310

## மூலமும் - உரையும்

---

### காப்பு

ஆதியந்தமி லாதவன் பொன்னடி
ஆதியம்பிகை வாலே மலரடி
ஆதிவாரண மாமுகன் சேவடி
ஆதிசோதிடத் தாதர வாகுமே.

### பேற்குறி

இரட்டைக் கலிவிருத்தம்

ஆகவேத வியாசன் பராசரன்
அத்திரிசன்மன் வசிட்டன் மரீசியும்
வேகத் தூருவாசன் கௌசிகன்
வேந்தரிஷிமனு நாரதன் காசிபன்
போதபௌலகன் சௌனன் பிருகுவோடு
போந்தகலசன் காலாங்கி ஜெனகரும்
வாகுசேர் கையிலாய வரையிலே
வந்தசேதி விளம்பிடக் கேளுமே.

வந்தமானிடர் வாழ்க்கை யெளிதிலே
வாட்டுங்கிரக கோட்பாடுகள் மேவினால்
எவ்விதஞ் சகித்தேலுவா ராகையால்
யெட்டொருபேரு மியற்றுந் தொழிலினை
சந்திரன்றன்னை முடித்த பரன்முதல்
சாற்றியமூன்றொரு லட்ச நாலாயிரம்

இந்தமட்டுமச் சங்கர ஜோசியம்
யின்னனங்கயிலேவிட் டேகவு மில்லையே. 2

இல்லையென்றரு மீஸ்வரியாளுடன்
யீசர்வாக்கியமேந்தி யோர்லட்சத்தில்
தொல்லையாவுந்தொகுத்து விபரமே
தோற்றும்பத்தெண்மருந் தோயவளித்திட
வல்லஞானவளநேர் குரவர்கள்
வாழ்த்தியென்னைசொல் வணங்கியேபோற்றியே
புல்லுமானிடர் போக்கையவரவர்
போகவுணரப் புகன்றதுறவிதே. 3

திறவுகோலெனச்சொன் னேநிராமனென்
ஜோசியநுட்பமுன் னூற்றெருபத்தோ
டுறவுரோம ருரைத்தவாக்கியம்
முண்மையாமிரு நூற்றியொருபதும்
வரவுபரல்தொகை யாய்ந்துபங்குபோல்
வையத்தோர்க்குயிம் மெய்ம்மொழிபேசிடில்
இரவிதிங்களு முள்ளமட்டுன்னையே
யீசனென்று யிசைந்துபணிவரே. 4

---



உ

சிவமயம்

முதலாவது

# கிரகனிலை-II

விருத்தம்

ஆதியினில்வேதன்முன் னன்பாய்ச்சொன்ன
அருமறையின்பொருளான ஜோசியத்தை
ஜாதியினில்மறவனும் ராமன்வாக்கியந்
தவருமல்சற்குருவின் பாதம்போற்றி
சோதியினில்ஜெகச்சோதி சோதியான
ஜோதிஷமாம்நவக்கிரக ராசியப்பா
நீதியினில்நீடுலகில் நன்மைதீமை
நேர்நிறைகள்சொல்லுதற்கு யிந்நூல்பாரே.

(இதன்பொருள்) ஆதியில் வேதநாயகனான பிரமதேவர் சொன்ன அருமறையின் பொருளாய் விளங்கும் ஜோசியத்தை ஜாதியில் மறவனாக விளங்கும் இராமதேவரின் வாக்கியம் தவருமற்படிக்கு சற்குருவின் பாதகமலங்களைப்போற்றி சோதியில் ஜெகசோதியான ஜோசியமாகிய நவக்கிரகமும் இராசியும் பார்த்து நீடுலகின்கண் நன்மை தீமைகளை யறிந்து நேர்நிறையாகப் பார்ப்பதற்கு இந்நூல் பாரும்—என்றவாறு. 1

பாரேநீஜோசியநூல் பாடல்சூட்சம்
பற்றிகொண்டுநிற்கனிலை ராசிப்பார்த்து
நேரேநீசொல்லுவதால் நன்மையாகும்
நீடுலகிலிந்நூலை வெளியிட்டாக்கால்
சீரேநீமதிமறந்து பேய்போலாவாய்
திறமாகநவக்கிரக நிலையைப்பார்த்து
கூரேநீகுருபதத்தை வணங்கிப்போற்றி
குணமாகராசியதைக் குறிப்பாய்ச்சொல்லே.

இ-ள். இச்சோதிடநூலாகிய பாடல் பதினொன்றையும், பக்தி யோடு கண்டு உணர்ந்து இராசி பனிரெண்டினையும் பார்த்து ஒருவர் களுக்குப் பலாபலன்களைச் சொல்வதால் நன்மையுண்டாகும். இந்தக் கடல்சூழ் உலகின்கண் இந்நூலை வெளியிடில் மதியானது மறந்து

பேய்போல் அலையச்செய்யும், அன்றியும் திறமையோடு நவக்கிரகங்களின் நிலைகளைப் பார்த்தும் குருவினுடைய பாதகமலங்களை வணங்கிப்போற்றி இராசிகளைப் பார்த்து பலாபலன்களைக் குறிப்போடு சொல்லவேண்டும் எ-று. 2

சொல்லுமையராசிதனக் கைந்தில்பத்தில்
சோமவான்செய்நிற்கில் மாமனுக்காகா
புல்லுவாய்சனிநிற்கில் பிள்ளைக்காகா
பொல்லாதசசிநிற்கில் மாதுர்க்காகா
சொல்லுதையரவிநிற்கிற் பிதாவின்துஞ்சம்
சேர்ந்துநின்றரவிமோச னேழுக்கப்பால்
கொல்லுகின்றசனிசெவ்வாய் நிற்பாராகிற்
குருபாராத்தந்தைதாய் மரணமாமே.

இ-ள். உதையவிராசியாகிய இலக்கினத்திற்கு 5-ஆமிடம் 10-ஆமிடம் இவைகளின் சந்திரன் செவ்வா யிவர்களிருக்கச் சாதகமாகில் மாமனுக்கு ஆகாவாம். சனிநிற்பானுகில் சாதகமான குழவிக்காகாவாம். சந்திரநிற்கில் தாயாருக் காகாவாம். உதையவிராசியிற் சூரியனிருக்க தகப்பனுக்காகாவாம். சூரியன் சந்திரன் இவர்கள்நின்ற விராசிக்கு 7-ஆமிடத்திற் சனி செவ்வாய் இவர்கள்நிற்க அவரைக் குரு பாராதிருக்கத் தந்தையுந் தாயும் மரணமாவார்கள் எ-று. 3

ஆமுதையராசிதனக் காறில்சூரியன்
அதற்கேழில்சனிசெவ்வா யமைப்பேயானல்
போமுயிரும்பிள்ளைதனக் காறில்சோமன்
பொருந்தேழில்சனிசெவ்வா யமைப்பேயானல்
தாமதமாய்பிள்ளையுந்தான் உதையராசி
சனிநின்றுஅதற்குநால் செவ்வாய்நிற்கி
னும்பிதாமரணம்ஜென் மத்திற்கப்பால்
நலமானகிரகம்நிற்கில் பிள்ளைசாமே.

இ-ள். உதையவிராசிக்கு 6-ஆமிடத்தில் சூரியனிருக்க அதற்கு 7-ஆமிடத்தில் சனி செவ்வாய் இவர்களிருக்க சாதகமான குழவி மரணமாகும். 6-ஆமிடத்தில் சந்திரனிருக்க அவர்க்கேழில் சனி செவ்வாய் இவர்களிருக்க பிள்ளை மரணமாகும். உதையவிராசியில் சனிநிற்க சனிக்கு 4-ஆமிடத்தில் செவ்வாய்நிற்க தகப்பன் மரணமாகுவன். ஜென்மராசிக்கப்பால் நன்மையாகிக் கிரகங்கள் நிற்கச் சாதகமான குழவியானது மரணமாகுமெனக் காண்கவும் எ-று. 4

பிள்ளைராசிக்குமூன் றதிலேசெவ்வாய்
பெரியசகோதரமரணம் பொல்லாதென்னக்
கொல்லுசனிசெவ்வாய்தா னிற்குமாகில்
குழந்தைசாம்சசியேழில் நிற்பானுகில்

வெல்லுகின்றமாதாதான் மரணம்சூரியன்
மேவுமதில்பிதாவாகா கடகராசிமூன்றில்
சொல்லுமப்பால்கிரகம்நிற்க பன்னிரண்டில்
செம்மைசுபக்கிரகம்நிற்கில் பிள்ளைசாமே.

இ-ள். புத்திரஸ்தானமாகிய 5-ஆமிடத்திற்கு 3-ஆமிடத்தில் செவ்வாய்நிற்க ஜாதகமானவனுடைய பெரியசகோதரன் மரணமாகுவன். மேற்கூறிய விராசியில் சனி செவ்வா யிவர்கள்நிற்க சாதகமான குழந்தை சாகும். சந்திரன் 7-ஆமிடத்தில் நிற்கில் சாதகனுடைய தாயார் மரணமாகுவள். அந்த ஏழாமிடத்தில் சூரியன்நிற்க தகப்பன் மரணமாகுவன். கடகவிராசிக்கு 3-ஆமிடத்திற்கப்பால் கிரகங்கள் நிற்கினும் 12-ஆமிடத்தில் சுபக்கிரகங்கள் நிற்கப் பிறந்த பிள்ளையானது சாகும் எ-று. 5

சாமென்றராசிதனக் காறேழெட்டில்
சரமானபன்னிரண்டில் சந்திரன்யேகில்
போமென்றுஉயிர்போகும் ரவிசோமனிற்கில்
பொருந்திரண்டுதிருஷ்டியும் போம்ஒருவர்நிற்கில்
தாமென்றவோர்திருஷ்டி நீங்கிப்போகும்
சந்திரனுமொன்பதிலே பாம்புநிற்க
ஆமென்றதாய்மரணம் அஷ்டமத்தில்
ஆனசனிசேய்நிற்கில் பிள்ளைசாமே.

இ-ள். 8-ஆமிடத்திற்கு 6-7-8-லும் 12-ஆமிடத்திலும் சந்திரன் ஏறிநிற்கில் மரணம் சம்பவிக்கும், சூரியன் சந்திரன் இவர்கள் நிற்கில் இரண்டுகண்ணும் குருடாகப்போகும். இவர்களில் ஒருவர் நிற்கில் ஒருகண் குருடாகப்போகும். சந்திரன்நின்ற விராசிக்கு 9-ஆமிடத்தில் இராகுகேது இவர்களில் ஒருவர்நிற்க தாயார் மரணமாகுவள். அஷ்டமஸ்தானமாகிய 8-ஆமிடத்தில் சனி செவ்வாய் இவர்கள் நிற்கச் சாதகமான குழந்தையானது மரணமாகுமென்றனர் எ-று. 6

புனர்பூசம்சித்திரைபூ ராடமிந்த
புகழ்நாளில்சசிநிற்கில் ராசிசெவ்வாய்
நலமாகநிற்கிலந்த பிதாவுக்காகா
நன்மையிரண்டாங்காலில் மாதாவுக்காகா
குணமானமூன்றாங்கால் பிள்ளைக்காகா
கொடுமையுள்ளநாலாங்கா லம்மானுக்காகா
சலமானபதினொன்றோன் பதிலுமையா
சனிசெவ்வாய்பாம்புநிற்கில் தவறிப்போகும்.

இ-ள். புனர்பூசம்-சித்திரை-பூராடம் இந்த நட்சத்திரநாளில் சந்திரன் நிற்க உதையவிராசியில் அங்காரகன் நிற்க ஜாதகனுடைய தகப்பனுக்காகாவாம். மேற்கூறிய நட்சத்திரத்தில் இரண்டாங்காலில்

நிற்கில் தாயாருக்காகாவாம். மூன்ருங்காலாகிற் பிள்ளைக்காகாவாம். நான்காங்காலாகில் அம்மானுக்காவாம். 11-9 இந்த ஸ்தானங்களில் சனி செவ்வாய் இராகுகேது இவர்கள்நிற்க மேற்கூறிய கண்டந் தவறிப்போகும் எ-று. 7

போதமொடுரவிக்கேழி லாறில்வுச்சம்நிற்க
புனிதமுடன்சிங்கத்தில் பிறந்தோன்ராஜா
நீதமோடைந்துகோ ளுச்சம்வியாழம்
நின்றதனல்தீர்க்கமுள்ள மன்னனுவான்
பாதமொடுநாலுகோ ளுச்சங்கும்பம்
பதிவாலுல்பரராஜ சிங்கமாவான்
சாதமொடுநவக்கிரக ராசிதன்னைப்பார்த்து
தவருமற்சொல்வது சாதகமுமாமே.

இ-ள். சூரியன்நின்ற விராசிக்கு 7-ஆமிராசியிலும் ஆருமிராசியிலும் உச்சக்கிரகங்கள்நிற்க சிம்பவிராசி இலக்கினமாகப் பிறந்தோன் இராஜனுகுவன். ஐந்துக்கிரகங்கள் உச்சமாக வியாழன் நிற்க தீர்க்காயுளுள்ள மன்னவனுகுவன். நாலுக்கிரகங்கள் உச்சமாகவிருக்க கும்பம் இலக்கினமாகப் பரராஜசிங்கமாகுவன். கிரகங்களின் நிலையும் இராசியும் பார்த்துச்சொல்வது ஜாதகமாகுமென்பர் எ-று. 8

ஆம்கடகம்வியாழமதே யுதையமாக
ஆதித்தன்மேஷமதி லுதையமாக
போம்வெள்ளிபுதனோடு பத்தில்நிற்க
புதல்வன்பிறந்திடிலவனும் சித்தனுவான்
தாம்சசியிடபத்தில் ரவிசிங்கத்தில்
தருவானகுருதனுசில் கசிந்துநிற்க
நாம்புகரில்வுதையமதாய் வியாழங்காலில்
நன்ருகசெனித்தவனு மரசனுமே.

இ-ள். கடகவிராசியில் வியாழன் உதையமாகநிற்கச் சூரியன் மேஷவிராசியிலிருக்க சுக்கிரன் புதனுடன்கூடி 10-ஆமிடத்திலிருக்கச் சாதகமானவன் சித்தனுகுவன். சந்திரன் ரிஷபவிராசியிலிருக்க சூரியன் சிங்கத்திலிருக்க வியாழன் தனுசுவிராசியில்நிற்க சுக்கிரனுடைய விராசியில் உதையமாக வியாழனுடையகாலில் பிறந்தஜாதகன் அரசனுகுவனென்பர் எ-று. 9

அரசனுஞ்சனிமகரத் தமர்ந்துநிற்க
ஆனசெவ்வாய்மேஷத்தி லமர்ந்துநிற்க
சரமானசந்திரன்கர்க் கடகமெல்லாம்
தயவானவெள்ளிதுலாந் தன்னில்நிற்க
பரமானகுருதனுசில் பத்தில்நிற்க
பகலவனும்சிங்கத்தில் பதிவாய்நிற்க

சிரமானபுதன்மிதுனந் தன்னில்நிற்க
சேய்பிறக்கவரசனும் தீர்க்கமாமே.

இ-ள். சனி மகரவிராசியிலிருக்க செவ்வாய் மேஷவிராசியிலிருக்க சந்திரன் கர்க்கடகவிராசியிலிருக்க சுக்கிரன் துலாமிராசியிலிருக்க வியாழன் தனுசுவிராசியினும் 10-ஆமிடத்திலுமிருக்க சூரியன் சிங்கவிராசியிலிருக்க புதன் மிதுனவிராசியிலிருக்கச் சாதகமானவன் அரசனுகுவன் தீர்க்கமுடையோன் எ-று. 10

ஆமென்றகிரகநிலை ரவிபுதன்வெள்ளி
அமர்ந்திடுவர் ஒருராசியதனிலோர்மாதம்
போமென்றமதிநுளும் ரெண்டேகாலாகும்
புத்தியுள்ளமாதமொன் றரைதான்செவ்வாய்
தாமென்றசனியாண் டிரண்டரையால்நிற்குந்
நயவானவியாழமது வருடமொன்று
நாமென்றராகுகேதாண் டொன்றரையாம்
நடுவானகிரகநிலை நவைறியமுற்றே.

இ-ள். கிரகங்களின் நிலையாவது சூரியன் புதன் சுக்கிரன் இவர்கள் இராசியொன்றுக்கு ஒருமாதம் நிற்பார்கள். சந்திரன் இராசியொன்றுக்கு இரண்டேகால்நாள் நிற்பன். இராசி ஒன்றுக்கு ஒண்ணரைமாதமாகச் செவ்வாய் நிற்பன். சனி இராசியொன்றுக்கு இரண்டரைவருடமாகநிற்பன். வியாழம் இராசியொன்றுக்கு ஒருவருடமாக நிற்பன். இராகுகேது இவர்கள் இராசி ஒன்றுக்கு ஒண்ணரை வருடமாக நிற்பர். இவ்விதமாக கிரகநிலை காண்கவும் எ-று. 11

## கிரகநிலை - 11

முற்றிற்று.

---



சிவமயம்

## இரண்டாவது

# கிரகலக்கின சாதகம்—12

கிரகமென்றயீராறு வீட்டினுள்ளே
　கெணித்திருந்தலக்கினத்திற் செல்லுபோக
கிரகமெனுமிக்காழிகையைப்பார்த்து
　விந்துவென்பரல்பார்த்து விரைந்தேபேசு
சரகமெனும்லக்கினத்தில் கேதுவீட்டில்
　சரத்திரமேபார்வையெனச் சமையஞ்சொல்லு
அரகராயிப்படியே செல்லுபோக
　அமர்ந்திருந்தநாழிகையைப் பரலாய்ப்போடே.

இ-ள். இராசி பனிரெண்டிற்குள்ளே கெணிதஞ்செய்த இலக்கினத்திற் செல்லானதுபோக மிச்சமாக நின்ற நாழிகையைப்பார்த்து விந்துவென்னும் பரலைப் பார்த்துச் சொல்லவேண்டும். இலக்கினத்தினும் கேதுவினுடைய ஆட்சிவீட்டினும் சரத்திரமும் பார்வைகளும் பார்த்து பலன் சொல்லவும். இவ்வாருகச் செல்லானது போக நின்ற நாழிகையதனைப் பரலாகப் போடவும் எ-று. 1

போட்டப்பாசென்ற நாழிகையில்மிச்சம்
　பொருத்தமோர்நாழிகைக்குள் பிரபலத்தாமென்று
வீட்டப்பாயெதிரிந்த வீடதனிலேதான்
　வீட்டிலுள்ளபரலதனைநீ விரும்பிநன்றாய்க்
கூட்டப்பாசேர்ந்துநன்றாய்க் கூர்ந்துபார்த்து
　கூர்மையதால்தானெடுத்துக் கூட்டிமாட்டு
நாட்டப்பாவுலகமதில் சுகவிந்தாக
　நாட்டியதோர்லக்கினத்தில் சிலநாள்நாட்டே.

இ-ள். சென்றநாழிகையதனில் மிச்சம் பொருத்த நாழிகையதனில் பிரபலமாவதொன்றாகும். இதற்கு எதிராக விளங்கும் வீடதனிலுள்ள பரல்களை நன்றாகக் கண்டுணர்ந்து கூட்டி ஒன்றாகச் சேர்த்துப் பார்த்து பத்தியினால் உணர்ந்து எடுத்துக்கூட்டி மாட்டியும் உலகின்கண் சுகவிந்தாகக் குறித்த லக்கினத்தில் சிலநாள் நாட்டவும் எ-று. 2

நாட்டப்பாயிப்படிக்குச் சிலநாள்விந்தாய்
　நாழிகைக்குவோர்பரலாய் நன்றாநாட்டுக்
கூட்டப்பாயெதிர்த்ததொரு திசைவீடெங்கும்
　கூட்டியெடுப்பரலதனில் செல்லுபோக

போட்டப்பாவெண்ணிப்பார் நாலுக்கப்பால்
போட்டெடுத்தபரலதனில் போகமிச்சம்.
கோட்டப்பாநடுவீட்டில் வைத்துவெண்ணிக்
கொண்டவிந்தைமண்டலத்திற் கொள்கைசொல்லே.

இ-ள். நாட்டமாகவும் இவ்வாறாகச் சிலநாள் விந்தாய் நாழிகை யொன்றுக்கு ஒருபரலாக நாட்டிக் கூட்டி எதிர்த்த திசைவீடுகளெங் கும் கூட்டி அப்பரல்களில் செல்லானதுபோக எண்ணிப்பார்க்க நாலுக் கப்பால் போட்டெடுத்த பரலில் போக மிச்சம் அதைக்கண்டு நடுவீட் டில் வைத்து யெண்ணிக்கண்ட விந்தை ஒருமண்டலத்தின் கொள்கை யாகச் சொல்லவும் எ-று. 3

சொல்லப்பாசெல்லுபோக மிச்சம்பார்த்து
சொல்லிவிடுஅனுகூல னாலுக்கப்பால்
நல்லப்பாமிச்சவிந்து ஆறுக்கப்பால்
நராதிபதியாகவும்நீ நன்றாய்ப்பேசு
மெல்லப்பாமந்தகெதிக் கிவைபுரைத்தால்
மேதினியிற்செகசண்டி மேன்மைகெட்டோன்
அல்லப்பாபோயதனி லிப்படியுற்றாலும்
அசடனிவன்பொய்யில்மிச்சம் அசுத்தவானே.

இ-ள். மேற்சொல்லியபடி செல்லானதுபோக மிச்சத்தைப் பார்த்து சொல்லவேண்டுவது அனுகூலம். நாலுக்கப்பாலும் மிச்ச விந்தாவது ஆறுக்கப்பாலும் நராதிபதி யாகுமெனப் பேசவும். இவை களை மந்தகெதிக்கு உரைக்கில் பூமியின்கண் செகசண்டியும் மேன்மை கெட்டோனுமாகும். அல்லது போயதனில் இவ்வாறாகயுற்றிடில் அசடனாகவும் பொய்யில் மிச்சமுடையோனுமாய் அசுத்தவானாகு மென்பர் எ-று. 4

சொல்லப்பாயிவையறிந்து சூட்சம்பார்த்து
சொல்லிவிடுவிந்துமயம் சொல்லொண்ணாது
மெல்லப்பாஅடக்கம்வைக்க ரெண்டுமூன்று
மேதினியிலுரைப்பதற்கு வேண்டாங்கேடு
வெல்லப்பாசெவ்வாயி லாறைந்தாகில்
வேசியெனச்சொல்லிவிடு களத்திரகாரம்
சில்லப்பாதெறிபட்டு யெடுபட்டோடும்
சிவசிவாரெண்டதுவு மங்களத்திற்பேசே.

இ-ள். சொல்லவேண்டியது யாதெனில், இவைகளை அறிந்தும் சூட்சம்பார்த்து,சொல்லிவிடுவது விந்துவின் பயனாகும். அது சொல்ல வொண்ணாது. ஆகினும் அடக்கம் வைத்து இரண்டு மூன்று இவை களை பூமியின்மீது உரைப்பதுவும் கேடாகும். செவ்வாயில் ஆறு

ஐந்தாகில் வேசியன் களத்திரம் வாய்க்கும் தெறிப்பட்டும் யெடுப் பட்டும் ஓடும் இரண்டுக்கும் செவ்வாயில் பேசவேண்டும் எ-று. 5

வெள்ளிதனில்நாலாறுக் கதிகமுற்றால்
மேதினியில்வேந்தனுக்கு வேந்தனுவான்
உள்ளிதனில்பொய்யோனு மந்தன்சேரி
லுறுதியில்லைகெட்டதரித் திரங்கள்சேரும்
தள்ளதிலேசெல்போக மிச்சம்பார்த்து
சந்திரனில்நாலுக்கதிக மிச்சமாகிற்
கொள்ளிதிலேநல்லவனிலச் சேர்க்கையாலே
கோள்களையுமமைத்தல்செய்வான் குணக்கேடில்லான்.

இ-ள். சுக்கிரனுடைய விந்துவில் 4-6-க் கதிகமுற்றிடில் பூமியின்மீது அரசனுக்கு அரசனுகவிருப்பன். உள்ளத்தினில் பொய்யோனுகும். மந்தனுஞ் சேர்ந்திருக்கில் பலனில்லை, கெட்டதரித்திர மனுகும். தள்ளிய அதில் செல்லானதுபோக மிச்சமாக நின்றதைப் பார்த்துச் சந்திரனுடைய விந்தில் நாலுக்கதிக மிச்சமாகில் கொண்டமாதுவினுடைய நன்மையாலும் கிரகங்களின் துன்பங்களை யமைத்து கேடில்லாதவனுக்கும் எ-று. 6

இல்லாண்மைக்குள்ளவனை மைந்தன்விந்து
யெழுத்தாகவுலகமதி லிரந்துண்பானும்
சொல்லாண்மைக்குள்ளடக்கி அடக்கம்வேண்டாம்
சொல்லிவிடுஇரவலாய்ச் சொல்லுசொல்லு
வல்லாண்மைக்குடையகே தாறெழுந்தால்
வணக்கணமைகோளுரைத்து வாழ்வன்மெய்யாய்
நல்லாண்மையாயுரைத்துப் பரலைப்போட்டு
நலம்பெறவேசோசியத்தை நாட்டுநாட்டே.

இ-ள். இல்லாண்மைக்குள்ளவனுகிய மைந்தனுடையவிந்து பிரமதேவனுடைய எழுத்தைப்போல் உலகமீதில் இரந்துண்ணச் செய்கும். செல்லாண்மையை அடக்கிவைக்காமல் சொல்லவேண்டும். இரவலனுகுவன். வல்லாண்மையையுடைய கேதுவின் விந்தெழும்பில் வணக்கமுடன் நன்மையாகக் கோள்களுரைத்து வாழ்குவன். மெய்யதாகவும் வல்லாண்மையாக வுரைத்துப் பரலைப்போட்டு யாவர்களுக்கும் நலம் பெரும்படிச் சோசியத்தை நாட்டவேணும் எ-று. 7

நாட்டப்பாகதிரவன்தான் வீட்டிலேதான்
நாலுவிந்துக்கப்பாலே யுயர்ந்தேநிற்கில்
போட்டப்பாதான்பார்த்து கெணித்துபேசப்
பொல்லாதகொடியயிடி கடன்காரற்கு

தோட்டப்பாதானழைத்துக் கொடுக்கமாட்டான்
தேகமதைசுயமரண மாகவேதான்
நாட்டப்பாஉலகமதில் நாவிபோட்டு
நாட்டிவிடுமரணமென்று நாட்டுநாட்டே.

இ-ள். சூரியனுடைய வீட்டில் நாலுவிந்துக்கப்பால் உயர்ந்து நிற்கில் பார்த்துக் கணிதமானதுபேசப் பொல்லாதகொடிய இடிபோற் போகும். கடன்காரர்களுக்கு தானக அழைத்துக் கடனைக்கொடுக்க மாட்டான். தேகத்தைச் சுயமரணமாகவும் உலகத்தின்மீது விடுகுவா னென வாராய்ந்து மரணஞ் சொல்லவும் எ-று. 8

புந்திதனில்மூன்றதுக்குள் மேலேநிற்கில்
பூதலத்தில்மன்னவன்தன் பிள்ளையாகில்
நிந்தனைக்காளாவதல்லால் வாழ்வனென்று
நிச்சயந்தான்ஒண்ணாது நிசமாம்பேச்சு
சிந்தனைக்குள்வாமமுண்டு லாகிரியாலே
சிரிக்கவுமாளாகவல்லான் சிலநாள்பின்னும்
வந்தனையால்சூகமதாய் விழுந்துசாக
வல்லவனென்றுரைத்துவிடு வயதீரெட்டே.

இ-ள். புதனுடைய விந்துவிற்கு மூன்றுக்குள் மேலாகவிருக்கிற் பூவுலகின்கண் மன்னவன் தன் பிள்ளையாகியும் நிந்தனைக்காளாகி வாழ் வதுமன்றி நிச்சயமாகப் பேசும்படியாகச் சிந்தனையும் வாமமிவைக ளுண்டு. லாகிரியினுலேயும் யாவரும் சிரிக்கும்படி யாளாகுவன். சில நாட்களுக்குப் பின்பு சூகமதில் விழுந்துசாகுவன். வல்லவனாகும். இவன் தனக்கு வயது பதினாறாகும் எனக் கண்டு உரைசெய்க வேண்டும் எ-று. 9

இப்படியேபரல்போட்டுக் கணிதம்பார்த்து
யியல்புமரணங்களோடு நயமாயுள்ள
மிப்படியேசெல்லுபோக மிச்சம்பார்த்து
மேதினியில்மேன்மையனு கூலம்பேசு
தப்படியில்லாமல்நன்றாய்த் தொகைவிடாமல்
தனித்தனியேபரல்பிரித்து சேர்த்துப்பார்த்து
துப்படியேயெதிர்விட்டு சேர்க்கைப்பார்த்து
துயர்ச்சையுள்ளசமயவிந்தை துடங்கிப்பேசே.

இ-ள். இவ்விதமாகப் பரலைப்போட்டுக் கணிதத்தை நன்றாகப் பார்த்து இயல்பு மரணங்கள் நயமாயுள்ளதை இப்படியே செல்லானது போக மிச்சத்தைப்பார்த்து பூமியின்மீது சாதகர்க்கு மேன்மையாக அனுகூலப்படும்படியாக பேசுவதுமன்றியும தப்புகளில்லாமல் நன்

றுய்த் தொகையைவிடாமல் தனித்தனியாகப் பரல்களைப் பிரித்துச் சேர்த்துப்பார்த்து எதிர்வீட்டுச் சேர்க்கையும் பார்த்துச் சமயவிந்தைக் கொண்டு பேசவும் எ-று. 10

இந்தவிதப்பரல்போட்டுக் கணிதம்பார்த்து
மியல்பு அபஜயங்கள்ரண்டு மெடுத்துப்பேசு
கந்தவிதமல்க்கினத்தில் சுபவிந்தேதான்
சொல்லுமிந்தநாலிதற்கு வதிகமுற்றால்
எந்தவிதக்கோளாலு மெடுப்படாது
யென்னசொல்வேன்பரல்சூட்ச மியம்பொணாது
முந்தவிதமயர்ந்துபற்றும் தெரிந்தாயானால்
முடிவாகும்சோசியத்தின் வடிவங்காணே.

இ-ள். மேற்கண்டவிதம் பரல்களைப்போட்டுக் கணிதங்களைப் பார்த்து அபஜெயம் ஜெயம் இவைகளிரண்டையும் எடுத்துப் பேசுவதற்கு சுத்தமாகிய லக்கினத்தில் சுபவிந்துகள் தான் பேசி நாலுக்கு அதிகமுற்றிடில் எவ்விதக்கிரகங்களாகினும் எடுபடாதாகும். பரல்களினுடைய சூட்சஞ்சொல்லவொண்ணாது. இவ்விதமாக அயர்ந்து பற்றியதையும் தெரிந்தானாகில் முடிவாகச் சோதிடநூலின் வடிவங் காணலாம் எ-று. 11

காணப்பாயிப்படியே சோசியத்தைநீயுங்
காண்பதற்குப்பரலதனில் காரணங்களெல்லாம்
வீணப்பாபோகாமல் நன்றாய்ச்சொன்னோம்
வீட்டிலுள்ளபரல்களெல்லாம் விரும்பிப்பாரு
பேணப்பாபரல்பதிகம் பத்தும்போதும்
பேராசையுற்றவர்க்கு ஐம்பதும்போதும்
தோணப்பாவுரைத்துவிட்டோம் நன்றாய்ப்பார்த்து
தொல்லுலகில்சோசியத்தைச் சொல்லிவெல்லே.

இ-ள். இவ்விதமாகச் சோசியத்தைப் பார்த்துக் கண்டு உணர்ந்து காண்பதற்குப் பரல்களில் காரணங்கள் யாவும் வீணாகப் போகாமற்படிக்கு நன்றாகச் சொல்லிவிட்டோம். பனிரெண்டு வீட்டிலுள்ள பரல்களை நன்றாகப்பார்த்து பரலின்பதிகம் பத்தும் போதுமாகவடிந்து அதிக பேராசை யுள்ளவர்களுக்கு ஐம்பதும் போதுமாகவும் நன்மையாகவுரைத்து விட்டோம். அதனை நன்றாகப் பார்த்து பூமியின்மீது சோசியத்தைச் சொல்லவும் எ-று. 12

## கிரகலக்கின சாதகம்-12

முற்றிற்று.

---

## நட்பு-ஆட்சி-உச்சம்-பகை-நீசம் அறியும்படியான சக்கரம்

| இராசி | சூரிய | சந்தி | செவ் | புத | குரு | சுக்கி | சனி | ராகு | கேது |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| மேஷம் | உச்ச | நட்பு | ஆட் | நட்பு | நட்பு | நட்பு | நீசம் | பகை | ஆட் |
| ரிஷபம் | பகை | உச்ச | பகை | பகை | பகை | ஆட் | பகை | நீசம் | நீசம் |
| மிதுன | பகை | பகை | நட்பு | ஆட் | நட்பு | பகை | நட்பு | நட்பு | நட்பு |
| கடகம் | நட்பு | ஆட் | நீசம் | பகை | உச்ச | பகை | பகை | பகை | பகை |
| சிங்கம் | ஆட் | பகை | நட்பு | நட்பு | பகை | பகை | நட்பு | பகை | பகை |
| கன்னி | பகை | நட்பு | பகை | ஆ-உ | பகை | நீசம் | பகை | பகை | பகை |
| துலாம் | நீசம் | பகை | நட்பு | நட்பு | பகை | ஆட் | உச்ச | நட்பு | நட்பு |
| விருச்சி | பகை | நீசம் | ஆட் | பகை | நட்பு | பகை | நட்பு | உச்ச | உச்ச |
| தனுசு | நட்பு | நட்பு | பகை | பகை | ஆட் | நட்பு | பகை | பகை | பகை |
| மகரம் | பகை | பகை | உச்ச | நட்பு | நீசம் | பகை | ஆட் | ஆட் | நட்பு |
| கும்பம் | நட்பு | பகை | பகை | பகை | நட்பு | நட்பு | ஆட் | பகை | பகை |
| மீனம் | நட்பு | பகை | நட்பு | நீசம் | ஆட் | உச்ச | பகை | நட்பு | நட்பு |

## மூன்றாவது

# இ ர க ரா சி

## நட்பு-ஆட்சி-உச்சம்-பகை-நீசம்-12

### மேடம்

வெள்ளியும்புதனும்நட்பு விளங்கியசெவ்வாயாட்சி
ஒள்ளியகதிரோனுச்ச முயர்சனிநீசமாகுந்
தெள்ளியமதியோன்பொன்னன் சீரியராகுகேது
உள்ளுரும்பகையென்றே வோதினேம்மேடத்தோர்க்கே.

இ-ள். மேஷவிராசிக்கு சுக்கிரனும் புதனும் நட்பாகும், செவ்வாய் ஆக்ஷியாகும், சூரியன் உச்சமாகும், சனி நீசமாகும், சந்திரன் இராகு கேது இவர்கள் பகையாகும், மேஷவிராசிக்கு என்றறியவும். 1

## ரிஷபம்

சேய்சனிபுதனும்நட்பு சிரியபுகரோனாட்சி
தூயதோர்மதியோனுச்சந் துயர்தரும்பாம்புநீசங்
காய்கதிர்பகையேயாகுங் கண்டனரிடபந்தன்னில்
ஓதியபொருள்களெல்லா முண்மையாயுரைக்கலாமே.

இ-ள். ரிஷபவிராசிக்குச் செவ்வாய் சனி புதன் நட்பாகும், சுக்கிரன் ஆக்ஷியாகும், சந்திரன் உச்சமாகும், பாம்பு நீசமாகும், சூரியன் பகையாகும், கண்டு ரிஷபத்திற்குப் பொருள்கள் யாவும் உரைப்பாயாகவும் எ-று. 2

## மிதுனம்

சந்திரன்சனியேசுங்கன் றருங்குருசெவ்வாய்பாம்பு
முந்தியநட்பதாகும் முனிவிலாபுதனேயாக்ஷி
உந்தியபரிவேடந்தா னுச்சமாம்வில்லுநீச்சம்
தந்திடுங்கதிரோன்மாற்றான் தாழ்விலாமிதுனத்தோர்க்கே.

இ-ள். மிதுனவிராசிக்குச் சந்திரன் சனி சுக்கிரன் குரு செவ்வாய் பாம்பு இவர்கள் நட்பாகும், புதன் ஆக்ஷியாகும், பரிவேடம் உச்சமாகும், தனுசு நீசமாகும், சூரியன் பகையாகும், மிதுனவிராசிக்கு எ-று. 3

## கடகம்

மேதையேநட்புதிங்கள் விளங்கியஆக்ஷியாகும்
சீதையேபொன்னேனுச்சஞ் சிறந்திடும்செவ்வாய்நீசம்
ஓதியகதிரோன்சுங்க னேங்கியராகுமந்தன்
போதவேபகையாமென்று போற்றினார்கடகத்தோர்க்கே.

இ-ள். கடகவிராசிக்கு புதன் நட்பு, சந்திரன் ஆக்ஷியாகும், வியாழன் உச்சமாகும், செவ்வாய் நீசமாகும், சூரியன் சுக்சிரன் இராகு சனி இவர்கள் பகையாகும், கடகத்தோர்க்கும் என்றனர் எ-று. 4

## சிங்கம்

அந்தணனுறவதாகும் அருங்கதிர்ஆக்ஷியாகும்
முந்தியதூமனுச்சம் முனிவிலாநீசநுட்பம்
மந்தனேபுகரோனுதி வணிகனேயரவேதிங்கள்
தந்திடும்பகையேசிங்கம் தனக்கெனச்சாற்றினரே.

இ-ள். சிங்கவிராசிக்கு வியாழன் நட்பாகும், சூரியன் ஆட்சியாகும், தூமன் உச்சமாகும், நீசம் நுட்பமாகும், சனி சுக்கிரன் வணிகன் பாம்பு சந்திரன் இவர்கள் பகையாகும் சிங்கத்தோர்க்கும் எ-று. 5

கன்னி

திங்களோடரவுசெவ்வாய் செம்பொன்மைமந்தனின்னோர்
தங்கியஉறவதாகுஞ் சாற்றியபுதனேயாட்சி
பொங்கியபுதனேயுச்சம் புகரவேநீசமாகுஞ்
செங்கதிர்பகையேயாகுந் தெரிவையற்கென்றுசெப்பே.

இ-ள். கன்னியாவிராசிக்கு சந்திரன் பாம்பு செவ்வாய் குரு சனி இவர்கள் நட்பாகும், புதன் ஆட்சியாகும், புதனே உச்சமாகும், சுக்கிரன் நீசமாகும், சூரியன் பகையாகும், கன்னிக்குயென்று சொல்லவும் எ-று. 6

துலாம்

பண்டிதன்பொன்னனங்கி பாம்புடனிவர்கடாமுந்
தண்டிடாவுறவாமாட்சி தரும்புகருச்சங்காரி
வண்டுமிழ்கதிரோநீசம் வாழ்பதிபகையாமென்று
கொண்டதோர்துலாத்தினோர்க்குக் கூறலாங்கோதைமாதே.

இ-ள். துலாவிராசிக்கு புதன் செவ்வாய் இராகு கேது இவர்கள் நட்பாகும், ஆட்சி சுக்கிரனாகும், உச்சம் சனியாகும், சூரியன் நீசமாகும், சந்திரன் பகையாகும், இவ்விதமாகத் துலாமிராசிக்குக் கூறுவாய் எ-று. 7

விருச்சிகம்

பனிமகன்சுங்கநட்பு பார்மகனாட்சிபாம்பு
முனிவிலாவுச்சமாகும் முழுமதிநீசமாகும்
யினியனேயருக்கன்பொன்னு நீலனும்பகையதென்றே
முனிவிலாதேளினோர்க்கே முறைமையாய்மொழிவார்மாதே.

இ-ள். விருச்சிகராசிக்கு குரு சனி நட்பாகும், செவ்வாய் ஆட்சியாகும், பாம்பு உச்சமாகும், சந்திரன் நீசமாகும், சுக்கிரன் புதன் நட்பாகும், சூரியன் பகையாகும், இவ்விதமாகக் கண்டு விருச்சிகத்தோர்க்குக் கூறுவாயாகவும் எ-று. 8

தனுசு

பகலவன்புகலோன்காரி பாம்புரள்கேதுயிந்து
யிகலிலாவுறவதாகு மிறைவனேயாட்சியாகும்
நலமிகுசிலையேயுச்சம் நாட்டியவட்டநீசம்
நிலமகன்பகையேயாகுங் கெடியதோர்தனுசுனோர்க்கே.

இ-ள். தனுசுவிராசிக்குச் சூரியன் சுக்கிரன் சனி இராகு கேது சந்திரன் இவர்கள் நட்பாகும், வியாழன் ஆட்சியாகும், சிலை உச்சமாகும், வட்டம் நீசமாகும், செவ்வாய் பகையாகும் எ-று. 9

### மகரம்

பண்டிதனோடுசுங்கன் பாம்புடனுறவதாகும்
மண்டியசனியேயாட்சி மங்களனுச்சமாகுங்
கொண்டதோர்குரவேநீசம் சூரியகதிரோன்திங்கள்
கண்டதோர்பகையேயாகுங் காட்டியமகரத்தோர்க்கே.

இ-ள். மகரவிராசிக்கு புதன் சுக்கிரன் பாம்பு இவர்கள் நட்பாகும், சனி ஆட்சியாகும், செவ்வாய் உச்சமாகும், வியாழன் நீசமாகும், சூரியன் சந்திரன் இவர்கள் பகையாகும் எ-று. 10

### கும்பம்

என்றுமுழாய்புதனும்வெள்ளி யிறைவனேயுறவதாகும்
திண்டிறற்சனியேயாட்சி செப்பியநுட்பமுச்சம்
கண்டதோர்தூமநீசம் கலைமதிபுவிசேய்பாம்பு
கொண்டநற்பகையேயாகுங் குறித்திடுங்கும்பத்தோர்க்கே.

இ-ள். கும்பவிராசிக்கு புதன் சுக்கிரன் வியாழன் இவர்கள் உறவாகும், சனி ஆட்சியாகும், நுட்பம் உச்சமாகும், தூமன் நீசமாகும், சந்திரன் செவ்வாய் பாம்பு இவர்கள் பகையாகும், கும்பத்தோர்க்கென்பர் எ-று. 11

### மீனம்

அரவோடுசனியேதிங்கள் அருக்கனேயுறவதாகும்
பரவியகுருவேயாட்சி பார்க்கவனுச்சமாகும்
தரைமதிபுதனேநீசன் றரைமகன்பகையதாகும்
கரைவிலாக்கயலினோர்க்கே கனக்குழைமடந்தைகேண்மோ.

இ-ள். மீனவிராசிக்கு பாம்பு சனி சந்திரன் சூரியன் இவர்கள் நட்பாகும், வியாழன் ஆட்சியாகும், சுக்கிரன் உச்சமாகும், புதன் நீசமாகும், செவ்வாய் பகையாகும், இவ்விதமாக மீனவிராசிக்குக் கண்டு உரைசெய்கவும் எ-று. 12

கிரகராசி முற்றிற்று.

---

நான்காவது

## பாரிஜாதகம் என்கிற

# சோதிட நூல் - 12



திருந்தியசென்மநோக்கு சீர்க்குணமழகுகாந்தி
பொருந்தியசரீரநன்மை புகழொடுவர்ணம்புத்தி
வருந்தியவாயுள்புத்தி வாய்த்தலட்சணங்களெல்லாம்
திருந்தவேலக்கினத்தார் சீர்பெறவறிந்துசொல்லே.

திருந்தியசென்மநோக்கிச் சொல்வதுகுணஞ்சீர்காந்தி
பொருந்தியசரீரபேதம் புகழொடுவழகுபுத்திஞர்தேனே
வருந்தியபலனுபுள்ளார் வாய்த்தநற்பலனுமற்றமேலும்
அருந்தியபுலவர்போல வறிந்திலக்கினத்தாற்சொல்லே.

இ-ள். சென்மலக்கினத்தைக் குறித்துச் சொல்லும்போது நற்குணம் சுத்தி-ஒளி-சரீரபேதமும்-வர்ணமும்-கீர்த்தி-புத்தி-துர்ப்பலன்-ஆயுள்-குடியிருக்கிறதேசம் - நற்பலன்-சுகம் இவையெல்லாம் இலக்கினத்தைக்கொண்டு சொல்லவேண்டும் எ-று.. 1

### இரண்டாம் பாவம் குடும்பம்

சுகம்பெறுமிரண்டைநோக்கிச் சொல்வதுகுடும்பம்பொன்னே
முகமதைகண்ணேவாக்கை மொழிந்திடும்வித்தைதன்னே
மகிழ்ந்திடும்சனத்தோடே வகையெலாந்தெரிந்துவாட்கண்
ணுகந்திடுங்கோதாயிரண்டா மிராசியாலுரைக்கலாமே.

இ-ள். குடும்பம் பொன் முகம் கண் வாக்கு வித்தை அசனம் படுக்கை இருத்தல் இவைகள் இரண்டாமிடத்தைப்பற்றிச் சொல்லவேண்டும் எ-று. 2

### மூன்றும் பாவம்

உண்மையாமூன்றைநோக்கி யுரைப்பதுசகோதரங்கள்
தன்மையாம்பராக்கிரமங்கள் சவகாசந்தயிரியங்கள்
பெண்கள்மார்போகம்வீரியம் பெருகுமாபரணப்பேறு
திண்மையாங்குரலிஞைசை செப்பலாந்தெளிந்துதானே.

இ-ள். சகோதரம் பராக்கிரமம் சாவகாசம் தயிரியம் போகம் வீரியம் ஆபரணம் கண்டச்சுருதி இவையெல்லாம் மூன்றுமிடத்தைப் பற்றிச் சொல்லவேண்டும் எ-று. 3

## நாலாம் பாவம்

உரைக்கலாநான்கைநோக்கி வுடம்பினிற்சுகங்கள்வித்தை
குரைத்தெழுவாகனங்கள் குணமனம்பூமிவீடு
அரைத்திடுபரிமளங்க ளடிமைமாடாடுகன்று
நிரைத்தெழுபந்துதாயார் நெறியிவைநிகழ்த்தலாமே.

இ-ள். சரீரசுகம் வித்தை வாகனம் குணம் மனம் பூமி வீடு பரிமளம் அடிமை மாடு ஆடு கன்று பந்துக்கள் தாயார் இவைகளெல்லாம் நாலாமிடத்தைப்பற்றிச் சொல்லவேண்டும் எ-று. 4

## ஐந்தாம் பாவம்

தொலைவிலாவஞ்சைநோக்கிற் சுபுத்திரராஜயோகம்
அலைவிலாத்தெய்வதந்தை யடுத்தபுண்ணியங்களாகும்
மலைவிலாதேழினாலும் மற்றுமோர்மைந்தராலும்
தலைமைநான்காலும்வெய்யோன் றன்னாலுஞ்செய்திசாற்றே.

இ-ள். புத்திரன் இராசயோகம் தெய்வம் புண்ணியம் ஏழாமிடத்தால் புத்திரனுடைய யாத்திரையும் நாலாமிடத்தாலும் ஆதித்தனைப் பற்றியும் தகப்பன்பலத்தையும் 5-ஆமிடத்தைப்பற்றிச் சொல்லவேண்டும் எ-று. 5

## ஆறாம் பாவம்

அஞ்சியவாறைநோக்கி யவதியாக்கினைகள்பண்கள்
மிஞ்சியசத்துருரோகம் வினைசெயும்விரணமாகும்
நெஞ்சினிற்றேந்துமட்டு நிலைநின்றகோளைநோக்கி
வஞ்சியின்கொடிநல்லாளே வகுத்துரைசெய்வாய்தானே.

இ-ள். அவதி ஆக்கினை புண் சத்துரு நோக்காடு ரணம் முதலியவைகளை ஆறாமிடத்தைப்பற்றிச் சொல்லவேண்டும் எ-று. 6

## ஏழாம் பாவம்

அரியதாமேழைநோக்கி யமைப்பதுதிரியேகாமந்
துரியயாத்திரைசுகங்கள் தோணும்புத்திரருந்தானே
உரியதாய்வருமைந்தர்க்கு முறுசுகமுள்ளதெல்லாந்
தெரியவேசொல்வார்தானே செகத்தினிற்பெரியோராமே.

இ-ள். ஸ்திரீகள் காமம் யாத்திரை சுகம் பிள்ளையின்பலம் என்று ஏழாமிடத்தைப்பற்றிச் சொல்லவேண்டும் எ-று.

## எட்டாம் பாவம்

தரும்பலனெட்டினாலே சார்வதுயுரைக்கவேண்டிற்
கருதியவாயுளோடு கலங்கியவரிட்டமாகும்

பெருகியரிணங்கள்சாவு பிழைகளுமுண்டுசொன்னோம்
மருமலங்குழலினுளே வருபலனுரைப்பாய்தானே.

இ-ள். ஆயுசு அரிட்டம் நோய் மரணம் முதலியவை சொல்ல வேண்டும் எ-று. 8

## ஒன்பதாம் பாவம்

அமைத்தவொன்பதினூற்சொல்ல தானபாக்கியங்களாசான்
சமைத்தபொன் றிரவியங்க டந்தைதன் றவசினோடு
இமைத்திடுசுகங்களெல்லா மியம்பலவொன்பதாலே
நமைத்திடும்பெண்ணேநீதா னுடியபலன்சொல்வாயே.

இ-ள். பாக்கியம் குரு ஆபரணம் திரவியம் தகப்பன் தவசு சுகம் இவை 9-ஆமிடத்திலும் குருவாலும் சொல்லவேண்டும் எ-று. 9

## பத்தாம் பாவம்

வெகுபலன் றருபத்தாலே விதித்ததுவித்தைஞான
நகுவியாபாரமார்க்க நன்னெறிகீர்த்திநித்திரை
புகுதுமாக்கினைகள்கன்மம் பூஷணம்புவிவேளாண்மை
தகுமபிமானமெல்லாஞ் சாதகர்க்கியம்பலாமே.

இ-ள். வித்தை ஞானம் வியாபாரம் மார்க்கம் நித்திரை கர்மம் கீர்த்தி ஆக்கினை யோக்கியம் பூஷணம் வேளாண்மை சொல்லவேண்டும் எ-று. 10

## பதினோராம் பாவம்

விரிவெனும்பதினொன்றாலே விளங்குமேபாக்கியங்கள்
அரிதெனும்பதினொன்று மவ்விடத்திருந்தோனும்
பெரிதெனும்வீட்டுக்கோள் தலந்தனைநோக்கிநன்று
விரிவதாங்கருமமெல்லாம் வியல்புடனுரைப்பாய்மின்னே.

இ-ள். 11-ஆமிடத்தால் சகலலாபமும் இருந்தவனும் பார்த்தவனும் சொல்லவேண்டும் எ-று. 11

## பன்னிரெண்டாம் பாவம்

நிலமெனும்பனிரெண்டாலே நீடியபலன்சொல்லக்கேள்
கலகஞ்சேய்சனியினுலு காடுநாடுகள்சஞ்சாரம்
நலமெனும்படுக்கைபைம்பொன் நாடியசுகங்கள்காணும்
தலமதிலிவைகளெல்லாஞ் சாற்றுவாய்தரணியோர்க்கே.

இ-ள். 12-க்குடையவன் இருப்பவன் பார்ப்பவன் தூரசஞ்சாரமும் தூர்க்கதியும் தாதாவும் சயனசுகமும் திரவியசெலவும் சொல்வேண் எ-று. 12

## சோதிடநூல்-12 முற்றிற்று.

---



ஐந்தாவது

## குடும்பாதிபலன்



குடும்பத்தானட்டமத்திற் குரூரரோடிருப்பானாகில்
குடும்பத்தான்வேறுபாடாங் குத்திரம்போரைக்காட்டும்
குடும்பத்தான்வக்கிரமாகிக் குரூரமாயத்தமாகில்
குடும்பந்தான்குலையுமென்று குறுமுனிசொன்னதாமே.

இ-ள். குடும்பாதிபதி அஷ்டமத்தானத்தில் குரூர கிரகங்களுடன் கூடியிருக்கச் சாதகனுடைய குடும்பம் வேறாகும், கலகங்கள் நேரும், குடும்பாதிபதி வக்கிரமாகியும் குரூராளுடன் கூடியும் அஸ்தமனமாகிற் குடும்பமானது குலைந்துபோகுமென்று குறுமுனிசொன்ன வாக்காகும் எ-று. 1

சந்திரனோடுமந்தன் சார்ந்துமேகோத்திருந்தால்
வந்ததோர்பிள்ளைதானே வாங்குமொன்றிரண்டிலேந்தில்
அந்தலக்கினத்தானுக்கு மரியதோர்திசைநாதர்க்கும்
தொந்தமுண்டாகின்மென்மேற் சுபமன்றித்தோடமாமே.

இ-ள். சந்திரனோடு சனிசேர்ந்திருக்கச் சாதகமான குழவிக்கு 2-5-வயதில் கண்டம் நேரும். இலக்கினத்தானுக்கும் திசைநாதனுக்கும் தொந்தமாக விருக்கில் மேன்மேலும் சுபமன்றித் தோஷம் சம்பவிக்கும் எ-று. 2

### லக்கினசுலோகம்

கொடியனுங்காரிக் குச்சமாந்துலாத்தோன்
குறித்திரு மனைவியரிருவர்
குமரர்கடிரண்டு குலனபிமானி
கூறுசம்பத்துளன் றனவான்.

இ-ள். கொடியவனாகிய சனிக்கு உச்சமாகிய துலாத்தோனிருக்கச் சாதகமானவனுக்கு மனைவியர்கள் இருவராகும். மைந்தர்களும் இரண்டாகும். நன்மையாகிய குலவான் அபிமானி சம்பத்துடையவன் தனவானாகும் எ-று. 3

படியில்வாழ்மன்னர்க் கினியநற்சுகவான்
பரிமளகந்தப் பூப்பிரியன்
பற்றுளதமரோன் றருமசிந்தையினன்
பரவுமேழாண்டினேய் தீயால்.

இ-ள். மேற்படிபலன் பூமியின்மீது வாழும் அரசர்களுக்கு இனிய நற்சுகவானகை விருப்பான். பரிமள கந்தங்களிலும் புஷ்பத்தின் மீதும் பிரியமுடையவன், பற்றில்லாதவன், தருமசிந்தை யுடையவன், இவன் தனக்கு 7-வது வயதில் நோய் தீயினால் உண்டாகும் எ-று. 4.

நாடியவீராண் டதனில்வைசூரி
காணிருபத்தொன் பதிற்பகையாற்
கண்டதோரிருபத் தெட்டில்வெற்புனலால்
கண்டநாற்பத் திரண்டினியர்.

இ-ள். இரண்டாவதுவயதில் அம்மையால் பாதை விளைவிக்கும், 19-வது வயதில் பகையினால் துன்பமுண்டாம், 28-வது வயதில் வெப்பத்தினாலும் சலத்தினாலும் கண்டம் நேரும், 42-ல் இனியர் நேயமாம். 5

நெடியபார்வையினா லெண்பதோடைந்து
நின்றதேள் குறைதிதியாறில்
நிறைகதிர்வாரம் விருத்தியோகத்தி
னிருதயத்தி னீங்குவனே.

இ-ள். நெடியபார்வையினால் 85-வது வயதில் கார்த்திகைமாதம் அமரபட்சம் 6-வது திதியில் ஞாயிற்றுக்கிழமை விருத்தியோகத்தில் மரணமடைகுவன் எ-று. 6

**சுலோகம்**

கொடியதொருசனிதிசையிற் றனதபகாரந்தான்
கூறுண்டுமூன்றுடனே நாள்மூன்றின்பலன்கேள்
கடியதொருபீடைவருங் கிரகம்போமரசர்
கள்ளர்வக்கினியால் வெகுநாசமாகும்.

இ-ள். சனிதிசையில் தனது அபகாரம் வருடம்-3, நாள் மூன் றின் பலன் கேட்பாயாகவும், சாதகனுக்குப் பீடைகாட்டும், கிரகமா னது போகும், அரசர்களாலும் கள்ளர்களாலும் அக்கினியாலும் வெகுநாசமாகும் எ-று. 7

வடிவுடையகளத்திரத்தோ டுடன்பந்துநாசம்
வருவிலங்குபந்தனமுந் தாயாதிகலகம்
படியினிலேமூடதன்றன் மாமதிற்பயமாம்
பரிவுறுநல்மாதமதிற் சுகமெனவும்பகரே.

இ-ள். களத்திரனோடு பந்துக்கள் நாசமாகும், விலங்கானது வரும், பந்தனமும் தாயாதிகலகமும் சம்பவிக்கும், சனியனுடைய

மாதத்தில் பயங்காட்டும், நன்மையாகிய மாதத்தில் சுகமுண்டா மெனச் சொல்குவாய் எ-று. 8

எழுத்தாணியை பெருவிரலாலெண்ணி
அழுத்தாமீரைந் தாறிற்பெருக்கி
முழுத்தாயேற்றிற் கழித்தமீந்ததைத்தான்
வழுத்தாய்பலனை வந்தவர்தமக்கே.

இ-ள். எழுத்தாணியைப் பெருவிரலால் எண்ணி அதைப் பத்தில் பெருக்கி ஏழில்கழித்து மீந்ததைக்கண்டும் வந்தவர்களுக்குப் பலன் சொல்வாயாகவும் எ-று. 9

பழுதுதனந்தவிரொன்று பரவசையதிரண்டு
பாரிதுபீடைமூன்று பாங்காநால்தனபதியாம்
பந்தயமதிலேவாது பறக்குமேசத்துருவாது
பார்மேலேழேமரணம் பட்சங்கிரந்தவாக்கியமே.

இ-ள். பழுதாகத் தனமானதுந் தவர்ந்துபோகும், ஒன்றுக்கு பரவசையாகும், இரண்டிற்கு பீடையணுகும், மூன்றிற்கு நாலுக்குத் தனபதியாகுவன், ஐந்திற்கு வாதுசம்பவிக்கும், பறக்கும் சத்துருக்கள் ஆறுக்கும், ஏழுக்குமரணம் எ-று. 10

செங்கதிரோன்பிறந்தநா பரணியோடுஞ்
செழுந்திங்கள்பூரஞ் செவ்வாய்பூராடம்
பொங்குபுதனவிட்டம் பொன்கேட்டையோடும்
புகர்பூரட்டாதிசனி ரேவதியினோடும்.

இ-ள். சூரியன் பிறந்தநாளோடு பரணியாளும் திங்கட்கிழமையும் பூரமும் செவ்வாய்க்கிழமை பூராடமும் புதன்கிழமை அவிட்டமும் வியாழக்கிழமை கேட்டையும் வெள்ளிக்கிழமை பூரட்டாதியும் சனிக்கிழமை ரேவதியாகினுங் கேட்பாயாகவும் எ-று. 11

மங்கையரைமணஞ்செய்ய விதவையாவாள்
மனைகோலப்பாழாம் வழிபோகின்மரணம்
செங்கமலத்தாடெருளின் மலடேயாவள்
செழுங்குழவிதானினச் சின்னந்தானே.

இ-ள். மேற்கண்ட வாரம் நட்சத்திரங்களில் மங்கையரை மணமானது செய்யில் விதவையாகுவள். மனையானதுகோல பாழாகும். வழிநடைபோகில் மரணமாகுவர். சோபனஞ்செய்யில் மலடாகுவள். குழந்தைபிறக்கில் பின்னமடையும் என்றனர் எ-று. 12

குடும்பாதிபலன் முற்றிற்று.

சிவமயம்

ஆ ரு வ து

# இராமதேவர் சோதிடம்-310



## காப்பு

பலகலை நூலி லுள்ளாய் பகர்ந்திடும்சோசியத்தில்
புலமதியுள்ளதெல்லாம் பொறுக்கினான்முன்னூற்றிபத்துக்கும்
உலகினிலிராமதேவ னுரைத்தசாஸ்திரத்தின்சூட்சம்
இலகிடும்பயனுநன்று யியல்புட னுரைக்கலுற்றேன். 1

உற்றவேல்முருகன்முன்னே னுகந்தகுஞ்சரத்தைவேண்டி
பத்தியாமுன்னூற்றிபத்துக்குள் பயனதைவெளியாய்நன்றாய்
சத்தியுஞ்சிவனுமாலுந் தன்பதமிகவேபோற்றி
புத்தியாயுரைத்ததிறவு புகழ்ந்துகொண்டருள்வோர்க்கென்றே. 2

உண்மையாம்ராமதேவ னுரைத்ததோமுன்னூற்றிபத்துபாட்டு
நுண்மையாய்மனதிலெண்ணி முன்னூற்றிஒருபத்தும்
தண்மையாய்க்கவசம்செய்யிற் றரணியில்நினைத்ததெல்லாம்
வண்மையாயுரைத்தோம்நன்றாய் வாரணமுகத்தோன்காப்பு. 3

திருத்தகுபாதஞ்செம்மை யுடையதாய்ச்சிறியதாகில்
உருத்தகுமடிகளொத்து வுயர்விரலப்பாதமண்மேல்
பொருத்தனங்குடைகளாகிற் புறவடிதகிக்கும்பெண்கள்
இருத்தகுஞ்செல்வியாகு மியம்பினே னுரைசெய்குவாயே. 4

## நூல்

தரணியோர்க்கிதமாயுள்ள சாதகர்க்கிந்தமூன்று
பரணியிற்பிறந்ததிந்த பாவலக்கினத்தோனாகில்
இரணியன்தன்னைப்போல வியல்பதால்செயலாய்வாழ்ந்து
மரணமாய்க்கடுவாய்வாயில் மாண்டவனிறந்துசாவான்.

இ-ள். தரணியோர்களுக்கு இதமாகயுள்ள சாதகர்க்கு இந்த மூன்றும் பரணியில் சாதகமாகி, மேற்கூறிய பாபவிராசி லக்கினமாகத் தோன்றில் இரணியனைப்போல் செயங்கொண்டு வாழ்ந்து மரணகாலத்தில் கடுவாய்வாயில் மாண்டுபோகுவானென்பர் எ-று. 5

வித்தைக்குடையோன்மூன்று பேருமேபாருநின்று
பத்தியாய்நோக்கிப்பார்க்கில் பிறந்தசாதகர்க்குநன்றாய்

எத்தேயாம்சகலபாஷை யியம்பியேபேசவல்லன்
சத்தியமிதுவேயுண்மை சாதகன்றனக்குக்கேளே.

இ-ள். வித்தைக்குடைய கோட்களாகிய மூன்றுபேரும் 6-ஆமிடத்தி லிருக்கப்பார்க்கச் சாதகமானவன் சகலவிதமான பாஷைகளும் பேசவல்லவனாக விருப்பான் உண்மையான வாக்கென்றறியவும் எ-று.

கேளுநீயிந்தபாகங் கெணித்ததோர்லக்கினத்தில்
மூளுமேயிருபத்தேழு முற்றமுங்கெணிதமொப்பாம்
நாளுமேயிந்தமார்க்கம் நன்மையின்விதிதப்பாது
கோளுமேமூன்றுபேருங் குணமெனவுரைக்கலாமே.

இ-ள். இந்தப் பாககெணிதம் இலக்கினத்தில் இருபத்தேழு நட்சத்திரமும் கணிதத்திற்கு ஒப்பாகும்; எந்நாளும் இந்த மார்க்கத்தின் நன்மை துன்மையின் விதியானது தப்பாது; கோட்களாகிய மூன்று பேர்களையுங் குணமெனக் கண்டு சொல்லவும் எ-று. 7

ஆமெனுஞ்சாதகர்க்கு ஆயுசுவாழ்விரண்டும்
நாமெனுமுரைத்ததம்பத் ததினுடநலம்பொய்யாது
சோமெனும்ரவியுங்கூடித் துலங்குஞ்சாதகரெந்நாளும்
காமெனும்வேசிகைக்குள் கஷ்டமேபடுவனென்றே.

இ-ள். சாதகமானவர்களுக்கு ஆயுசும் வாழ்வும் இவையிரண்டும் கணிதத்தை நன்றாகப்பார்த்து உரைக்கும் நன்மை துன்மைகள் பொய்யாது; சந்திரனுஞ் சூரியனுங் கூடிநிற்கில் சாதகமானவனுக்கு யென்னாளும் காமமானது பெருகி வேசியினுடைய கைக்குள் சிக்கி கஷ்டப்படுவா னென்பர் எ-று. 8

குருவுடனிரண்டுதோளும் குணமுடன்பிலவானாக
ஒருபதிதன்னிலேற நட்பாட்சிஆட்சியுச்சம்
இருவருமொன்றாய்க்கூடி யெண்ணிலாச்சுபரேபார்க்கில்
பெருநரவாகனங்கள் பெற்றிடுங்கீர்த்திமானும்.

இ-ள். குருவினுடன் இரண்டு சுக்கிரகங்கள் பெலவானாக விருக்க இவர்கள் மூன்றுபேரும் ஒரு விராசியி லேறிநிற்க நட்பாட்சி யுச்சமாகிய இரண்டுக்குக் கோட்களும் ஒன்றாகக் கூடிநிற்க அவரைச் சுபக்கிரகங்கள் பார்க்கச் சாதகமானவன் நரவாகனங்கள் பெற்று கீர்த்தியானது பெருக வாழ்குவனென்பர் எ-று. 9

பொன்னவன்வெள்ளிபார்க்கின் புண்ணியரிவர்கள்கூடி
பன்னுமேகேந்திரத்திரிகோணம் பதியவேவனேகமுள்ள
வன்னவாகனங்களுக்கும் மன்னவனாகும்ராஜன்
என்னலாமிவையல்லாமல் இம்மையில்வணங்குவானே.

இ-ள். வியாழனனும் சுக்கிரனனும் பார்க்கப்படினும் சுபர்கள் இவர்கள்கூடிக் கேந்திர திரிகோணத்திலிருக்கச் சாதகமானவன் அனேக

அன்னவாகனங்களுக்கும் மன்னவனென்று மிராஜனுவன்; அவை யல்லாமலும் இம்மையில் யாவரும் வணங்குவார்கள் எ-று. 10

வணங்குவான்லக்கினத்துக் கெட்டினில்வியாழம்நின்று
யிணக்கவேயிவரிரண்டு பேருடன்கூடிப்பார்க்கில்
மணக்கமழென்றுவீசும் மதகரிவாசல்நிற்க
இணக்கமாய்வாழ்வனென்று யியம்புனற்சாதகர்க்கே.

இ-ள். இலக்கினத்திற்கு 8-ஆமிடத்தில் வியாழம் நிற்க அவர் இரண்டு கோட்களுடன் கூடிப்பார்க்கச் சாதகமானவன் மனையில் பரிமளாதிகளென்றும் வீசவும் மதகரியென்னும் யானையானது வாயலில் நிற்கவும் இணக்கமாக வாழ்குவனென்பர் எ-று. 11

இதுவுமது வேறு

புந்தியினில்புதன்கேது ராகுசேரில்
பிரபலசாதகன் தனக்குப் புதல்வனற்று
அந்தியத்தில்வயது முப்பத்திரண்டில்
அன்னைபிதாகளத்திரங்கள் வகைகள்ரெண்டும்
நிந்தனையாய்ச்செத்திறந்து கருமஞ்செய்து
இகழ்ச்சிபெறமதாச்சாரந் தப்பிவாழ்வன்
மந்திரவானிவனுடைய நடத்தைசெய்யுள்
மரணமன்னியஸ்திரீயிடத்தில் மார்க்கம்பேசே.

இ-ள். புந்தியில் புதன் கேது இராகு இவர்கள் சேர்ந்துநிற்கில் சாதகமானவனுக்கும் புதல்வர்களற்று அனித்தியக்காலம் வயது 32-ல் அன்னை பிதா களத்திரங்கள் வகைகள் இரண்டும் நிந்தனையாகச் செத்து அவர்களுக்குக் கருமஞ்செய்துப் பின்பு மதாச்சாரந் தப்பி வாழ்குவன் மந்திரவானிவனுடைய நடத்தையும் செயலுமாக அன்னிய ஸ்திரீயிடத்தில் மரணமாகுவன் எ-று. 12

கோளகனும்செவ்வாயும் ராகுங்கூடி
குருவுடனேலக்கினத்தைப் பார்த்துநின்றால்
வேல்மகனைப்போலழகன் அதிகரூபன்
வேந்தனைப்போல்வையகத்தி லிருக்கவாழ்வான்
யேழதனிலிவர்கூடி லெட்டிலாறில்
இருக்கவந்தசாதகர்க்குத் திருஷ்டிரெண்டும்
பாழாகயிருவிழிகண் பொட்டையாக
பார்தனிலேமிகவலைவன் பாரே.

இ-ள். கோளகனுஞ் செவ்வாயும் இராகுவுங்கூடி வியாழனுடன் இலக்கனத்தைப் பார்த்து நிற்கச் சாதகமானவன் வேளின் மகனைப் போல் அழகும் அதிக ரூபவானுமாக விருப்பன்; அரசனைப்போல் பூமியின்மீது யிருந்து வாழ்குவன்; 7-ஆமிடத்தி லிவர்கள் நிற்க 8-6-ல்

மேவச் சாதகனுக்குத் திருஷ்டி இரண்டும் பாழாகும் பொட்டையாகப் போகும் எ-று. 13

பாரெனவேயிக்கிரகம் பொய்த்திடாது
  பார்த்தவரில்சுபக்கிரகம் பகைத்துநிற்கில்
கூறெனவேயொருவிழிகண் சுத்தப்பொட்டை
  கூர்ந்திவர்கள்தன்னுட னாதித்தன்சேரில்
நேரெனவேயிருவிழிகண் முழியிற்சூட்சம்
  நெரியதுபார்வையிருள் நெறிதப்பாது
தேரெனவேசொல்லிவிட்டோம் திறவுகோலாய்த்
  தெளிந்துணர்ந்தோன்ஜோசியனும் தெளிந்துபாரே.

இ-ள். மேற்கூறிய கிரகபலன்களானது பொய்யாகாது பார்வை யுற்ற கிரகம் பகைத்துநிற்கில் சாதகனுக்கு ஒரு நேத்திரமானது பொட்டையாகப் போகும். இவர்களுடன் சூரியன்சேரில் இரண்டு நேத்திரத்தின் முழிகளில் சூட்சுமமாகவும் பார்வையானது இருண்டுக் காட்டும். நெரியானது தப்பாமல் சொல்லிவிட்டோம் திறவுகோலாக வும் இதைத் தெரிந்து உணர்ந்தோன் ஜோசியனுமென்பர் எ-று. 14

### இதுவுமது வேறு

வாப்புடன்லக்கினநாதன் நன்னுடன்ராகுகேது
தாப்புடனவர்கள்வீட்டைத் தனித்தவரிருந்துபார்க்கில்
கோப்புரங்கெட்டமங்கை கொங்கையிற்பருமனுன
தோப்புருமுலையினுளைத் துயர்ச்சியாயணைவனென்றே.

இ-ள். இலக்கினதிபதியுடன் இராகு கேதுக்கள் கூடி அவர்களு டைய வீட்டைத் தனித்து யிருந்துப் பார்க்கில் சாதகமானவன் கெட்ட நடத்தை யுடையவனுகியும் பெருத்த ஸ்தன்னியங்களையுடைய மங்கை யைச் சேருவானென்பர் எ-று. 15

என்றதோர்கிரகந்தன்னி லிருவர்களொன்றுகூடி
குன்றெனுமானைக்கோடு கொங்கைமின்மங்கையென்னும்
நன்றெனுமதிபோலுள்ள நாரியர்தன்னைச்சேர்வன்
என்றதினிறைதப்பாது யிதுவிதிவசமாங்காணே.

இ-ள். இரண்டு கிரகங்கள் ஒன்றுகக்கூடி நிற்கச் சாதகமானவன் குன்றைப்போன்ற கொங்கைகளுடைய மங்கையரென்னும் சந்திர னைப்போன்ற அழகுடைய மாதர்களைச் சேர்குவன்; கூறிய பலன்கள் யாவும் தப்பாது இது விதிவசமாகுமென்பர் எ-று. 16

சந்திரருடனேசெவ்வாய் தனித்தவர்க்கைந்துநிற்கில்
தந்திரன்கேதுராகு தனித்தவர்பகைத்திட்டாலும்
சந்திரமங்கைமாதர் துவாச்சையால்சீவனுர்த்தம்
அந்திரங்காலக்ஷேபம் அன்னவஸ்திரத்துக்காளான்.

இ-ள். சந்திரனுடன் செவ்வாய் தனித்து 5-ஆமிடத்தில் நிற்கினும் கேது இராகு இவர்கள் தனித்துநின்று பகையாகினும் சாதகமானவன் தன்னுடைய மனையாளாலும் தாயாரினாலும் சீவனார்த்தம் செய்குவன். காலக்ஷேபங்களாலும் அன்னவஸ்திரம் முதலானதும் உண்டாகி வாழ்குவன் எ-று. 17

இதுவுமது வேறு

பொல்லாதகோளகனுங் கேதுங்கூடி
 பொருந்தியலக்கினத்தை திருந்தப்பார்க்கில்
இல்லாண்மையுள்ளவனும் மல்லையோடு
 யெடுத்துண்பானின்னதிசை விட்டகன்றகாலம்
சல்லாபசற்குணவா னாகவேதான்
 சாம்பிராச்சியயோகமதைச் சார்வில்லாமல்
வல்லாளன்சாதகர்க் கிருந்தவீட்டில்
 வாசலிலேயானைகட்டி வாழ்வன்மெய்யே.

இ-ள். கோளகனும் கேதுவுங்கூடி இலக்கினத்தைப் பார்க்கில் ஜாதகமானவன் இல்லாமையுள்ளவனாகியும் மல்லையோடு கையிலேந்தி இரந்துண்பான். இக்கிரகங்களின் றிசைவிட்டு அகன்றகாலம் யாவரும் புகழும்படியான சல்லாபக்குணவானாகவும் சாம்பிராச்சிய யோகங்களைச் சார்வில்லாமல் சாதகனுடைய மனையில் யானையானது கட்டி வாழ்குவன் எ-று. 18

மெய்யாகலக்கினத்திற் பொய்யன்கூடி
 விரும்பியேகேதுபுத்தி யெவரென்பார்க்கில்
பொய்யாமல்சாதகன் மரணமுடிவினாலே
 பொசிப்பதிலேநாவிநஞ்சு பொசித்துமாள்வன்
செய்யான்செனன லக்கினாதிபாகில்
 சேட்டையதாய்க்கயறுகொண்டு மோட்டில்மாட்டி
வெய்யானேன்கழுத்ததிலே யிதுவீண்பொய்யே
 வேந்தர்விதியால்மரண மிருநான்காமே.

இ-ள். இலக்கினத்தில் பொய்யன்கூடி நிற்க அவரைக் கேது புதன் இவர்களால் பார்க்கப்பட்ட சாதகமானவனுக்கு மரணகாலம் முடிவில் பொசிக்கும்படியான அன்னத்திலும் நாவுநஞ்சுக் கலந்துப் பொசித்து மரணமாகுவன். செய்யான் ஜெனனலக்கினாதிபதியாகில் சாதகன் சேட்டையதாகக் கயறுகொண்டு மோட்டினிடமாக மாட்டி கழுத்தில் மாட்டிக்கொண்டு மாய்குவதும் பொய்யாகாது. அரசர்களுடைய வினையால் மரணம் எட்டுவயதில் சம்பவிக்குமென்பர் எ-று. 19

தீர்க்கமாய்ராகுகேது திருந்தவேலக்கினத்தை
கார்க்கவேசெவ்வாய்லக்கி னாதியுடனேசேரில்
மூர்க்கமாம்சாதகர்க்கு மூவாறுவயது தன்னில்
ஏர்க்கவேசாபத்தாலே யெடுத்திடும்வினையேபேசே.

இ-ள். இராகு கேது இவர்களும் இலக்கினத்தைப்பார்க்க செவ்வாய் இலக்கினுதிபனுடன் சேர்ந்துநிற்கச் சாதகமானவனுக்கு 18-வயதில் சாபத்தினுலே வினையானது சம்பவிக்குமென்பர் எ-று. 20

பேசியிந்தப்படியிரண்டு பேருடன்குருவுஞ்சேரில்
ராசியின்முத்தமனேலக்கி னுதிபன்பிலவானுகில்
சீசிந்துமரணநோய்தீர்ப்பன் சோசியம்கணிப்பனல்லால்
மாசிந்தவிடங்களெல்லா மரணமுந்தவிர்ப்பனென்றே.

இ-ள். மேற்கூறிய கிரகங்க ளிரண்டுபேருடன் வியாழன் சேர்ந்துநிற்க இராசிக்குடையோனும் இலக்கினுதிபதியும் பெலவானுகவிருக்கச் சாதகமானவன் மரணநோய்களைத் தீர்ப்பன் சோதிடஞ் சொல்பவன் யெவ்விடத்தும் மரணுவஸ்தையை தவிர்ப்பன் எ-று. 21

நன்றெனலக்கினுதி தன்னுடன்கணக்கனேடு
நின்றவர்குளிகன்தன்னை நெறியதாய்பகைப்பனுகில்
மனதினிற்பேய்நாயே மரணமென்றுரைக்கலாகும்
என்றதிற்செவ்வாய்கூடி லெடுத்திடுஞ்சன்னிதோஷம்.

இ-ள். இலக்கினுதிபதியோடும் புதனேடும் கூடிநின்றவர்களைக் குளிகன் பகைப்பானுகில் சாதகமானவன் மனிதர்களாலும் பேய் நாய்களாலும் மரணம் சம்பவிக்கும். செவ்வாய் கூடிநிற்கில் சன்னிதோஷம் சம்பவிக்கும் எ-று. 22

வல்லவனும்கேதுடனே செவ்வாய்கூடில்
வருந்தியேலக்கினத்தைப் பொருந்திப்பார்க்கில்
நல்லவனுமவர்திசைவிட் டோடுங்காலம்
நலமானநிதிபுதைய லெடுக்கும்யோகம்
யெல்லவர்க்கும்பிரியமுள்ள கீர்த்திமானு
மெழில்வணிபங்கிருஷிபல வித்தைகற்பன்
சொல்லவனேஇதுநிசம்பொய் யில்லைபாரு
சோசியத்தின்நிர்ணயஞ்சொல் தவறிடாதே.

இ-ள். கேதுவுடன் அங்காரகன்கூடி இலக்கினத்தைப் பார்க்க அவர்களின் திசையானது முடிந்து யேகுங்காலம் சாதகனுக்கு நிதியென்னும் புதையல் கிடைக்கும் யோகமுண்டாகும் யாவர்க்கும் நல்லவனுகியும் கீர்த்திப்பெறுகுவன் பலவிதமான வியாபாரங்கள் செய்குவன் வித்தைகற்பன் இப்பலன் நிசமாகுமேயொழிய பொய்யாது சோசியத்தின் நிர்ணயமான சொல்தவறுது எ-று. 23

துடியகேதுடனே ராகுசெவ்வாய்
துணையாகுமூவருமே யிணையாய்ப்பார்க்கில்
படிபுடையசாதகர்க்கு மிடியினுல்
பார்தனிலேமரணமெனப் பகரலாகும்

குடியுடையோன் தன்னுடனே குருதானிற்க
குணதோஷமில்லையிடி குடியில்வீழும்
வடிவுடையபாதகர்க்கு விதிதானென்று
வழுத்துமுறையிவ்வகையின் வகைநீபேசே.

இ-ள். இலக்கினத்தை கேது ராகு செவ்வாய் இவர்கள் மூவரும் இணையாகப்பார்க்கச் சாதகமானவனுக்கு இடியினால் மரணம் சம்பவிக்குமென்பர். குடும்பஸ்தானாதிபதியுடன் குரு கூடிநிற்க தோஷமானது யில்லாமல் இடியானது தன்னுடைய மனையில் விழுகும் சாதகனுடைய விதியாகுமென்ப் பேசவும் எ-று. 24

குருவுடன்கதிரோனாதி குணமுடன்மூன்றுபேரும்
ஒருபதிதன்னிலேறி லக்கினாதிபனைப்பார்க்கில்
உறவெனப்பிறந்தநாளாய் வுபத்திரம்யாதொன்றில்லை
தெருவிலேயெறிந்துபோட்ட தில்லையாங்தேடிப்பாரே.

இ-ள். வியாழன் சூரியன் அந்தனாதிபதி இவர் மூவர்களும் ஒரு ஸ்தானத்தி லேறிநிற்க இலக்கினாதிபதியைப் பார்க்கச் சாதகமானவன் பூமியின்மீது உதித்தநாளாய் யாதொரு உபத்திரவமுமில்லை தெருவினில் யெறிந்துப் போட்டதுபோலில்லை தேடிப்பார்க்கவும் எ-று. 25

பொய்யவன்றன்னுடனே கதிரோன்சேர்ந்து
பொன்னவனைத்தான் பகைத்துயிருப்பானாகில்
வெய்யவனும்லக்கினத்தில் சேர்ந்தேநிற்கில்
வேணவஷ்டவயிஸ்வரிய மிருந்திட்டாலும்
செய்வன்தன்பொசிப்பதுவே நாம்தீண்டாது
செய்கையெனப்பொசிப்பெடுப்பன் செய்யுள்மார்க்கம்
வையகத்திலிரவலன்போ லாடையில்லான்
வார்த்தைலட்சம்பொன்பெறவே வாழ்குவானே.

இ-ள். பொய்யோனுடன் சூரியன் சேர்ந்து வியாழனைப் பகைத்திருக்கினும் சூரியன் இலக்கினத்தில் சேர்ந்து நிற்கச் சாதகமானவனுக்கு அஷ்டஐஸ்வரியம் மிகுதியாக விருக்கினும் அவனது பொசிப்பை நாயானதுந் தீண்டாது எனப் பொசிப்பன். பூமியின்மீது ஆடையின்றி இரவலனாக விருப்பன். அவனுடைய வார்த்தை லட்சம்பொன் பெற வாழ்குவானென்பர் எ-று. 26

திங்களுக்குடையோன்பன் னிரண்டினிற்றீர்க்கமாக
சிங்கலக்கினத்தைநோக்கி பார்த்திடதேசமெய்க்க
மங்களமேழுமூது வாத்தியங்கவரிவீச
வங்கம்போல்வெள்ளையானைக் குடையுடனிருந்துண்பானே.

இ-ள். திங்களுக்குடையோன் 12-ஆமிடத்தில் தீர்க்கமாக நிற்க சிங்கலக்கினத்தைப் பார்க்கச் சாதகமானவன் பூமியின்மீது மங்களகரமாகியும் வாத்தியங்கள் முழங்க கவரியானதுவீச வங்கமும் வெள்ளை

யானையுமுடையதாய் குடையுடன் பிரகாசிக்க யிருந்துண்பானென்றனர் எ-று. 27

லக்கினத்துக்கிருநான்கில் செவ்வாயோடு
லக்கினத்தைத்தான்பகைக்குங் குளிகன்சேரிற்
பக்குவமாமவன்வயதி லெருமைதேசி
பருவமென்றுவனுபோகந் திறந்தப்பாமல்
சுக்கிரனுமிவருடனே சேர்ந்தேபார்க்கிற்
சுடுகோலைபறைச்சிதனைச் சுகமாகச்சேர்வன்
விக்கினங்களில்லையிது நிசம்பொய்யல்ல
விரும்பியதோர்சாதகர்க்கிவ் விபரம்பாரே.

இ-ள். இலக்கினத்திற்கு 8-ஆமிடத்தில் நின்ற செவ்வாயுடன் இலக்கினத்தைப் பகைக்குங் குளிகன் சேர்ந்து நிற்கச் சாதகமானவன் தனக்கு வயதுப் பருவமாகிவரும் நாள்களில் எருமையும் குதிரையும் உடைத்தாயப் பெருகும். சுக்கிரன் இவர்களுடன் கூடிப்பார்க்கில் புலச்சியரைச் சேர்குவன். விக்கினமில்லாத நிசமாகிய இந்நூலை சாதகர்க்கு விபரமாகப் பேசவும் எ-று. 28

திங்கள்ரவியிருவருமே ஒன்ருய்க்கூடி
திறமாகலக்கினத்தை நோக்கிப்பார்க்கில்
சங்கைகெடச்சக்கிலிச்சி தன்னைச்சேர்வன்
சண்டாளலக்கினத்தில் குருவேநிற்கில்
மங்களமாம் பிரமகோத்திரத்திலுள்ள
மங்கைதனைச்சேர்ந்துபொசித் திருந்துவாழ்வான்
வங்கணமாம்பிறதேசங் கொண்டேசென்று
வையகத்திலவள்பொருட்டால் வாழவல்லான்.

இ-ள். சந்திரன் சூரியன் இவர்கள் ஒன்ருகக்கூடி இலக்கினத்தைப் பார்க்கச் சாதகமானவன் சங்கையானது கெட்டுச் சக்கிலிச்சியைச் சேர்குவன். இலக்கினத்தில் வியாழம் நிற்க பிராமணப்பெண்ணைச் சேர்ந்து அவளிடத்திற்ருனே பொசித்துக்கொண்டு வர்ழ்ந்திருப்பான். பிறதேசங் கொண்டுச்சென்று அவளுடைய வசமாக ஜீவிப்பன் எ-று.

மைந்தன்தன்னுடனேராகு மதியுடன்மூன்றுபேரும்
அந்தகன்வெள்ளிபார்க்கி லானசாதகர்க்கென்னுளும்
சுந்தரமனையாள்நேத்ரஞ் சூட்சமாமகுடந்தன்னில்
நிந்தனையானபெண்டு மருகனுக்கினியவளென்றே.

இ-ள். சனியுடன் இராகு சந்திரன் இவர்கள் மூன்றுபேரும் எந்த இராசிகளில் நிற்கினும் எதிராகும், பார்வைவீட்டினும் சனி சுக்கிரன் இவர்கள் பார்க்கச் சாதகமானவனுக்கு நாளுஞ் சுந்திரமாகிய மனையாளுக்கு நேத்திரஞ் சூட்சமாகவிருக்கும். அம்மாது மருகனுக்கு இனியாளாகு மென்பர் எ-று. 30

என்றயிக்கிரகத்தோடு வியல்புள்ளகுருவுங்கூடி
நின்றுலக்கினத்தைப்பார்க்கில் நேரிழைபுருடன்செல்வன்
நன்றெனவழைத்துச்சொல்வள் நலமெனவாழ்வதெல்லா
மன்றினில்ராகுகேதாய் வழுத்தலாம்நிசமாமெய்யே.

இ-ள். மேற்கூறிய கிரகத்தினேடு வியாழனுங்கூடி ஜென்மலக்கினத்தைப்பார்க்க நேரிழையாளுக்குப் புருடன் செல்வனுகவிருப்பன். அவள் நன்மையாக அழைத்துச் சொல்லுவள். நன்மையாக வாழ்வதெல்லாம் இராகு கேதுவென வழுத்தலாகு மென்பர் எ-று. 31

அஷ்டமாநலனுமொன்ப தாமிடந்தன்னில்நன்றாய்
திட்டமாய்க்கவரோடேகி லக்கினுதிபனைப்பார்க்கில்
துஷ்டனுஞ்சாதகர்க்குத் தூக்கனுமவன்கையாலே
கஷ்டமாய்வயதீரெட்டில் கடியதோர்மரணஞ்சொல்லே.

இ-ள். அஷ்டமாதிபன் 9-ஆமிடத்தில் நன்மையாகச் சுபக்கிரகங்களுடனேகி ஜென்மலக்கினுதிபனைப் பார்க்கில் சாதகமானவனுக்கு அவனுடைய கைகளினுல் 8-வது வயதில் மரணமாகுவா னென்பர் எ-று. 32

இந்துகதிரிருவருமே லக்கினத்தில்
இன்பமுடன்சுக்கிரனை நோக்கிப்பார்க்கில்
பந்துசெனந்தன்னைவிட்டுப் பிறதேசத்தில்
பாரியவள்பிறந்திடத்தே யிருந்துவாழ்வன்
சந்திரனுங்கேதுமொன்றாய்ப் பொருந்திநிற்கில்
தன்னினத்தைவிட்டகன்று மதமேதப்பி
யுந்தியெனும்வயர்வளர்த்துச் சீவனுர்த்தம்
உகந்துசெய்வான்மதாசாரந் தப்புவானே.

இ-ள். சந்திரன் சூரியன் இவ்விருவரும் இலக்கினத்திலிருந்து சுக்கிரனைப்பார்க்கில் சாதகமானவன் தன்னுடைய பந்து ஜனங்களை விட்டு பிறதேசமாகிய தன்னுடைய மனையாள் பிறந்தயிடத்தில் யிருந்து வாழ்குவன். சந்திரனுங் கேதுவுங் கூடிநிற்கில் தன்னுடைய யினத்தை விட்டுத் தப்பி வேறு மதபேதத்திற் சிக்கி வயறுனது வளர்க்க இதமாகப் பேசி சீவனுர்த்தஞ் செய்குவன் எ-று. 33

பொல்லாதகேதுவுடன் குருவுஞ்சேர்ந்து
பொருந்தியேலக்கினத்தைத் திருந்தப்பார்க்கில்
வல்லாளன்கன்னக்கோல் கையுங்கள்ளன்
வானுமதிலக்கினத்தில் சேர்ந்தேநிற்கில்
கல்லாதவூமையென்று சொல்லலாகுங்
கனக்கலவன்லக்கினத்தா யிணக்கமாகில்
உல்லாசன்சாதகர்க்குத் தேசபாஷை
வுரைப்பதுவேயெழுத்துமிக முரைப்போனுண்மை.

இ-ள். கேதுவோடு குருவானவர் சேர்ந்து ஜென்மலக்கினத்தைப் பார்க்கச் சாதகமானவன் வல்லாளக்கண்டனாகியும் கன்னக்கோல் வைக்குங் கள்ளனாகுவன். சந்திரன் இலக்கினத்தில் சேர்ந்துநிற்க கல்வி கற்காத ஊமையாமெனச் சொல்குவர். புதன் இலக்கினத்திலிருக்கத் தேசபாஷை யாவுங் கற்றுணர்குவன் உண்மைவானாகும் எ-று. 34

திங்கள்ரவியிருவருமே லக்கினத்தில்
திறமுடனேநின்றுநன்றாய் நவகோணத்திற்
பொங்கமுள்ளகுருகணக்க னிருவர்தனைப்
புகழ்ந்துநன்றாய்ப்பார்த்திடில் சாதகன்பிதாவை
சங்கையுடன்விட்டகன்று ஒருவனுக்கே
சடமில்லையானதுபோ லந்தப்புத்திரன்
பங்கமதுசெய்குளிகன் லக்கினத்திற்
பகைத்துநிற்கில்பெற்றவர்க்கு முதவமாட்டான்.

இ-ள். சந்திரன் சூரியன் இவர்களிருவரும் ஜென்மலக்கினத்தில் நின்று நன்மையாக நவகோணமேறி வியாழன் புதன் இவர்களைப் பார்க்கச் சாதகமானவன் தன்னுடைய பிதாவை சங்கையாக விட்டு அகன்று ஒருவனுக்கு அடிமையாளாகுவன். குளிகன் இலக்கினத்தி லிருக்கப் பகையாகச் சாதகன் பெற்றவர்க்கு உதவமாட்டானென்பர் எ-று. 35

நல்லவனுஞ்செவ்வாபு மொன்றாய்க்கூடி
நாலாறிலெட்டுமிந்த மூன்றுவீட்டில்
செல்லவனைலக்கினத்திற் குளிகன்புந்தி
சேர்ந்துநன்றாய்ப்பார்த்திடவே செல்வன்தானும்
வெல்லவன்றன்திசைவிடுதி யானகாலம்
வேண்டியதோர்பொருளழிந்து களத்திரனு
மில்லறமேதானிழந்து விசனத்தாலே
யின்பமுடன்காஷாய மன்பாய்க்கொள்வன்.

இ-ள். சுபக்கிரகமும் செவ்வாயும் ஒன்றாகக்கூடி 4-6-8 இந்த மூன்று வீட்டினும் நிற்க, இலக்கினத்தில் குளிகன் புதன் இவர்கள் சேர்ந்து பார்க்கச் சாதகனுக்கு மேற்கூறிய கிரகங்களின் திசையானது விடுதியாகுங்காலம் வேண்டிய பொருளானது களத்திரத்தினால் அழிந்தும், இல்லறத்தை யிழந்தும், விசனமானது பெருகி காஷாயந் தரித்துத் திரிகுவானென்பர் எ-று. 36

சென்மத்திற்சனியிருந்து நாலுமிரெட்டில்
செவ்வாயைத்தான்பார்க்கில் செகமேமெய்க்க
யின்மையிலேவகண்ட சாம்பிராச்சியயோக
மெழுநான்குவயதுவிட்டு யோர்க்குங்காலம்
சின்மயமாம்சிவயோகம் யோகநிஷ்டை
செய்யவல்லான்சிவசொத்துக் கதிகனல்லான்

மின்மயமேனிசமிது தப்பாதென்றும்
மியம்பிடுவாய்சாதகர்க்கு மின்னங்கேளே.

இ-ள். ஜென்மலக்கினத்தில் சனி நிற்க 4-ஆமிடத்திலும், 5-ஆமிடத்திலும், 8-ஆமிடத்திலும் செவ்வாயைப் பார்க்கச் சாதகமானவன் இந்தஜெகமானது மெய்க்க இம்மையில் அகண்ட சாம்பிராஜ்ஜியயோகம் 28-வயதிற்குமேல் சிவயோகம் போகநிஷ்டை இவைகள் செய்ய வல்லவனாகும். சிவசொத்துக் கதிக நன்மையுடையவன். இதிற் கூறிய பலாபலன்கள் யாவுந் தப்பாதென்று சாதகர்க்கு இயம்புவாய். ஆகினும் இன்னமுங் கேளும் எ-று. 37

கேளுநீசெவ்வாயில் குருதான்சேர்ந்து
கேதுமேலக்கினத்தி லிருப்பானாகில்
வூளுமேலவிவிலகித் தவவேடத்துக்
குடையவனாய்க்கிரிதன்னிற்சென் றுகந்துவாசம்
ஆளுமேயில்லாத குகைக்குள்நேச
மடங்கியிருந்தேகற்ப மருந்தவல்லான்
நாளுமேவெகுகால மிருப்பானென்று
நாட்டிடுவாய்சாதகர்க்கு நான்முகனார்விதியே.

இ-ள். செவ்வாயுடன் குருவானவர் கூடிநிற்கக் கேதுவானவர் இலக்கனத்திலிருக்கச் சாதகமானவன் இல்லறத்தை விட்டுத் தவவேடம் பூண்டு மலையினிடமாகச்சென்று வாசஞ்செய்வதுமன்றி குகைக்குள் ளடங்கிக் கற்பங்களைப் புசித்து வெகுகாலம் ஜீவனோடு யிருப்பானென்பர் எ-று. 38

விதியானலக்கினத்தில் குருவுங்கேதுவும்
விரும்பியிந்தவறுனைகில் ஏழில்நன்றாய்
மதியோனுங்கணக்கனுமே ஒன்றாய்ச்சேர்ந்து
மருவியேலக்கினத்தைப் பார்ப்பானாகில்
கதிரோனுக்குடையதலை போலேவுள்ளக்
களத்திரகாரகங்கள் ஏழுமொன்றாய்ச்
சதிராகவைத்திணக்க மாகவாழ்வன்
சத்தியமாங்குருவினுட சாட்சிதானே.

இ-ள். ஜென்மலக்கினத்தில் குருவும் கேதுவும் கூடிநிற்க 4-7-இந்த ஸ்தானங்களில் சந்திரனும் புதனும் ஒன்றாகச் சேர்ந்து இலக்கினத்தைப்பார்க்கச் சாதகமானவன் கதிரோனுக்குடையகலைபோலுள்ள களத்திரங்கள் ஏழும் இணக்கமாக வைத்துக்கொண்டு வாழ்குவன், இம்மொழி சத்தியமாகும்; குருவினுடைய சாட்சியாகுமென்பர் எ-று. 39

தானிந்தப்படியேமூன்றுந் தாபரந்தனிலேவொன்றிற்
பானுவுங்கூடிலக்கி னுதிபன்தன்னைப்பார்க்கில்

கோனவன்பணியலேவா தேவிதிரவியங்கொடுக்கல்வாங்கல்
ஆனவன்லட்சங்கோடி திரவியத்ததிகமாவன்.

இ-ள். இந்தப்படியாக மூன்றுந் தாபரந்தனிலொன்றில் சூரியன் கூடி லக்கினுதிபதியைப் பார்க்கச் சாதகமானவன் இந்திரனைப்போலும் குபேரனைப்போலும் திரவியங்கள் கொடுக்கலும் வாங்கலுமாக இலட்சங்கோடித் திரவியத்திற்கு அதிகமாகப் படைத்து வாழ்குவான் என்பர் எ-று. 40

பிறந்தலக்கினத்திற்புந்தி யந்தகனிருவர்கூடி
சிறந்துதான்மூன்றுபேருஞ் சிறக்கவேநவகோணத்தி
லரன்துதிசெய்வானன்று யாதித்தன்செவ்வாய்கூடிற்
றிரந்துமேநிசமாமென்று திறக்கவேவுரைக்கநன்றே.

இ-ள். ஜென்மலக்கினத்தில் புதனும் சுக்கிரனுங் கூடிநிற்க மூன்று கோட்கள் நவகோணத்திலிருக்கச் சாதகமானவன் அரன் துதிகள் செய்குவன். சூரியனுஞ் செவ்வாயுங் கூடிநிற்க திறமையுடையோன் இது நிசமாகுமென்று கண்டுரைக்கவும் எ-று. 41

நன்றெனும்லக்கினு திபனிடத்தில்
நலமெனுங் குருமதியிருவர்
நின்றிடிலிவரை ரெட்டினிற்கேது
நிந்தனைசெய்தவர் பகைக்கிற்
குன்றெனுங்கூக மரத்திலும்வீழ்ந்து
குடிலமாய் மரணமென்றுரைக்க
யென்றுநீபேச சாதகன்றனக்கு
யியல்பிது விதிமுறைப்படியே.

இ-ள். இலக்கினுதிபனுடன் வியாழன் சந்திரன் இவர்கள் கூடி நிற்க இவர்களை 8-ஆமிடத்து கேது நிந்தனையாகப் பகைத்து நிற்கச் சாதகமானவன் மலையின்மீதேறியும் கூபங்களிலும் மரமீதிலும் ஏறி விழுந்து மரணமாகுவன். இவ்விதமாக விதிமுறைப்படி யுரைக்கவும் எ-று. 42

நிசமெனும்லக்கி னுதிபனிடத்தில்
நிந்தனைக்குடையகோ ளகனும்
விசமெனுராமகர்க்கு மிருவருஞ்சேர்ந்து
விருப்பமாய்நாலினிற் குருவை
வசமெனப்பார்க்கில் மத்தளமெனும்யோக
மண்டலமதனிலுறை நிறையாகி
பசையறத்தீரா தாரித்திரசாலி
பகரலாமாதியு மந்தம்.

இ-ள். நீசமடைந்திருக்கும் இலக்கினுதிபனிடத்தில் நிந்தனை விளைவிக்கும், கோளகனும் ராமகர்க்கும் இருவர்கள் சேர்ந்து நிற்க

4-ஆமிடத்தில் நின்ற குருவைப் பார்வைபார்க்கச் சாதகமானவனுக்கு மத்தளயோகமானது பெருகி பூமியின்கண் உறையும் நிறையுமாகி தீராத தரித்திரசாலியாக ஆதியிலும் அனித்தியத்திலு முண்டாம் எ-று. 43

இடுக்கமானுகி யேழரைக்குடையோன்
இந்துவுமதியுடன் சேர்ந்து
அடுக்கவேரெண்டா மிடத்திலிருக்க
அடுத்தலக்கினத்திற் செவ்வாய்
தொடுக்கவேசாதகன் தனக்குமுன்னுளிது
தொகையிலாவேணதோர் செம்பொன்
கொடுக்குமேவாதி கன்னியும்பூப்போல்
கெருவமாம் வாழைப்பூயோகம்.

இ-ள். 7-ஆமிடத்திற் குடையோனுஞ் சந்திரனுஞ் சேர்ந்து 2-ஆமிடத்திலிருக்க, இலக்கினத்தில் செவ்வாயிருக்கச் சாதகமானவனுக்கு முன்னுளில் தேடியதொகை யில்லாத செம்பொன் கொடுக்கும், கன்னியரும் பூப்போ லழகுடையதாகும், கெருவிக்கும்படியான வாழைப்பூயோகம் வாய்க்குமென்பர் எ-று. 44

ஆதித்தன்குருவுஞ்செவ்வா யாகயிம்மூன்றுபேரும்
நீதித்தலக்கினத்தில் நின்றுமேயீராறில்தான்
பேதித்தகுளிகன்ராகு பெரியவர்பார்ப்பாராகிற்
சாதித்தசாதகர்க்குத் தமரகயோகம்பேசே.

இ-ள். சூரியன் குரு செவ்வாய் இவர்கள் மூன்றுபேரும் ஜென்ம லக்கினத்தி லிருக்க 12-ஆமிடத்தில் குளிகன் இராகுவுடன் பெரிய கோட்கள் பார்க்கில் சாதகமானவனுக்குத் தமரயோகமாகுமென்பர் எ-று. 45

வெள்ளியும்ராகுகேதும் விரும்பியேமூன்றுபேரும்
உள்ளியலக்கினத்தி லுற்றதோர்மதிதான்சேரிற்
கன்னியாம்ஸ்திரீகள்தன்னுற் கடியதோர்மரணமென்று
தெள்ளியதமிழிந்நூலின் செய்கையிப்படிநீபேசே.

இ-ள். சுக்கிரன் இராகு கேது இவர்கள் மூன்றுபேரும் சேர்ந்து நிற்க, இலக்கினத்தில் சந்திரனிருக்கச் சாதகமானவன் ஸ்திரீகளினுல் மரணமடைகுவன் என்றும் தமிழாகிய இந்நூலின் செய்கையைக் கொண்டு சாதகர்க்கு வேண்டுமென்பர் எ-று. 46

செப்பமாம்லக்கினத்திற் செவ்வாயுஞ்சனியுங்கூடி
வொப்புறவாகவேதா னுற்றதோர்குருவைப்பார்க்கில்
தப்பறமதனிலுள்ள தணலிலேவிழுந்துசாவன்
இப்படிசாதகர்க்கு யியல்பிதுவிதித்தவாறே.

இ-ள். ஜென்மலக்கினத்தில் செவ்வாய் சனி இவர்கள் கூடிநின்று உறவாகக் குருவைபார்க்கச் சாதகமானவன் தணலில்விழுந்து சாகுவன். இப்படியாக அயன் விதித்தவாறுகுமென்பர் எ-று. 47

வாறெனும்லக்கினத்தில் வியாழனும்புதனுங்கூடி
ஆறெனில்நாலிலெட்டி லாதித்தன்மதிபுஞ்சேர்ந்து
நேரெனப்பார்ப்பாராகில் நேர்த்தியாய்மாடன்றன்னை
கூறெனப்படுக்கையோடும் கோமணத்தாண்டியாகுவன்.

இ-ள். இலக்கினத்தில் வியாழனும் புதனும் கூடிநிற்க 6-4-8-ல் சூரியனும் சந்திரனும் சேர்ந்துபார்க்கச் சாதகமானவன் மனையிடத்துப் படுக்கையோடு கோமணத்தாண்டி யாகுவானென்பர் எ-று. 48

அன்புடையலக்கினத்தி லாதித்தோனும்
ஆறிருநான்கதுகுருவை யன்பாய்ப்பார்க்கில்
இன்பமுள்ளசாதகன்று னுடையோர்பூசை
யியல்புவிதிப்படிமுறையின் செயல்தப்பாமல்
துன்பமதுயறுபதுக்கப் பாலேயப்பால்
துயரமதிலழுந்துவது வருஷம்மூன்று
செம்பொன்மணிவட்டகையில் வெள்ளித்தூவும்
செய்யவல்லானிவனெனவே செப்புவாயே.

இ-ள். ஜென்மலக்கினத்தில் சூரியன் நிற்க, 6-8-க் குடையவர் குருவைப் பார்க்கில் சாதகமானவன் உடையோர் பூசை புரிகுவன். இவன் தனக்கு விதிமுறைப்படி தவறுமல் அறுபதுவயதுக்கப்பாலும் துயரத்தில் மூன்றுவருட மழுந்தும்படிச் செய்கும். செம்பொன் வட்டகையும் வெள்ளித்தூவும் செய்ய வல்லவனிவனுகுமென்பர் எ-று. 49

லக்கினத்துக்கீராறிற் செவ்வாயோடு
நலமானசூரியனும் புதனுஞ்சேர்ந்து
விக்கினமாமிருமூன்று வாறில்ராகு
விடையமுள்ளசனியதுதா னிருனுன்கேறில்
பக்குவமாமீராறு வயதுக்குள்ளே
பாதகன்சாதகன்றனுந் தாய்க்குக்கருமஞ்செய்வான்
திக்கெனுமோனைந்தினிற் சந்திரன்றுன்சேரில்
திசையோகபலனெனவே செப்பலாமே.

இ-ள். ஜென்மலக்கினத்திற்கு 12-ஆமிடத்தில் செவ்வாயுடன் சூரியனும் புதனும் கூடிநிற்க, 6-ஆமிடத்தில் இராகு நிற்க, சனி 8-ஆமிடத்திலிருக்கச் சாதகமானவன் 12-வயதுக்குள் தாய்க்குக் கருமஞ் செய்குவன். 5-ஆமிடத்தில் சந்திரனிருக்க அவருடைய திசை யோகபலனுகும் எ-று. 50

ஆமிந்தலக்கினத்தி லாறுமீராறிலேதான்
நேமிந்தக்குருவினேடு நேமியாய்ப்பானுவோனும்

சேமிந்தமதியோன்பார்க்கிற் செல்வனுகுஞ்சாதகர்க்கு
நாமிந்தப்படியேசொன்னேம் நாலாறுவயதில்யோகம்.

இ-ள். இலக்கினத்திலும் 6-12-ஆமிடத்திலும் வியாழன் சூரியன் இவர்கள் நிற்க அவரைச் சந்திரன் பார்க்கச் சாதகமானவனுக்கு வயது 24-க்குமேல் யோகம் உண்டாகி, யாவரும் புகழ வாழ்குவனெனப் புகன்றனர் எ-று. 51

ஈரைந்திற்செவ்வாய்கேது யிருவருங்கூடிநின்றால்
பாரைந்துலக்கினநாதன் பானுவுஞ்சனியுஞ்சேர்ந்து
நேரைந்துகிரகவீட்டில் நேத்தியாயிருப்பானுகில்
கூரைந்துபெற்றேவல்ல குபேரனுய்வாழ்வானென்றே.

இ-ள். இலக்கினத்திற்கு 10-ஆமிடத்தில் செவ்வாய் கேது இவர்களிருக்கினும், 5-க்குடையோனுடைய வீட்டிலிருக்கச் சாதகமானவன் குபேரனைப்போல் வாழ்வுண்டாகி வாழ்குவன் எ-று. 52

குருவினிலேழுவிந்து குளிகனுக்காறுசெவ்வாய்
தருவெனுங்கேதுகேட்டுத் தரணியில்நவமேயாகி
வுருவெனும்பத்தானகேது வுகந்தோர்மந்தன்மூன்றும்
திருவெனும்சுகமாய்விந்து திருந்தவேகெணிதம்பேசே.

இ-ள். குருவிற்கு 7-விந்தும், குளிகனுக்கு 6-ல் செவ்வாயாகவும், கேதுவிற்கு 8-ஆகவும் நவமாகவும் 10-ஆகவும் நின்ற கேதுவும், சனி மூன்ருகவும் இவர்கள் விந்துகளைக்கொண்டு கணிதமானது பேசவும் எ-று. 53

பேசிடுந்தீயோனிந்தப் பெருமையேகுருவுக்கொப்பாம்
மேசமாம்வெய்யோனிந்த மேதியாமிதற்குத்தாழ்வாய்
பாசமாமைந்துநான்கில் பறலதுகுறையுமானுல்
நாசமாஞ்சகலவாஸ்தி நஷ்டமாமெனநீபேசே.

இ-ள். பேசும்படியான தீயோர்கள் குருவினுக்கொப்பாகும், சூரியனுக்குத் தாழ்வாகும். புதன் இதில் 5-4-இவைகளில் பறலானது குறையில் ஜாதகனுடைய சகல ஆஸ்திகளும் நஷ்டமாகப் போகுமென்பர் எ-று. 54

லக்கினத்துக்காறுபற லதிகமாகில்
நரவாகனங்களென நாட்டலாகுஞ்
சுக்கிரனுக்கேழெட்டுக் கதிகமாகிற்
சுகவிந்தாகும்தண்டிகை யெக்காளயோகம்
அக்கிரமக்காரகனெனும் கேதுக்கீராறு
வப்பாலுங்கெசகரண யோகமாகும்
விக்கினங்கள்செய்குளிக னவவிந்துக்கு
விந்துசேரில்மத்தளமாய் விரும்பிப்பேசே.

இ-ள். இலக்கினத்திற்கு 6-பறலதிகமாகில் நரவாகனங்கள் உண்டாகும். சுக்கிரனுக்கு 7-8-க்கு அதிகமாகில் சுகவிந்தாகும். தண்டிகை கிடைக்கும் காளயோகம் பெருகும். அக்கிரமக் காரகனெனுங் கேதுவிற்கு 12-ல் கெஜகரணயோகமாகும். விக்கினம்படுத்திய குளிகனுக்கு 9-ஆம் விந்ததிகமாகில் மத்தளயோகமாகும் எ-று. 55

மந்தனுக்குயைந்துபற லதிகமேறில்
 மந்திரியாந்தமரகத்தின் யோகமாகும்
தந்திரவானெனுங்கணக்கன் மூன்றுக்கப்பால்
 தனநிதியன்வானுமத்தில் குபேரன்போலாம்
இந்தவிதம்ராகுவுக்கு யிருநான்குக்கப்பால்
 எக்காளயோகமென யியம்பலாகும்
மந்திரவானெனப்பேசு பொய்யீரைந்தில்
 வழூத்திடுவாய்சாதகர்க் கிவ்வகைவிபரமென்றே.

இ-ள். சனிக்கு 5-பறல் அதிகமாக யேறில் தமரகயோகம் என்பர். புதனுக்குப் பறல் மூன்றுக்கப்பால் யேறில் தனமானது பெருகி குபேரன்போல் வாழ்குவன். இவ்விதமாக இராகுவிற்கு 8-க்கப்பால் எக்காளயோகமாகும். மந்திரவாதியெனப் பேசவேண்டில் 10-ஆகும். இவ்வகையாகப் பறல்களைக் கண்டுரைக்கவுமென்பர் எ-று. 56

என்றிடும்பறல்களெல்லா மியல்பதும்படிதப்பாது
நன்றதாமுன்னேசொன்ன நற்மொகையதில்தாழ்வாகில்
மன்றினிற்பசியினாலே வயற்றுக்கும்சோறில்லாமல்
நின்றவனிரந்துண்பானாய் நிச்சயமுரைக்கலாமே.

இ-ள். கூறிய பறல்களில் யாதொன்றுந் தப்பாது. முன்பு கூறிய தொகைகளில் தாழ்வாகில் சாதகன் இத்தரையின்மீது பசியினாலும், வயற்றுக்கும் அன்னமில்லாமலும் ஐயமெடுத்து உண்பானாகும் எ-று.

ஆமெனுமிராமதேவ ரூருடமுதலாயுள்ள
நாமெனுமுரைத்தநூறி லிரண்டையுந்திறவுகோலாய்
தாமெனுமிந்தநூலைத் தாரணிதனிலுள்ளோர்க்கு
நேமெனுமுரைத்தோம்பார்த்து நேத்தியையறிந்துசொல்லே.

இ-ள். இராமதேவர் கூறிய ஆரூடமுதலானதிலுள்ள பாடல்கள் நூறில் இரண்டையும் திறவுகோலாகவும் இந்நூலைப் பூமியின்மீதுள்ள மானிடர்களுக்கு வேணுமென்று உரைத்ததைப் பார்த்து ஜாதகர்க்குச் சொல்லவும் எ-று. 58

சொல்லவென்றாலிந்தநூ லைந்துபத்தும்
 சொக்விந்துமுதலாகக் கெணிதம்பார்த்து
வெல்லவென்றால்மனக்கவச மாகச்செய்து
 வேந்தனிடவாதுசொல்லிக் குறிப்புவேண்டும்



அல்லவென் றுநினையாதே யிதுபொய்யாது
வப்பனேலட்சணவா ருடம்பாரு
தொல்லையொன் றுமில்லைவிடு அங்கரேகை
தோகையர்கள்புருடனுக்கும் தொகைசொன்னோமே.

இ-ள். சொல்வதற்கு இந்நூலில் ஐந்து பத்துமுள்ளவிந்து முதலாகக் கணிதங்களைப் பார்த்து அதை வெல்ல மனக்கவசமாகச் செய்து வேந்தர்களிடத்தில் வாதுகளானதுபேசிக் குறிப்பறிந்து சொல்க வேண்டும். இந்நூலைப் பொய்யென்று நினைக்கவேண்டாம். மானிடராகிய ஆண்பெண் இருவர்களுக்கு முண்டாகிய இலட்சணவாருடங்கள் பார்க்க யாதொரு தொல்லையுமில்லை. அங்கத்திலுள்ள ரேகைகள் ஸ்திரீ புருஷாள் இருவருக்கும் தொகைகள் சொன்னோம் அறிவாயாகவும் எ-று. 59

## இராமதேவர் கிரகலக்கின சாதகம்

முற்றிற்று.

---



சிவமயம்

ஏழாவது

# பெண்பால் ஆரூடலட்சணம்-101



## காப்பு

பாதமகள்முதற்கேசாதி பாவகமுதலாயுள்ள
நீதமகள்கால்கைரேகை நெடியதோர்நடைகள்வாசம்
போதமகள்குணங்கள்சத்தம் போக்கெனுஞ்சுழிகளெல்லாம்
வேதமகளனைத்துஞ்சோதித் திந்தநூல்நூற்றைப்பாரே.

இ-ள். பெண்பாலாகிய ஸ்திரீகள் பாதமுதற் கேசாதிபரியந்தமுள்ள கால் கை ரேகைகளும், உயரமும் நடையும் வாசமும் குணங்களும் சத்தமும் சுழிகள் முதலானதும் எளிதில் கண்டு பலாபலன் அறியும் பொருட்டாய் வேதாகமங்களைச் சோதித்து இராமதேவர் அவர்களால் திருவாய்மலர்ந்தருளிய இந்நூல் இருநூற்றைப் பார்க்கவும் எ-று. 1

## நூல் வரலாறு

பாருநீகால்கைரேகை பார்த்திடுசுழிநீர்சுத்தம்
கூறுநீயறிந்துயோகங் குணமதுவாயுள்தீர்க்கம்
தேறுநீசகலநூலுந் தெரிந்தசோசியத்தினுண்மை
வேறுநீபார்க்கவேண்டாம் வேண்டினேனிராமதேவன்.

இ-ள். பார்ப்பது கால் கை ரேகைகளும் சுழியும் சுத்தமும் யோகம் குணம் ஆயுட்தீர்க்கம் இவைகள் முதலானதும் கண்டுணர பற்பல சோதிடங்களைப் பார்க்கும்படியாக இராமதேவர் அருளிச் செய்தனர் எ-று. 2

கேந்திரகோணந்தன்னிற் கிளர்குருவிருசுங்கன்
சார்ந்திடவித்தையெல்லாம் வித்தையாம்நாலாந்தானம்
வாய்ந்தலக்கினத்திறைத னறிவொடுபிலவானுகில்
வாய்த்திடுங்கெணிதமென்னில் வரும்பலன்சொல்குவானே.

இ-ள். கேந்திரகோணத்தில் வியாழனிருக்க, சுக்கிரன் அவருடன்கூட, சகலவித்தையும் பலிதமாகும். நாலாந்தானத்தில் இலக்கினுதிபதி பெலவானுகி நிற்கச் சாதகமானவன் கணிதசாஸ்திர வல்லவனுகிவரும் பலன் யாவுஞ் சொல்குவன் எ-று. 3

சொல்லுவானைந்தாம்வீட்டிற் சூட்சமமூன்றுபேரும்
சொல்லுவாரிவரேயாகிற் செல்வன்சாதகர்க்குநல்ல

வெல்லவேயன்னியபாஷை வித்தையிலதிகயூகி
வல்லவனிவனேயென்று வழுத்தலாந்தரணியோர்க்கே.

இ-ள். ஜென்மலக்கினத்தில் 5-ஆமிடத்தில் சூட்சும கோட்கள் மூன்றுபேரும் இவர்களேயாகில் சாதகமானவனுக்கு நன்மையாகியும், வெல்லத்தக்க அன்னியபாஷையாகிய வித்தையில் அதிக யூகியாகியுமிருக்கத்தக்க வல்லவனுகுமென்பர் எ-று. 4

பஞ்சமெல்லடியாள்தானும் பங்கயநிறத்தாளாகும்
நஞ்சணிகண்ணினுர்க்கு நற்படமகலுமாகிற்
தஞ்சமெல்லடிபணிந்து சாலவேபொருந்திடாகில்
நஞ்சவளணையவேண்டாம் நல்லதோர்வேசியாமே.

இ-ள். பஞ்சிமெல்லடியாளாகியும் தாமரைபோன்ற நிறமுடையவளாகியும் விளங்கும் இம்மாதினுக்குப் படமானது அகண்டிருக்குமாகிலும், பாதமானது பூமியில் பொருந்தாமலிருக்கினும், அம்மாது நஞ்சுக்குச் சமானமானவளாகும். அவளை ஒருபோதும் அணையப்படாது வேசியாவாளென்பர் எ-று. 5

ஆமெனுமிதுபொய்யாது அப்பனேஇராமதேவன்
நாமெனுமுரைத்தரெண்டு நூறினிற்சகலதெல்லாம்
நாவெனுங்கிரகசாரம் நாகரீகங்களாக
சாமெனுமந்தநாளும் சாதகமடக்கங்கேளே.

இ-ள். மேற்கூறிய பலன்கள் யாதேனும் பொய்யாது. அன்றியும் இராமதேவர் உரைத்த பாடல் இரண்டுநூறிலுள்ள சகலமானதிலும் கிரகங்களின் சாரமும் நாகரீகமும் மரணநாட்களும் இவைகள் முதலானதும் அடங்கச் சாதகங்கேளும் எ-று. 6

கேளுநீகிரகசாரம் கெணிதத்தின்பலன்களெல்லாம்
ஆளுநீலக்ஷணத்தி னூருடந்நனைவெல்லாது
வீளுநீவிதியின்மார்க்க முற்றதோருரைகளெல்லாம்
வாளுநீ அதிஷ்டயோகம் வாழ்க்கையுமுரைசெய்வாயே.

இ-ள். கிரகசாரத்தைக்கொண்டு கெணிதத்தின் பலன்களை யாவும் லட்சணங்களும் ஆரூடத்தை வெல்லமாட்டாதாகும் விதியினுடைய மார்க்கமாகிவிளங்கும் அதிஷ்டமும் யோகமும் வாழ்க்கையும் சொல்கவேண்டும் எ-று. 7

நெட்டெனநடக்குமென்றும் நீண்டதோரடிகள்தன்னை
திட்டெனநிலத்தில்வைக்கும் சீரடியுடையாளென்னு
மட்டவிழ்கோதைதன்னை மனைவியென்றுணரவேண்டாம்
அட்டதிக்குரியபூவி ளவர்பெறக்குறியாளாதே.

இ-ள். நெட்டையாக நீண்ட அடிகளுமாகி திட்டெனப் பூமியின் மீது வைக்கும்படியான அடியாளுமாகத் தோன்றும் மாதினை மனையாளென்று நம்பவேண்டாம் விபசாரியாமென்பர் எ-று.

வேம்புகற்றாழைபோல வெடிபடநாறுமாகில்
தாம்புலால்வாசம்வீசுமத் தையலைவிவாகம்வேண்டாம்
சோம்புகொட்டாவிநெட்டி சுடக்கிடுக்கமேசொல்வாளை
பாம்பவளிருந்தவீடு பாழெனப்பகரலாமே.

இ-ள். வேம்புபோலவும் கற்றாழைபோலவும் நாற்றம் நாறுமாகி னும் அல்லது புலால்நாற்றம் வீசினும் அம்மாதை விவாகம் செய்ய வேண்டாமென்பர். சோம்பலுடையவளாகியும் கொட்டாவியும் நெட் டையும் விடுபவளும் இடுக்கமாகிய சொற்கள் பகர்பவளும் வாழ்கின்ற மனையானது பாம்புக்குச் சமானமாகப் பாழாகும் எ-று. 9

உந்தியிற்சுழிதானொன்று வுற்றதோரிடமாய்சுத்தில்
நிந்தனைக்கிடமாய்நீச்சப் பறையனைநேசமாகச்
சந்தித்துப்பணிந்துசேர்வாள் சாதகமிதுபொய்யாது
வந்திக்கச்சுழியின்றன்மை வருத்தல்திருத்தம்பேசே.

இ-ள். உந்தியினிடமாகச் சுழியானது தோன்றி இடமாகச் சுற்றிக்கொண்டு இருக்குமாகில் அம்மாது யாவரும் பகைக்கும்படி நிந்தனையாகிய சொல்லுக்கிடமாகி நீச்சப்பறையனை நேசமாகப் பணி ந்து சேர்குவள். இச்சாதகம் கிஞ்சிற்றேனும் பொய்யாது. சுழியி னுடைய தன்மையைத் திருத்தமாகப் பேசவும் எ-று. 10

இடையதுதேய்ந்துகொங்கை யிருந்துமுன்னடியைப்பார்க்கில்
கடைபெருங்கைம்பெண்ணாளுங் கருமையிற்சிவந்ததாகிற்
புடைபரந்தெழுந்துபொங்கி பூரித்ததனங்களாலும்
துடையகன்றிருந்தாலுந்தான் துக்கமேவிளைக்குமென்றே.

இ-ள். ஸ்திரீகளுக்கு இடையானது தேய்ந்து கொங்கையானது முன் அடியைப்பார்க்குமாகில் கைம்பெண்ணாகும்; கருமையாகவிருக் கும்; மயிரானது சிவப்புநிறமாகத் தோன்றினும் பெருத்து யெழுந் துப் பொங்கிப் பூரித்து விளங்கிய ஸ்தனமாகியும் துடை அகன் றிருக்குமாகில் அம்மாதினுக்கு எந்நாளும் துக்கமே பெருகுமென்பர் எ-று. 11

புள்ளிமான்வயற்றைப்போலும் வயற்றவள்பூமியாளும்
வள்ளலைச்சேருமென்க வயறுதான்பரந்ததொப்புள்
வுள்ளியவுரையுநாளு முரோமங்களுயர்ந்துதோன்றில்
கள்ளழகுழலினாளுங் கணவனைவிட்டுப்போவாள்.

இ-ள். புள்ளிமானினுடைய வயற்றைப்போலும் வயற்றினை யுடைய மாது உலகத்தை யாளும்படியான அரசனைச் சேர்குவள். வயறானது பரந்து தொப்புள் உறைந்தும் உரோமமானது உயர்ந்து மிருக்குமாகில் அம்மாதானவள் தன்னுடைய கணவனைவிட்டுப் பிரிந்துபோய் விடுவாளென்றனர் எ-று. 12

போவதுநிசம்பொய்யாது பொருந்துசாதகத்தின் தீர்க்க
மாவதுயிதைையென்செய்யு மாரூடமிதுவேதீர்க்கம்
சாவதுலக்கினத்தின் சந்திரனுற்றபேர்க்கு
மேவதுயளவுநாலா மென்னவேதீர்க்காயுளாம்.

இ-ள். மேற்கூறியவண்ணம் யாவும் பொய்யாது. சாதகத்தின் தீர்க்கமாவது இதையென்செய்யும்? ஆரூடமானது இதுவே தீர்க்கமாகும். இலக்கினத்தில் சந்திரன் நின்ற சாதகர்க்கு நடப்பது அளவு நாலாகவும் தீர்க்காயுளாகு மென்றனர் எ-று. 13

ஒன்றினிலொன்றுகூடா துயர்ஸ்தனமகலுமாகிற்
குன்றுபோல்நேசாலக் குரும்பைபோல்தனங்கள்விம்மி
யொன்றியவிரல்கள்நான்கு முட்குறத்தாக்குமாகில்
மன்றினிற்பசியால்நொந்து வாழவேதவிப்பாளென்றே.

இ-ள். ஒன்றுக்கொன்று கூடாமல் ஸ்தனமானது அகன்றிருக்குமாகின் குன்றைப்போலும் குரும்பைப்போலும் தனமானது விம்மி விரல்கள் நான்கும் முட்டித்தாக்குமாகில் அம்மாது பூமியின்மீதினில் பசியினல் நொந்து வாழ்கத் தவிப்பாளென்பர் எ-று. 14

என்றிடுந்தனங்கள்ரெண்டி லிடைபக்கஞ்சிறுத்துநெஞ்சு
வொன்றதுகுன்றுமாகி லுற்றதோர்வேசியாகும்
நன்றெனவிரல்தானொன்று நாடியேபொருந்துமாகில்
மன்றினிற்கிரீடாதிக்கு மனைவியாய்வழுத்தலாமே.

இ-ள். கூறிய ஸ்தனங்கள் இரண்டும் இடதுபக்கம் சிறுத்து நெஞ்சானது ஒன்று குன்றுமாகினும் வேசையாகுவள். விரல்களில் ஒன்று பொருந்துமாகில் பூமியின்மீது கிரீடாதிபதிக்கு மனைவியாகுவாளென்பர் எ-று. 15

நெஞ்சகமுலைகள்தானும் நிமிர்ந்துநீண்டுயருமாகில்
வஞ்சகமடந்தையாவள் வற்றியமார்பதாகிற்
றஞ்சமொன்றுடனிவ்வாமந் தவறியேயிருக்குமாகில்
நஞ்சவளணையவேண்டாம் நல்லதோர்வேசியாமே.

இ-ள். ஸ்தனங்களானது நிமிர்ந்து நீண்டு உயர்ந்துமிருக்குமாகின் வஞ்சகமுடைய மாதாகுவள்; வற்றிய ஸ்தன்னியமாகியும் அதில் ஒன்று வாமபாகத்தில் தவறியிருக்குமாகின் அம்மாதினை நஞ்சுக்குச் சமமாகயெண்ணி அவளை யணையவேண்டாம். தப்பாமல் வேசியாகத் திரிகுவாளென்றனர் எ-று. 16

கைவிரலைந்துதன்னைக் கலந்துதானளந்துநூலை
நைவரைமுழங்கைதொட்டு நடுவிரலளவுநீளிற்
பையரவல்குலாளும் பார்தனக்கரசன்பாரி
ஐவிரலொன்றுதாழி லரசனுக்கமைச்சன்பாரி.

இ-ள். கைகளிலுள்ள ஐந்துவிரல்கள் தன்னையும், நூல் கயிறு கொண்டு அளந்து அந்நூலை முழங்கைத்தொட்டு நடுவிரல் அளவாகப் பார்க்கில் நடுவிரலுக்கு அதிகமாக நீண்டிருக்குமாகில் அம்மாது பூமி யாளப்பட்ட அரசனுடைய பாரியாளாகுவள். ஐந்து விரலுக்கு ஒன்று தாழ்ந்து குறைவாக யிருக்குமாகில் அரசனுடைய மந்திரிக் குப் பாரியாளாக விருப்பாளெனக் கூறுகின்றனர் எ-று. 17

அடியிறையளவதாகி லருஞ்சமன்வாழ்வுண்டென்றும்
நடுவறையளவதாகில் நன்மையேமிகவுண்டாகும்
படியமத்திக்கில்வந்தால் பலனிலாமிடிகளாகி
கொடியதோர்புண்கள்தன்னால் குவலயத்தழுந்துவாளே.

இ-ள். மேற்கூறியவண்ணம் அளந்தநூல் கயிறானது நடுவில் அடிபிறைவரைக்கும் யிருக்குமாகில் அம்மாதுக்கு நன்மையானது மென்மேலு முண்டாகும். மத்திய அளவாகத்தோன்றில் யாதொரு பலனுமில்லாமலும் மிடியாளாகியும் பூமியின்மீது துக்கப்படுகுவா ளென்பர் எ-று. 18

கண்ணினையொருபால்நோக்கிற் கணவனைவிட்டுப்போவள்
திண்ணிவள்வட்டக்கண்ணி ளுள்பெரும்பாவியாவள்
நண்ணியகயலைப்போல நயனத்தில்மருவுத்தானிற்கில்
பெண்ணிவள்பெருத்துவாழ்வள் பெருந்திருவாட்டியாமே.

இ-ள். கண்களுடைய பார்வையானது ஒருபாலாக நோக்கில் அம்மாது தன்னுடைய கணவனைவிட்டுப் பிரிந்துபோகுவள். வட்ட வடிவமாகக் கண்ணினையுடைய மாது பெரும்பாவியாகுவள். கயல்போ லுடைய நேத்திரத்தில் மருவானது தோன்றுமாகில் அம்மாது பெருத்த வாழ்வானது வாழ்குவளென்பர் எ-று. 19

மறுவதுதோளின்மூக்கின் மதிமுகந்தன்னிற்றோன்றில்
செறிதருக்குள்ளேமிக்க சீறியவிழியில்கூடி
குறியதுயிடதுபக்கங் குணமுள்ளசெல்வியாகு
மறுவதுவலதுபக்க மங்கையரிடங்கள்நாசம்.

இ-ள். மறுவானது தோளின்மேலும் மூக்கின்மேலும் முகத்தின் மீதும் தோன்றுமாகினும் விழியினிடமாகக் கூடிக் குறியானது யிடது பக்க மிருக்குமாகின் அம்மாது குணமுடைய செல்வியாகுவள். அம் மருவானது யிடதுபக்க மிருக்குமாகில் இம்மாது போகின்ற இடங்கள் நாசமாகுமென்பர் எ-று. 20

வரிசிலைவளையைப்போல வரிக்கரிகரிநாய்போலப்
பு[illegible]மேவொன்றோடொவ்வா வண்ணமேபொருந்திடாத
[illegible]கயிர்கண்ணினுட்குப் புத்திரனில்லையென்று
[illegible]வலியாகுமன்பு பிறரிடத்திருந்துவாழ்வள்.

இ-ள். வில்லைப்போலும் வளையலைப்போலும் கரிநாயினைப்போலு முள்ள புருவமானது ஒன்றோடொன்று ஒவ்வாமற்படிக்கு யிருக்கும்வண்ண மாகில் அம்மாதுக்கு புத்திரவிருத்தியில்லாமல் மனதுவெறுத்து வேறோரிடத்தில் போய்ச்சேர்ந்து வாழ்குவாளென்பர் எ-று. 21

அன்னத்திநடையாளாகி லழகொடுமிருந்துவாழ்வள்
வின்னநடையன்னவெஞ்சொ லெடுக்குரலெடுத்தவிக்கல்
கன்னத்தின்ரோமமிக்க கடுவாயாள்கடுமைசொல்லா
ளின்னசொல்கழுதைகாக்கை குரலிநாட்கில்லைவாழ்வே.

இ-ள். அன்னத்தைப்போன்ற நடையினையுடைய மாது அழகி னோடு இருந்து நன்மையான வாழ்வு வாழ்குவள். வின்னமாகிய நடை யும் வெஞ்சொல்லும் யெடுக்குரலும் விக்கலும் கன்னங்களில் ரோம மும் கடுமையாகிய சொல்புகலும் வாயும் கழுதை காக்கை இவை களின் குரல் ஓசையைப்போன்ற மாதினுக்கு வாழ்வில்லையாம் எ-று.

கொண்டல்போல்குருவுநன்று கொழுந்துவிட்டெழுந்துதாழ்ந்து
பண்டுளாள்குழலினாளும் பார்தனில்ராசன்பாரி
கெண்டையின்கண்ணினாட்குச் செல்வமேமிகவுண்டென்னும்
தொண்டனும்புழுக்கைதன்னைத் துடர்ச்சியாய்ச்சேர்வளென்றே.

இ-ள். மலையைப்போல் அகன்று கொழுந்துவிட்டு எழுந்தும் தாழ்ந்தும் உள்ளக்குழலினாள் பூமியையாளப்பட்ட அரசனுடைய வலமானது உண்டாகித் தொண்டனாகிய புழுக்கையாகும்படியான வனைச் சேர்ந்து வாழ்குவாளென்பர் எ-று. 23

முழுமதிதன்னைப்போல முகத்தொளிர்கஞ்சமாகி
யெழுதிரனையரென்ன யிலங்கொளித்திகழுமாகிற்
பழுதிலாமக்கள்பல்கும் மங்கையர்மடந்தையாகிற்
செழுமணிதிறவுமொன்றாய் பெருஞ்செல்வியாகும்நன்றே.

இ-ள். பூரணச் சந்திரனைப்போலும் முகத்தினுடைய ஒளியு மாகியும் சூரியனைப்போல் தேககாந்தியுமுடைய மாதினுக்குப் பழு தில்லாத மக்கள் பலிதமாகும். தாமரைமலரைப்போன்ற நிறத்தினை யுடைய மாதாகில் திருவானதுபெருகி செல்வியாக வாழ்குவ ளென்பர் எ-று. 24

நாக்குவாய்கண்களென்னு நலம்பெருநகைகளென்னு
மூக்கினுள்நெடுமைநாசி முன்சிறுத்திருக்குமாகில்
நீக்குவிப்புருவங்கூட்டி னின்றிடில்வயதேகுன்றும்
போக்கிலாதிவளைக்கூடிற் போன்றிடும்வாழ்வுதானே.

இ-ள். நாக்கு வாய் கண்களென்றும் நன்மையாகிய நகைகளென் றும் மூக்கினில் நீடும் முன்னதாகச் சிறுத்திருக்குமாகினும் வில்லைப் போன்ற புருவங்களைக் கூட்டி நிற்குமாகில் அம்மாதினு[illegible]யதா னது குன்றும். அவளைக்கூடில் வாழ்வானது தாழும் எ-று. 25

கருவிழியுடையகண்ணாள் கலந்தமேதோர்பூனைக்கண்ணாள்
வெருவிடைவிழிக்குங்கண்ணாள் வெம்புலிதன்னைப்போல
பெருமையேசீறிப்பார்க்கும் பூங்கொடிமடவார்தன்னை
செருவிடசேர்ந்தார்க்கெல்லாந் தீமையைவிளைக்குமென்றே.

இ-ள். கருவிழியுடைய கண்ணினாளும் பூனைக்கண்ணினாளும் இரண்டுவிழிக்குங் கண்ணினாளும் புலியைப்போல் சீறிப்பார்க்கும்படியான கண்களையுமுடைய மாதர்களைச் சேருவோர்கட்கெல்லாம் தீமையானது விளைவிக்குமென்றனர் எ-று. 26

தந்தமாதளையின்வித்து தகைமைபோலிருந்துநன்றாய்
சுந்தரம்போலவேதான் துலங்கிடுமுகத்தாளாகில்
இந்துவாம்நெல்லிபார்க்கி லிடையதுவுடுக்கைபோலே
விந்தையினுரைமாதென்று விளம்பலாங்குறியுள்ளோர்க்கே.

இ-ள். மாதளம்பழத்தின் விரைபோல் யிருந்து நன்மையாக அழகுபொருந்தியிருக்கும் முகத்தினையுடையளாகியும், சந்திரனைப் போன்ற பிரகாசமும், இடையானது உடுக்கைபோலும் இருக்கின்ற மாதர்களை விந்தையுடைய உரைமாதர்களென்றும் சொல்லவேண்டும் எ-று. 27

குறைந்தனமயிர்கள்நீளான் கூந்தலாள்தனையோர்நாளு
மருந்துசேர்ந்தணையவேண்டாம் வாக்கியாவவதியாவன்
பரந்தழல்மயிர்கள்சால பாவநற்குறியாளான
யிருந்தனவல்குலாளு மியம்பிடாய்வாழ்வளென்றே.

இ-ள். ரோமங்கள் குறைந்தும் நீண்டும் உடைய மாதினை ஓர் நாளும் அணையப்படாதென்றனர். அப்படிக்கு அணைவானாகில் அவதிப்படுகுவன். பரந்த கூந்தலை யுடையதாயும் நற்குறியுமுடைய அல்குலாளும் இடியாகத்தானுமிருந்து வாழ்குவள் எ-று. 28

சுருண்டிடுமயிர்கள்தானுஞ் சுருளையாம்புடையான்பாம்பு
வுருண்டதுநெளிச்சல்போல யுற்றதோர்கூந்தல்நீண்டு
திரண்டதோர்தன்மகளே தானுந் தேகமோபசும்பொன்மேனி
வுருண்டதோர்விழிமைகண்ணா ளுலகினுக்கரசன்பாரி.

இ-ள். சுருண்ட ரோமமாகியும் சுருளைசுருளையாகவும் புடையான் பாம்புபோலும் உருண்டு நெளிவதுபோலும் கூந்தலானது நீண்டும் திரண்டும் பசும்பொன்னைப்போன்ற மேனியும் உருண்ட கண்களையுடைய மாது அரசனுடைய பாரியாளாகுவள் எ-று. 29

கூந்தலுந்தோகைபோலே கூர்விழிகறுப்பதாகிற்
சார்ந்ததோர்தேகமெல்லாஞ் சாருவாய்சொர்னம்போலே
சேர்ந்ததோர்தனைகொடுத்த சேயிழையுலகமெய்க்கும்
வேந்தனுக்கரசியாக விளங்கிவீற்றிருப்பாள்தானே.

இ-ள். கூந்தலானது தோகைபோலும் விழியானது கறுப்பாகி யும் தேகமாதியந்தமும் பொன்னிறமாகவும் தோன்றிய மாது உலக மெங்கும் மெய்க்கும்படியாக பூமியையாளும் வேந்தனுக்கு அரசியா கத்தானே யிருந்து வாழ்குவாளென்றனர் எ-று. 30

கழுத்தொருவிரலுக்குள்ளே கடுகியேமார்பையொட்டி
யழுத்தரவொன்றுமாகி லவளிருப்பிடங்கள்நாசம்
குழித்திருமார்புக்குள்ளே குளிர்ந்திடில்வேசியாகும்
வழித்தெதிரவளைக்கண்டால் யாத்திரைதீதாமென்னே.

இ-ள். கழுத்தானது ஒரு விரலினுக்குள்ளாகவும் மார்பானது ஒட்டியும் ஒன்றாகவிருக்கில் அம்மாது யிருக்கும் இருப்பிடங்கள் நாச மாகும். குழித்திருக்கும்படியான மார்பினுக்குள்ளும் குளிர்ந்துக் காணில் அம்மாது வேசியாகுவள். அவளை எதிராகக் காணில் யாத் திரையாகப்போகின்ற காரியந் தீதாகும் எ-று. 31

சனியனுமிவளுக்கின்னஞ் சஞ்சரித்தோர்க்கென்னும்
பனியிருள்போலேநோய்கள் பார்தனில்வந்துசாடு
மெனயிதையறிந்துநிற்க வெதிர்நடைசென்றோர்மீளார்
குனியிடைபணிந்திடார்கள் குருடர்போலகத்தில்வீழ்வார்.

இ-ள். மேற்கூறிய மாதினைக் கலந்து சஞ்சரிப்போர்கள் யாவருக் கும் எக்காலமும் பனியானது மூடி இருளானது சூழும்வாறுபோல் நோய்களானது வந்து சாடும். இதையறிந்து நிற்கவேண்டும். இம் மாதுக்கு எதிராகச் சென்றோர்கள் மீண்டுந் திரும்பி மீளார்கள். இதை யறியாமல் குருடரைப்போல் அகத்தில் விழுகுவர் எ-று. 32

பேசிடும்போதுநாசி திரட்டியேசுழித்துவாங்கில்
வாசியாங்கழுதைதன்னை வாய்க்கொப்பத்தணையவேண்டாம்
ராசியமல்லவுண்மை ராமதேவன்றான்சொன்ன
சோசியஞ்சகலநூலுஞ் சோதித்தோமிதுவேசூட்சம்.

இ-ள். பேசும்போது நாசியானது திரட்டிச்சுழித்து வாங்கு மாகில் அம்மாதைக் கழுதைக்கு ஒப்பாகப் பாவித்து அணையாமல் நீக்கி விடவேண்டும். இம்மொழியானது ரகசியமானதல்ல. உண்மை யாகத்தானே இராமதேவர்சொன்ன சோசியமாகிய சகலநூற்களினும் இதுவே சூட்சமாகும் எ-று. 33

சூட்சமாமின்னமொன்று சொல்லுவோங்கழுத்தில்ரேகை
ஆச்சரியங்களாக வாரணமிரண்டுமூன்றும்
வீச்சதாய்க்கறுக்குமாகில் வீதிடும்வசம்புநாற்றம்
பேச்சிதுநிசம்பொய்யல்ல பேசவும்வேண்டாங்காணே.

இ-ள். சூட்சமமாகக் கண்டுரைத்து சொல்வோமாக: கழுத்து ரேகையானது ஆச்சரியமாகியும் யானையைப்போல் இரண்டுமூன்று

ரேகை வீச்சாகக் கறுத்திருக்கினும் தேகமீது வசம்புநாற்றம் வீசு மாகினும் இக்குறிகளுடைய மாதினை ஒருபோதுஞ் சேரப்படாது என்றனர் எ-று. 34

கமுகதுபோலேயுள்ளக் கழுத்ததுவுடையமங்கை
சமுகாரசத்திரராஜர் தனக்குமேமனைவியாவள்
சுமுகனும்பதனமுள்ள சுகபரிமளமுநல்ல
குமுகமாய்மணக்குமங்கை குணமிதுவிதிதப்பாதே.

இ-ள். கமுகதுபோல் கழுத்தினையுடைய மங்கை அரசனுக்குப் பாரியாளாகுவாள். சுகமுடைய பாதமும் சுகந்த பரிமளாதிகள் வாசனைவீசும் மேனியும் உடைய மங்கையர்க்கு மேற்கூறிய விதிதப் பாது எ-று. 35

ஐவிரலொன்றுக்கொன்று வளவிடைகுறைந்துகாணில்
வெய்யதோர்கணைக்கால்முத்தி வுயிர்களும்வெளுக்குமாகில்
நைபுளபோகமன்றி நலந்திகழ்செல்வமாறி
வெய்யவேல்விழியினளும் விதவையாய்த்திரிவளென்றே.

இ-ள். கைவிரல்களில் ஒன்றுக்கொன்று அளவானது குறைந்து காணிலும், கணைக்காலானது முத்தியும், உயிரானது வெளுத்துமிருக் கும் மங்கையர்தனக்கு போகமானது தவர்ந்து நன்மையானது வொழி ந்து செல்வமானது மாறி விதவையாகத் திரிவாளென்பர் எ-று. 36

சிறுவிரல்பூமிதாவா தாகிடிற்செல்வங்குன்று
மறுதலிவாழ்க்கையெய்து மடுத்தநால்விரலுமண்மேல்
ஒறுத்தலேயில்லாவிட்டா லொண்டொடிகழுத்தில்நூல்போகி
மறுபடிலார்க்கையெய்தி வறுமையைவிளைக்குமன்றே.

இ-ள். சிறுவிரலானது பூமியில் தாவாமற்படிக்கு யிருக்குமாகின் செல்வமானது குன்றும்; விதவையாக வாழ்ந்திருப்பள்; மற்ற நான்கு விரல்களும் பூமியின்மீது பொருந்தாமலிருக்குமாகின் அம்மாதி னுடைய கழுத்துநூலானது போகியும் மறுபடியும் விவாகமானது செய்துக்கொண்டு வறுமையி லழுந்திருப்பாள் எ-று. 37

அரையினிலிடதுபக்க அந்தரங்கங்கள்தன்னில்
நிரைவிடுந்துடையையொட்டி நெருங்கியமருள்தானுண்டு
பரைவிடமாட்டாதையா பார்தனிற்கழுத்துநூல்போய்
துரையிடந்தன்னைவிட்டு துயர்ச்சைபோல்பெற்றுவாழ்வள்.

இ-ள். அரையின் இடதுபக்கமுள்ள அந்தரங்கங்களிலும் துடை யையொட்டியும் நெருங்கி மருக்களானது யிருக்குமாகின் அம்மாதுக் குச் செல்வமானது குறைந்து கழுத்துநூலானது போய் தானிருக்கு மிடத்தைவிட்டு நீங்கி பிள்ளைகளைப் பெற்று வாழ்குவள் எ-று. 38

தலைதனிற்சுழி தான்ரெண்டு தவறியேநெற்றியின்மேல்
சிலைநுதல்வகுப்பிலாண்டு பக்கமுமிடமாய்ச்சுற்றி
முலைதனிற்காம்பில்லாமல் மொழுக்கலாயிருக்குமாகிற்
குலைதனிற்கெர்ப்பக்கூட்டிக் குடிலமாயழிக்கவல்லாள்.

இ-ள். சிரசின்மீது சுழியானது இரண்டுந்தவறி நெற்றியின்மேல் புருவம் நுதல் இவைகளின்மேல் தோன்றி இடதுபக்கமாகச் சுற்றியிருக்கினும், முலைகளில் காம்பில்லாமலிருக்கும் மொழுக்கலாகினும் அம்மாது வயற்றினிடமாகத் தோன்றிய கெர்ப்பத்தை யழிப்பள். 39

வல்லமையுடையமங்கை மார்பதுவிரண்டுமொன்றாய்ச்
செல்வமேயிடையில்ரோமம் செறிந்தோர்தனத்தில்தேமல்
நல்லவேயிருக்குமாகில் நாரியையடிமைநீசன்
வெல்லவேயணைவனென்று வேண்டியேயுரைத்திடாயே.

இ-ள். வல்லமையுடைய மங்கையர்களுக்கு மார்பானது இரண்டு மொன்றாகவிருக்கினும் இடையில் ரோமமானது பெருத்திருக்கினும் ஸ்தனத்தில் தேமலானது படர்ந்திருக்கினும் இவ்விதக்குறியாள் தன்னை அடிமையாகிய நீசன் சேர்ந்தணைகுவானென்பர் எ-று. 40

சர்ப்பமேபுடைத்துவிம்மித் தனமுலைவலமாய்ப்பற்றி
கற்புள்ளமங்கைகொண்ட கணவன்பேச்சுரைதப்பாள்தான்
நிர்ப்பமாயிடத்திற்சார்ந்து நின்றிடில்வேசியாவள்
தப்பிதமில்லையுண்மை தரணியிலறிந்துபேசே.

இ-ள். சர்ப்பபடமானது புடைத்து விம்மி ஸ்தனத்தின் வலமாகப்பற்றி யிருக்குமாகில், அம்மாது தன்னுடைய கணவன்பேச்சுத் தள்ளி நடக்கமாட்டாள். இது பக்கமாகச் சார்ந்திருக்குமாகின் வேசையாகுவள். தப்பிதமானது யில்லையென அறிந்துபேசுவாய் எ-று. 41

வலஞ்சுழிதாரையொன்றாய் வளைந்துநீர்பாயுமென்றால்
கலந்தருமார்க்கமுண்டாம் நான்கோடுவாறுமேழும்
பலங்கெடுமெட்டுரெண்டும் பனிரெண்டுமுடையதாகிற்
கலமத்துசிந்திப்பாயில் ககடுமேவிளைக்குமென்றே.

இ-ள். வலதுச் சுழியின் தாரையில் ஒன்றாய் வளைந்து நீரானது பாயுமாகின், நன்மையானது பெருகும்படியான மார்க்கமானது உண்டாகும். 4-6-7-பிரிவாகப் பாயில் பலனானதுகெடும். 8-2-12-முடையதாகி சிந்திப்பாயுமாகின் ககடானது விளைக்கும் எ-று. 42

தனமதுநடுவிற்றேய்ந்து தனமதுதவறிநிற்கில்
யெனமதைவிட்டுநன்றா யெடுப்புண்டுதிரிவளெங்கும்
கனமதுவுற்றபேதை கருவிழியுடையகண்ணாள்
துனமதுசிவந்ததேகத் துடையவளியம்புவாரே.

இ-ள். ஸ்தனமானது நடுவினிற்றேய்ந்து தவறி நிற்கிலும், அம் மாது தன்னுடைய இனத்தைவிட்டு யெடுப்புண்டு எங்குந்திரிகுவள். கனமதுவுற்ற பேதையருக்குக் கருவிழியும் சிவந்த தேகமுமாகும் எ-று. 43

வாரணதனங்கள்ரெண்டில் மருவெனும்பணம்போலூடு
கூரணமிருக்குமாகிற் கொள்ளிக்குப்பிள்ளையற்று
பேரெனவாழ்வளுண்மைப் பெருமையாய்கிளிமூக்குள்ள
நேரெனவுடையாட்கிந்த நேர்த்தியென்றுரைக்கலாமே.

இ-ள். ஸ்தனங்கள் இரண்டினும் மருவானது பணம்போலும் ஊடுபோலும் பூரணமாயிருக்கில், அம்மாதுக்குக் கொள்ளியானது வைக்கக்கூடப் பிள்ளையில்லாமற்போகும். பெருமையாய் வாழ்குவள். கிளியின் மூக்கைப்போன்ற மாதினுக்கு இப்பலனாகுமென்பர் எ-று.

அங்குசங்குடைபூமாலை யணிகுழல்குண்டலங்கள்
பொங்கியகடகஞ்சங்கு புதியதாமரைப்பூப்போல
செங்கையில்வரைகளுண்டா யரசனையிழந்துபின்னும்
மங்கையர்களிறுபோலே வையகமாள்வளென்றே.

இ-ள். அங்குசம் குடை பூமாலை குண்டலம் கடகம் சங்கு தாமரைப்பூ இவ்விதமான ரேகைகள் கரத்திலிருக்குமாகில், அம்மாது தன்னுடைய அரசனையிழந்தும், பின்பு யானையைப்போலே வையகத்தையாள்குவானென்பர் எ-று. 45

என்றதோர்மங்கைநல்லநட் கிவ்வகைகுறிகள்பற்றி
யொன்றதுயிருந்திட்டாலு முலகினில்ராணியாவள்
நன்றெனவரசன்செய்கை நடத்துவளிடதுபக்கம்
சென்றதோர்குறுக்குரேகை பாய்ந்திடிலவதியாவள்.

இ-ள். மங்கையர்களுக்கு மேற்கூறிய ரேகைகளில் ஒன்றிருக்கினும், உலகாளும் ராணியாகுவள். இராஜனுடைய செய்கைகள் முதலானதும் நடத்துவள். இடதுபக்கத்து ரேகையானது தோன்றிக் குறுக்கே பாய்ந்திடுமாகின் அம்மாது அவதியாகுவளென்பர் எ-று. ()

நெற்றியில்வரைதானைந்து னேத்தியாயிடைவிடாமற்
பற்றியேயிருக்குமாகிற் பார்தனில்தீர்க்காயுளாம்
சத்தியமிதுதப்பாது சாதகப்பலனைவெல்லும்
புத்தியாய்வரைக்கைநான்காய் புகழ்ந்துநீவரையைப்பேசே.

இ-ள். நெற்றியினிடமாக வரைகளானது ஐந்தும் இடைவிடாமல்படிக்கு பற்றியிருக்குமாகின், அம்மாது பூமியின்மீது தீர்க்காயுளுடனிருப்பாள். சத்தியமானவாக்கு இது தப்பாது. சாதகத்தின் பலனையும் வெல்லும். புத்தியோடு வரைகளைக்கண்டு பேசவேண்டுமென்பர் எ-று. 47

குறியெனும்ரேகைதன்னிற் குறுக்கொருரேகைபற்றித்
தறியெனுமுறிப்பட்டாகி தரணியில்வயதைந்துள்ளே
கறியெனுஞ்சோத்துக்குள்ளே கால்கைகள்பட்டுவெந்து
பொறியெனுமிளப்பினாலே பொன்றுவாளென்றுசொல்லே.

இ-ள். மேற்கூறிய ரேகைகளிற் குருக்காக ஒரு ரேகையானது பற்றி முறிப்பட்டிருக்குமாகின் அம்மாதிற்கு வயது ஐந்திற்குள்ளும் பதார்த்தங்களினும் சாதத்தினாலும் கால் கைகள் வெந்தும் இளப்பினால் வருத்தப்படுகுவள் எ-று. 48

வயற்றினிற்சுழிதானொன்று வளமதாயொழுங்கினோடு
மயத்தினிற்கூடுமாகில் மங்கைநல்லாளுக்கேதான்
கயற்றினுக்குடையாள்மூன்று பேருடன்கருதவல்லாள்
நியத்தினிற்சக்களத்தி நிர்ணயமுறையைப்பேசே.

இ-ள். வயற்றினிடமாகத்தானே சுழியானது ஒன்று வலமாகவும் ஒழுங்காகவும் மயமாகக் கூடியிருக்குமாகில், அம்மாதுக்கு தன்னுடைய கணவனுக்கு மூன்றிலொரு மனைவியாகயிருந்து வாழ்குவள். சக்களத்தியா ளாகுமென்பர் எ-று. 49

பேசிடுமிந்தமங்கைப் பெருவிரலடியினோடு
ஆசிடுங்குறுக்கேபாயில் உற்றதோர்கணவனேறும்
வாசிடுங்குதிரைக்காரன் வாகுடனணைந்துசேர
யேசிடும்படியேநல்லா ளொடுப்புண்டுபோவளென்றே.

இ-ள். பேசும்படியான மங்கையர்களுக்குப் பெருவிரலின் அடியினோடு நின்று குறுக்காகப்பாயுமாகிலும் தன்னுடையகணவன் ஏறும்படியான குதிரையையோட்டும் குதிரைக்காரனைப் பிரியமோடு அணைந்து சேர்குவள். யாவரும் பேசும்படியாக யெடுப்புண்டிருப்பள் எ-று.

காற்பெருவிரற்குச்சுட்டி விரலதுகனத்துநீளில்
மாற்பெருங்கணவன்தன்னை மங்கைவிட்டகன்றுபின்னை
வேற்பெருவிழியினாளும் விதவையாய்த்திரிவளென்று
நூற்பெரும்பரிட்சைமார்க்கம் நுண்மையாய்த்தெரியச்சொல்லே.

இ-ள். காற்களின் பெருவிரலுக்கு சுண்டுவிரலானது கனத்து நீண்டிருக்கில், அம்மாது தன்னுடைய கணவனைவிட்டகன்று பின்பு விதவையாகத்தானே திரிகுவாளென்று நூற்பரிட்சை யறிந்து சொல்வாயாக எ-று. 51

இப்படியேரேகையெல்லா மியலுடனிருக்குமாகி
லப்படிக்கிரகசார மக்கணமிதைத்தான்வெல்லுஞ்
செப்படிவித்தைபோலே சோசியநூல்களெல்லாம்
தப்படியல்லாலிந்தத் தரணியிலறிவிலார்க்கே.

இ-ள். இவ்விதமாக ரேகைகள்யாவும் இருக்குமாகினும் கிரக சாரங்களால் இதை வெல்வதுமுண்டாம். செப்படி வித்தையைப் போலும் சோசியநூற்கள் யாவும் தப்பாகாது. இத்தரணியின்மீது அறிவில்லாதார்க்குத் தப்பாகுமென்பர் எ-று. 52

பெருவிரல்பருத்துநீண்டு பகன்றதோர்பேதைதானும்
மருவியசுற்றத்தாரை விட்டவள்விவாகமெய்தி
சிறுவிரல்நிலந்தொடாமற் றியம்பியாகாசம்நோக்கிப்
புருடன்யாத்திரைகள்போக போக்கிவிட்டகன்றுபோவாள்.

இ-ள். பெருவிரலானது பெருத்து நீண்டு யிருக்கும்படியான மாதானவள் தன்னுடைய சுற்றத்தாரை விட்டகன்று விவாகமான ஆகாயத்தை நோக்கினும் அம்மாது தன்னுடைய புருஷன் யாத்திரை யாகப் போயிருக்குங்காலம் தான் அகன்றுபோய் விடுகுவள் எ-று. ()

முகத்தினில்ரூபமுண்டாய் மொழிந்ததோர்மங்கைநல்லா
ளகத்தினிற்பசுமையாகு மடித்துடையதனில்ரோமம்
சுகத்துடன்சுகந்தமிச்சஞ் சூட்டிடும்பெண்ணாள் தன்னைச்
செகத்தினில்வேசியாக செப்பிடுதப்பில்லாதே.

இ-ள். முகமானது ரூபமாகியுமிருக்கும் மாதுநல்லாள் தனக்குத் தேகமானது பசுமையாகவும் அடித்துடையில் ரோமமுமிகுத்து சுகந்த பரிமளாதிகள் பூசும்படியான இம்மாது வேசியளாகுவாளென் பர் எ-று. 54

பிட்டியில்சுழிதானொன்று பிரண்டதுவலமாய்ப்பற்றி
நெட்டியில்நீளுமாகில் நேரிழைமலடியாவள்
அட்டியில்லாதசொல்லு வப்பனேவலதுபக்கங்
கெட்டியாயிடதுண்டாகிற் கெடுதலுமில்லைகாணே.

இ-ள். பிட்டியினிடமாக சுழியானது ஒன்று பிரண்டு வலமாகப் பற்றி நெட்டியினிடமாக நீண்டிருக்குமாகின், அம்மாது மலடியாகு வள். கெட்டியாகச் சொல்லவேண்டியது. மேற்கூறிய சுழியானது இடதுபக்கமாகப் பற்றியிருக்கில் அம்மாதினுக்கு யாதொருகெடுதலு மிராது என்பர் எ-று. 55

காணவேமங்கைநல்லாள் கழுத்தினிற்சுழிதானொன்று
தோணவேயிடமாய்ச்சுற்றித் தொடியிடையிருக்குமாகில்
நாணவேவேண்டாமையா நாரிகைகழுத்தில்நூல்தான்
பூணவேமுன்னேவேசி யாகவேபோவாளென்றே.

இ-ள். மங்கையர்களுக்குக் கழுத்தினிடமாகச் சுழியானது ஒன்று இடதுபக்கமாகச் சுற்றிக்கொண்டு யிருக்குமாகின் அம்மாது விவாகமாவாததற்கு முன்னுதாகத்தானே வேசியாகப் போவாளென் பர் எ-று. 56

நாக்கினில்மருள் தானொன்று நாவினில்நுனியைமத்தி
போக்கிடையிருக்குமாகில் பொன்றிடும்வாழ்வுபின்னும்
யேக்கமாம்புருடன்றன்னை யிழந்தவள்கழுத்துநூல்போய்
பார்க்கவேகெடுதலுற்ற பாவன்சேர்ந்திடங்கள்நாசம்.

இ-ள். நாக்கினிடமாக மருளானது ஒன்று நுனியினும் மத்தியினும் இடபாகமாக விருக்கினும், அம்மாதினுக்கு வாழ்வானது பொன்றி பின்பு புருஷனையுமிழந்து கழுத்துநூலானது போய் கெடுதல் சம்பவிப்பதுமன்றி இம்மாது சேருமிடங்களும் நாசமாகுமென்றனர் எ-று. 57

கொங்கையினடுவில்ரோமங் குறிப்பதுரெண்டுமூன்று
சங்கையாய்க்கறுத்துநீளுந் தையலாலதிககாமி
மங்கையுமழிந்துபின்னு மயிர்களைந்திடுவன்றன்னை
பொங்கமாயணைந்துசேர்ந்து பொன்பணமீயவல்லான்.

இ-ள். கொங்கையினிடமாகத்தானே நடுமத்தியில் உரோமமானது இரண்டு மூன்று கறுத்து நீண்டிருக்குமாகின், அம்மாது அதிக காமியாக விருப்பள். மங்கையர்க்குக் கெடுதலானது சம்பவித்துப் பின்பு மயிர் களைந்திடுவோனை ஆசையோடு அணைந்து பொன் பொருள் பணங்கள் முதலானதுங் கொடுப்பளென்பர் எ-று. 58

தனமதனிலடியிலேதான் தளத்திநீர்சுழிதானொன்று
கனமதனில்கூடியேறிக் கருதியவலமாய்ப்பத்தில்
மனமதனிலதிகவேக மன்மதவிகாரத்தாலே
யினந்தப்பிவண்ணான்தன்னை யிணக்கமென்றணைவாளென்றே.

இ-ள். ஸ்தனத்திற்கு அடியில் நீர்ச்சுழியானது ஒன்றுகூடியேறி வலதுபக்கமாகப் பற்றிநிற்கில், அம்மாதினுக்கு மனதில் அதிக வேகமாக மன்மதனுடைய விகாரத்தினாலும் இனமானது தப்பியும் வண்ணான்றன்னை இணக்கமாக அணைகுவாளென்பர் எ-று. 59

என்றிதுவல்லாற்பின்னு மேந்திழைகரத்திலேதான்
நன்றிதுரேகைகொண்டு நல்பெருவிரலிற்கூடில்
வென்றிதுவேந்தன்பாரி வேணதோர்குற்றமெல்லாம்
மொன்றிடில்நிமித்தியாக வுரைப்பதுதிண்ணமாமே.

இ-ள். இதுவல்லாமலும் பின்னும் மங்கையர்களுக்குக் கரத்தினிடமாகத்தானும் இரேகையானது இரண்டு விரலினிடமாகக்கூடியிருக்கில் அம்மாது அரசனுடைய பாரியாளாகுவள். யாதொரு குற்றமும் சொல்வதுவும் திண்ணமாகுமென்பர் எ-று. 60

ஆமெனுமல்குற்குள்ளே வப்பனேசங்குசக்கிரந்
தாமெனுமிருக்குமாகில் தையலாலங்கபங்க
வோமெனுநிற்பாள்ரேகை வொப்பிடத்திருமீனாகில்
சோமெனும்வாழ்வுகாண சோதிக்கமெழுகிலொட்டே.

இ-ள். அல்குலுக்குள்ளாகச் சங்குசக்கிர ரேகையானது யிருக்கு மாகின், அம்மாது அங்கபங்கமடைகுவள். ரேகையானது ஒப்பு மிடத்திற் கிருமீனுகை விருக்கில் சுகம்பொருந்திய வாழ்வானது காண மெழுகினல் ஒட்டிப்பார்க்க வேண்டுமென்பர் எ-று. 61

ஒட்டிடக்கொசுத்தேன்வைத்த வொழுகிடுமெழுகைவாங்கித்
திட்டெனவல்குற்குள்ளே திறமதாயொத்திக்கிக்க
கட்டெனசங்குசக்கிரங் கடுகவேயிருக்குமாகிற்
பட்டெனமீரேழ்மேய்க்கப் பாரினுக்கரசன்பாரி.

இ-ள். ஒட்டிப்பார்க்கும்படியான மெழுகானது கொசுக்களினல் உற்பத்தியாகிய தேன்மெழுகாக வாங்கி அல்குலுக்குள்ளாக விடுத்து ஒத்திப் பார்க்கையில் சங்குசக்கிர ரேகையானது யிருக்குமாகின், அம் மாது ஈரேழு உலகமும் மேய்க்கும்படியாகிய அரசனுடைய பாரியாகுவள் எ-று. 62

பாரியாமிந்தரேகை பார்மகள்முதலாயுள்ள
கூறியசுழிகளங்க லட்சணக்குறிகளெல்லாம்
தேறியேயறிந்துகொண்டு தேகங்களழிவுபேச
வாறியேயிந்தமுன்னூற் றிரண்டையுமடக்கஞ்செய்யே.

இ-ள். மேற்கூறிய ரேகையானது பார்மகள் முதலாயுள்ளோர் களுக்குச் சுழி அங்கம் இவைகளுக்குரிய லட்சணம் குறிகள் யாவும் நன்றாக வறிந்துகொண்டு தேகத்தின் அழிவானதுபேச இந்நூலிற் கூறிய பாடல் முன்னூற்றிரண்டையும் அடக்கஞ் செய்குவாய் எ-று.

செய்யெனுமிருபத்தேழு நட்சத்திரமீராறுராசி
மெய்யெனுமாதியந்த மேன்மையாமாலைமாற்றல்
வையகம்புகழுராசி வகைகளைப்பிரித்துப்பேச
வுய்யெனும்வேந்தனுக வுரைத்திடுமுதற்சாமத்தே.

இ-ள். இருபத்தேழு நட்சத்திரமும் பன்னிரெண்டு இராசியுங் கொண்டு ஆதியந்தமாகவும் வைத்து மேன்மையாக மாலைமாற்றுதலும் உலகமெங்கும் புகழ்ந்து பேசும்படியான இராசிகளைப் பிரித்துப் பேச வும் அரசனைப்போல் சொல்வதற்கு முதற்சாமத்தைக் கொண்டும் எ-று. 64

சாமத்துக்காதியந்தம் தக்கலக்கினத்தைநீயும்
நேமத்துக்கிருபத்தேழா நட்சத்திரந்தனைநீசேர்த்து
சேமத்தைபுலகுநன்றாய்ச் செப்பும்வல்லமைகளெல்லாம்
நாமெத்தவுரைக்கவில்லை நாடினீர்பரீட்சைசொல்லே.

இ-ள். சாமத்திற்கு ஆதியந்தமாக உதிக்கும் இலக்கினத்தையும் இருபத்தேழு நட்சத்திரங்களையுஞ் சேர்த்துச் சேமங்களை உலகமீது செப்பத்தக்க வல்லமைகளெல்லாம் நன்றாகப் பரிட்சித்துச் சொல்கவும் எ-று. 65

வேறு

தூன்றுதோகையின் றுயர்மணிகாட்டிட
மூன்றுரேகையும் நீங்கில்முழுநிதி
யீன்றுரேகை யிணங்கிநடுவரை
யூன்றுமாகில்மெய்ஞ் ஞானமுமூறுமே.

இ-ள். மாதர்களுடைய மணிக்கட்டினிடமாக மூன்றுரேகைக ளிருக்குமாகின், முழுமையாகிய நிதியானது பெருகும். இவ்ரேகைகளானது யிணங்கி நடுவரையில் ஊன்றி நிற்குமாகின் மெஞ்ஞானமானது பெருகும் எ-று. 66

ஊறும்ரேகைக ளொன்றுடனொன்றுபோய்
தேறியங்குச மாகத்திரும்பிடில்
நாரிகைசில நாதரிடத்தினில்
வீரியங்களாய் விரும்பித்திரிவளே.

இ-ள். ஊறும்படியான ரேகைகளானது ஒன்றுக்கொன்று யேறி அங்குசமாகத் திரும்பியிருக்கில், அம்மாது சிலநாதரிடத்தினில் பிரியமாகப்போய் விரும்பித் திரிகுவாளென்பர் எ-று. 67

வேறு

குருவியாம்பிடரியின்பின் குறிப்பதுசுழிதானொன்று
மருவியேவலமாச்சுத்தி நின்றிடுமங்கைநல்லாள்
கருவியாமரணமென்று காணலாம்வயதீரெட்டிற்
செருவியேயிடமாய்ச்சுத்தில் செல்வியாய்வாழ்வாளென்றே.

இ-ள். பிடரியின் பின்னுகச் சுழியானது ஒன்றுதோன்றி வலமாகச் சுற்றிக்கொண்டு யிருக்குமாகின், அம்மாதுநல்லாள் கருவிகளினுல் மரணமடைகுவள். வயது பதினுறில் அதுயிடமாகச் சுற்றியிருக்குமாகின் அம்மாது செல்வமுடன் வாழ்குவாளென்பர் எ-று. 68

உச்சியிற்சுழிதானொன்று வுயர்வலமாகவேதான்
கச்சியைநோக்கியேறிக் காரியக்கணவனுலே
வச்சிரம்வயிரத்தாலே வதைப்பதுநிசமாமென்று
உச்சிதமாகவேதா னுரைத்திடுநிறைதப்பாதே.

இ-ள். உச்சியினிடமாகச் சுழியானது ஒன்று வலது பக்கமாக யேறிச் சுற்றிக்கொண்டிருக்கில், அம்மாதினை தன்னுடைய கணவன் வச்சிரம் வயிரம் இவைகளினுல் வதைகள் செய்குவன். கூறியநிறை தப்பாது எ-று. 69

முடையதிற்சுழிதானொன்று முன்பின்னுயிரண்டுமொன்றாய்த்
துடைதனிலிடமதாக சுத்தியேபத்திநிற்கிற்
படைதனில்சென்றுவெட்டும் பாரியாள்கணவனுலே
யிடையினில்வயதெண்ணுன்கி லேறுவள்கட்டைதானே.

இ-ள். முடையினிடமாகச் சுழியானது முன்பின்னக இரண்டு மொன்ருகத் துடையின் இடது பக்கமாகச் சுற்றிப் பற்றிநிற்கில் படையில் சென்று வெட்டும்படியான கணவனுக்குப் பாரியாளாகி தன்னுடைய கணவனால் 32-வயதில் மரணமடைகுவள் எ-று. 70

தானெனுஞ்சுழிகள்ரெண்டில் தவறியேஒன்றுக்கொன்று
சூனெனக்கீழுமேலுஞ் சுத்தியேபத்திநிற்கிற்
கோனெனவரசன்பாரி கொள்கையேகற்புள்ளாளாம்
தேனெனும்புருடனோடு தீய்க்குழிப்பாய்வளென்றே.

இ-ள். சுழியானது இரண்டில் ஒன்றுக்கொன்று கீழ்மேலாகச் சுற்றிக்கொண்டு இருக்கில், அம்மாது அரசனுடைய பாரியாளாகவும் கற்புடையவளாகியு மிருந்து தன்னுடைய கணவனோடு தீக்குழிப் பாய்குவள் எ-று. 71

நாடியிற்சுழிதானொன்று நடுவினிலிடமதாக
கூடியேவுயரப்பற்றிக் குறிப்பதாயிருக்குமாகில்
ஓடிடுவாளாம்நீச னொருவன்போய்மருவன்கிட்டா
தேடியேபொருளையீய்ந்து தேசத்திற்கோபத்தாற்சாவாள்.

இ-ள். நாடியினிடமாகச் சுழியானது ஒன்று நடுமத்தியில் இடது பக்கமாகக்கூடி உயரமாகப் பற்றியிருக்குமாகின், அம்மாது நீசனை யணைந்து அவன் போனபின் மறுபடியும் ஒருவனுங்கிட்டாமல் தேடித் தேடிப் பொருள்களையீய்ந்து சகிக்காமல் கோபத்தினல் மரணமடைகு வாளென்பர் எ-று. 72

இப்படிசுழிதானொன்று யிருபத்துவலமாய்ப்பற்றித்
தப்பிதமில்லைபாரில் தாசிக்குப்புழுக்கையாகி
மெய்ப்புடனரசன்கிட்ட வேசியைவிட்டுச்சென்று
வைப்பெனவிருந்துவாழ்வள் வையகம்புகழத்தானே.

இ-ள். மேற்கூறியபடி சுழியானது ஒன்று வலமாகப் பற்றிநிற் கில், அம்மாது பூமியின்மீது தாசிக்குப் புழுக்கையாகி அரசனிட மாகவே வேசியைவிட்டு அதினல் வாழ்ந்திருப்பாளென்பர் எ-று. 73

தானெனுஞ்சுழிகள்ரெண்டுந் தவறிடாதிருக்குமாகில்
மானெனுங்கற்புள்ளாளாய் மானிலம்புகழுமங்கே
கோனெனும்வேந்தன்கிட்டக் கூடியபாரியாகி
நானெனும்பத்தியினாலே நாடதுவாழ்வாளென்றே.

இ-ள். சுழியானது இரண்டும் தவருமற்படிக்கு யிருக்குமாகி னும், அம்மாது கற்புள்ளவளாகி உலகமெங்கும் புகழும்படியாக அரச னுக்குப் பாரியாளாகி பத்தியினல் உலகமுழுது மாள்குவாளென்பர் எ-று. 74

என்றதோர்மங்கைநல்லாட் கேந்திழைகணவன்செத்து
நன்றெனவுலகந்தன்னி லருள்பொருளெல்லாந்தோற்று
மன்றினில்ராணிவாச மாள்வதுவருஷமேழில்
பொன்றிடுவாளேயென்று புகலுவாய்குறியுற்றோர்க்கே.

இ-ள். மேற்கூறிய மங்கையருடைய கணவனுனவன் மரணமாகியபின்பு பொருள்கள்யாவுந் தோற்று இராணி வாசமாள்வது வருஷம் யேழினும் கடந்து பொன்றிடுவாளென்று இக்குறியோர்க்குப் புகலுவாய் எ-று. 75

கூடிடும்சுழிகள்ரெண்டுங் கோணலாயொன்றுக்கொன்று
சூடிடும்படியேயாகிற் சூட்சமாமென்னசொல்வே
ணுடிடும்பரத்தையில்லி லவளிடஞ்சென்றுவாழ்வள்
தேடிடும்சிசுவையைந்து தேசம்விட்டகலுவாளே.

இ-ள். சொல்லும்படியான சுழியானது இரண்டுங் கோணலாக ஒன்றுக்கு ஒன்று சூடும்படியாகத் தோன்றுமாகின் சூட்சமமாகிய இதின் பலன் சொல்வேனுக. இக்குறியுள மாது பரத்தையராகிய வேசியரிடஞ்சேர்ந்து வாழ்குவள். தன்னுடைய பிள்ளைகளையும் விட்டகன்று போவள் எ-று. 76

அகலுவாள்தேசம்விட்டு வப்பனேகிரந்திநோயால்
இகலுவாரிவளையாமே யேறிடும்நாசிதன்னை
நிகலவேகிருமியாலும் நீதிகெட்டங்கபங்கம்
புகலவேமரணமென்றும் புகட்டினேஞ்சுழியுற்றூர்க்கே.

இ-ள். தேசம்விட் டகலும்படியான இம்மாதினுக்கு கிரந்தி நோயினுல் பாதைப்படுகுவள். இம்மாதினைப் பார்ப்போர்கள் யாவரும் மிகழுவார்கள். அன்றியும் நாசியானது இரணமாகி அதில் கிருமியானது சேர்ந்தும் அங்கபங்கமாகியும் நீதியானது கெட்டும் மரணமடைகுவாள் மேற்கூறியபடி சுழிக்குறி கண்டுரைக்கவும் எ-று. 77

நெற்றியிற்சுழிதானென்று நெற்றியாயிடமதாக
பற்றியேயிருக்குமாகிற் பாரினிலிருகண்கெட்ட
சத்தியாயிறந்துண்போனே சங்கையாய்கோல்கைக்கொண்டு
புத்தியுமுரைத்துநன்ருய்ப் புகழ்ந்தவளணைந்துசேர்வாள்.

இ-ள். நெற்றியினிடமாகச் சுழியானதுஒன்று நெற்றிக்கு இடது பக்கமாக யிருக்குமாகில், அம்மாது இரண்டு நேத்திரமும் பழுதாகப் போய் இறந்துண்போனேச்சேர்ந்து அவன் கையிலுள்ள கோலைப்பற்றி அழைத்துச்சென்று புத்திகளானது உணர்த்தும் புகழொடு அணைகுவாளென்பர் எ-று. 78

நாசியினடுவின்மேலே நகன்றதுவகன்றுதோன்றில்
தாசிகளிடத்திற்பிள்ளை தன்னையேவிற்களாவாள்

ரகசியமல்லவுண்மை நாடிபுமோடிநுப்போல்
கூசியேயிருக்குமாகிற் கூசமில்லாமற்பேசே.

இ-ள். நாசியினுடைய நடுவிற்குமேல் சுழியானது நகன்று அகன்று தோன்றில், அம்மாது தான் யீன்ற பிள்ளைகளைத் தாசி வீட்டில் விற்பனைச் செய்குவள். இது ரகசியமல்ல உண்மையென் றறியவும். அன்றியும் நாடியானது ஒடி நாய்போலும் கூசியாக யிருக்கு மாகின் மேற்சொன்ன பலனைக் கூசாமல் பேசுவீர் எ-று. 79

பேசிடுமேறுநெற்றி பெருத்தமீதார்மங்கைநல்லாள்
வீசிடுங்கொழுந்தில்லாமல் விரிந்தமூக்குடையாளென்னு
மேசிடும்படியேலோகத் தெடுப்புண்டுபோய்ப்பின்னும்
காசிடும்படியேகொண்ட கணவனையணைந்துவாழ்வள்.

இ-ள். சொல்லும்படியாகிய ஏறு நெற்றியும் உள்ள மங்கையான வள் கொழுந்தில்லாமல் விரிந்த மூக்கினை யுடையாளாகியும் உலக முழுதும் பேசும்படி எடுப்பானது யெடுத்துப் பொசிக்கும்படியான கணவனை யணைந்து வாழ்குவள் எ-று. 80

வாழுவாளனேக்காசு வாங்கியேவிரும்பிப்பின்னு
மீளுவன்புருடன்தன்னை மீண்டவளணைந்துநன்று
யாளுவள்விலைக்குக்கொண்ட வாண்மைபோல்கணவன்றன்னை
தாழுவாளுகமைபோலத் தகமையாய்க்குணஞ்செய்வாளே.

இ-ள். மேற்கூறியபடி வாழ்ந்தும் மிகுதியான காசிகள் வாங்கியும் பின்பு புருஷனுக்கு மேன்மையாகி மீண்டும் அன்பினோடு அணைந்தும் தன்னுடைய கணவனை விலைக்குக் கொண்டவள்போல் ஆண்மையாகப் பேசித் தாழ்ந்தும் குணங்களானது பிரீதியாக வைத்தாள்குவ ளென்பர் எ-று. 81

இவ்விதகுணங்களுற்ற யேந்திழைதீட்சையொன்றில்
செவ்விதமாகவேதான் செனித்ததோர்சுழியுண்டாகி
லவ்விதகணங்களேதென் றுமெனமருகன்றன்னை
பலவிதமாகவேதான் பார்தனிலணைவளென்றே.

இ-ள். மேற்கூறிய குறிகளையுடைய மாதினது தீட்சையினிட மாக ஒன்றில் சுழியானது ஒன்றுதோன்றில் அவ்விதக் குறியுடை யாள் தன்னுடைய மருமகனை வந்தவனை பலவித உபசாரங்கள் செய்து இன்பமானது நல்கும்படி அணைகுவாளென்பர் எ-று. 82

உதட்டினில்ரேகையொன்று வூடுறத்தாக்குமாகில்
அதட்டியேகணவன்றன்னை யகமையாய்ப்பேசவல்லாள்
திகட்டிடும்பாலுஞ்சோறுந் தேன்மொழிகப்பங்கட்டி
புகட்டியேகாட்டிற்சென்று புகழ்ந்தவளணைந்துசேர்வாள்.

இ-ள். உதட்டினிடமாக ரேகையானது ஒன்று ஊடுருகித் தாவி நிற்கில் அம்மாது தன்னுடைய கணவனை அதட்டி அகமையாகப் பேசிடும் வல்லமையுடையாளாகியுமிருந்து பாலுஞ்சோறுமாகக் கப்பங் கட்டிக் காட்டினிடமாகச்சென்று கள்ளபுருஷனுடன் கூடி அணைகுவா ளென்பர் எ-று. 83

கக்கத்திற்கழுக்கூட்டுள்ளே கறுத்தரோமத்தோடு
பக்கத்திற்சுழிதானொன்று பகர்ந்திடமாகப்பத்தி
தக்கவேநடுமையற்றித் தரித்திடயிருக்குமாகில்
வெக்கத்துக்கஞ்சிடாமல் வேண்டியபானமுண்பாள்.

இ-ள். பக்கத்தினிடமாக விருக்குங் கழுக்கூட்டினுக்குள்ளுமிருக் குங் கறுத்த ரோமங்களினோடு பக்கத்தில் சுழியானது ஒன்று இடது புறமாகப்பற்றி நடுமையத்தில் அணுகாமலிருக்கில், அம்மாது வெட் கத்திற்கு அஞ்சாமல் பலவிதமான வஸ்துக்களையும் பானஞ் செய்குவா ளென்பர் எ-று. 84

உண்டவாளுலகந்தன்னை யுற்றகைப்பொருள்களெல்லாங்
கண்டவர்க்கீய்ந்துவஸ்துக் கடையிடஞ்சென்றுபோய்
மண்டலஞ்சிரிக்கப்பான மண்டியேதெருவில்வீழ்ந்து
தொண்டர்கள்நகைத்துக்காலா லுதைத்திடத்துகையுற்றாளாம்.

இ-ள். மேற்கூறியபடி அம்மாது பலவிதபானங்களுஞ்செய்து உல கின்கண் தன்னுடைய கைப்பொருள் யாவும் கண்டவர்களுக்கெல்லாம் ஈந்தும் தானும் மதுக்கடையினிடமாகச்சென்று பானமானது செய்து பூமியின்மீது யாவரும் நகைக்கும்படியாகக் கள்ளுண்ட வெறியினால் தெருவில் வீழ்ந்து தொண்டர்களுடைய காலினாலுதையுண்டுகிடப்பள்.

ஆளனுமிவ்வகைபதன்னி லடக்கமாயுள்ளதெல்லாம்
நாளனும்வருஷமூன்றில் நாரிகைலட்சம்போன்று
நீளெனக்கேட்கத்தன்னைக் கீய்ந்தவள்நீதிதப்பி
கோளெனுமுலகத்தோர்கள் நகைத்துதைகொடுப்பர்தானே.

இ-ள். மேற்கூறிய இம்மாது தன்னுடையகையில் அடக்கமாக யிருக்கும் பொருள்கள் யாவையும் வருஷம் மூன்றினில் இலட்சம் பொன்னையும் கேட்போர்க்கெல்லாம் ஈந்து நீதியானதுதப்பி இவளை உலகத்தோர்கள் நகைத்து உதைப்பர்கள் எ-று. 86

கண்ணிடைசிறுத்தமங்கைக் கனத்ததோர்தகத்தின்செய்கை
விண்ணிடைக்கவிழ்ந்திடாமல் மேற்பரந்தகலுமாகில்
மண்ணிடைபுலகில்வாழு மருத்துவவித்தையாலே
நண்ணிடைக்கையைப்போட்டு நறுக்கும்வல்லமைகளுண்டாம்.

இ-ள். கண்களும் இடையும் சிறுத்து ஸ்தனமானது பெருத்தும் ஆகாயத்தைப் பார்க்காமல் மேலாகப்பரந்து அகன்றிருக்குமாகின் அம்

மாது பூமியின்கண் மருத்துவத் தொழிலினால் நன்மையாகிய பெயரெடுத்து வாழும்படியான வல்லமையுண்டாம் எ-று. 87

பாதத்தில்ரேகைநாலு பத்திநூற்சதுரம்போலே
கோதத்துயிருக்குமாகிற் கோதையும்ராணிவாசம்
தீதத்துகழுத்துநூல்போய்த் தீர்க்கமாயுலகுமெய்க்க
நீதத்திலாசரிக்கும் நீதியாயாவளென்றே.

இ-ள். பாதத்தினிடமாக ரேகையானது நான்குதோன்றி நூற்சதுரம்போலிருக்கில் அம்மாது இராணிவாசமாகவாழ்ந்து கழுத்து நூலானது போனபின்பு உலகமானது மெய்க்கும்படியாயும் தீர்க்கமாகியும் ஆசாரியருக்கு நீதியாளாக வாழ்குவாள் எ-று. 88

என்றிதுவல்லார்பின்னு மேந்திழைமார்பினோடு
நன்றதோரேகையொன்று நலம்பெறப்பிறைபோல்நிற்கில்
மன்றினில்ராசரீக மருத்துவஞ்செலுத்தவல்லாள்
யென்றிவைபரிட்சைபார்த்து யியல்புவார்நூல்வல்லோரே.

இ-ள். மேற்கூறிய பலனல்லாது ஏந்திழையார்களுக்கு ரேகையானது நலந்தருகும்படிக்குப் பிறைப்போல் தோன்றிநிற்கில், அம்மாது ராசரீகமாக மருத்துவங்கள் செலுத்த வல்லாளாகுவள். இப்பலனை நன்றாகப் பரிட்சையாக்ச் சொல்குவாய் எ-று. 89

இப்படிக்குடையமங்கை யேந்திழையிடைகள்தானு
மெப்படிவுகல்போலுள்ள ராணியின்சீமைக்குண்டோ
தப்படியாகச்சேர்ந்து தனத்தையும்வேணதீய்வள்
துப்படியிதுவாமென்று துலக்கிடுகுறிகள்கண்டே.

இ-ள். மேற்கூறிய குறியுள்ள மங்கையர்களின் இடையானது உகல்போலுமுள்ளாள் ராணியாகச் சீர்மைக்கு உண்டோவெனத் தப்படியாகத் தானேசேர்ந்து தனங்கள் வேணதுவுங் கொடுப்பள். இப்பலனைக் குறிகளைக்கண்டு பேசுவாய் எ-று. 90

அரவணியிடைபோலுள்ள வரிவையர்கள்தனங்கள்ரெண்டும்
பரவியேயிருக்கும்நன்றாய்ப் பக்கத்தில்மருள்தானொன்று
துரவிடுபணம்போலங்கே தனத்திடைதுலக்கங்காணில்
இரவிலும்பகலுமேழைச் சாதியிலிணக்கஞ்செய்வாள்.

இ-ள். பாம்பணியும்படியான இடையது உள்ள அரிவையருடைய ஸ்தனங்கள் இரண்டும் பரவலாக யிருந்தும் அதின் பக்கத்தில் மருவானது ஒன்று பணம்போல் தனத்திடையாகத் துலங்குமாகின் அம்மாது இரவிலும் பகலிலும் ஏழையரிடத்தில் வாசமாக இணக்கங்கள் செய்குவளென்பர் எ-று. 91

வாளெனும்விழிகள்ரெண்டு மச்சம்போலிருக்குமாகில்
வேள்மதன்தன்னைப்போல வுள்ளதோர்புருடன்தன்னை

யாள்மதன்றனையெந்நாளு மாசையுற்றணையவல்லாள்
கேள்மதனிவளுக்குற்ற கெருவலான்மிடியனுவள்.

இ-ள். விழிகளானது இரண்டும் மச்சத்தின் விழிபோலிருக்கில், அம்மாது வேளினுடைய மகன்றனைப்போலுள்ள புருஷனை நாள் தோறும் ஆசையன்போடுங்கூடி அணைருவள். கெருவமுடையளாகி யும் மிடியாளாகு மென்பர் எ-று. 92

வேறு

சாதகன்றனக்குச் சொன்னலக்கினமுமே
சாத்திரம்பலவித முறைபொய்
பேதகமாகுமிவ ளொன்றேயேபத்திப்
பெருமையுஞ் சிறுமையும்பேசப்
போதகமதனில் மடக்கியின்னூலைப்
பொருந்திய குறிநிலச்சுழிகள்
சோதகம்பார்த்துப் பரீட்சையேபேசச்
சூத்திரமைம்பதும் பாரே.

இ-ள். சாதகர்களுக்குச் சொல்லும்படியான இலக்கினமும் சாஸ் திரங்களின் பலவித முறைப்படிக்கு பேதாபேதங்களும் பெருமையும் சிறுமையும் பேசுதற்கு மனதை ஓர்துறையாக மடக்கி இந்நூலைப் பார்த்தும் குறிநிலேச்சுழி இவைகளைப் பார்த்தும் பரிட்சையின் பலா பலன்களைச் சொல்லுதற்குச் சூத்திரமாகிய பாடல் 50-ம் பார்த்துக் கண்டுணர்கவும் எ-று. 93

பாருநீயிந்தச்சாவி சூத்திரத்தின்
பாலகம் மைம்பதுக்குள்ளே
தேருநீயல்லாற் பலகலைநூலுந்
தேரிலதற்காய தெவ்வளவோ
நூறுநீவயசுக் கிருந்துழைத்திடினும்
நூல்களைத் தெரிவதுபெரிது
வேறுநீமனதுள் புரியவும்வேண்டாம்
விவேகம்வைத் திருந்தநூல்விரும்பே.

இ-ள். இந்தச் சாவியின் சூத்திரத்தை ஐம்பது பாடலுக்குள் ளும் நீ கண்டு தேரவேண்டும். அல்லது நூற்களும் பார்த்து உணர்வ தற்கு வயதானது போதாது. அப்படிக்கல்லவென்று நூறுவயதளவும் இருந்து உழைக்கினும் நூற்களைத் தெரிந்துணர்வது அருமையாக விருக்கும். ஆகையால் வேறு சங்கர்ப்பம் யாதும் மனதில் வைக்காமல் புத்தியானது பெரிதாகக்கொண்டு இந்நூலை விரும்பிப் பார்ப்பாய் எ-று. 94

விருப்பெனும்வயது நூறதுக்குள்ளே
விருப்பமா மறுபதுத்தமடாங்

கரும்பெனும்ருசிப்பு பொசிப்பதுபோலக்
  கடுகவீரெட்டுக்குமேலாங்
குரும்பெனுங்கெருவா னுலககாமியமாய்க்
  குடிமகள் தவிர்ப்ப தெவ்விதமோ
திரும்பெனுமனசு மதுரமுக்கரும்
  திரும்பியே தூர்முளையேறல்.

இ-ள். வயதானது நூறுக்குள்ளும் அறுபதுவரைக்கும் உத்தமமாகும். கரும்பைப் பொசித்தால் எவ்வளவு ருசியோ அவ்வளவு ருசியுள்ளதாக விருப்பது வயது பதினாறுக்குமேலாகும். குறும்புகளும் கெருவமாகப் பேசுதலும் உலக காமியமாகுதலு முண்டாகியும் குடிமகள் தவிர்ப்பதெவ்விதமோ அறியோம். அன்றியும் மனதானது எவ்விதமோ திரும்புவதும் தூர்முளையேறலும் அறியோம் எ-று. 95

ஏறிடுங்கரும்பு பொசிப்பதெவ்வாறு
  யெழுபது வறுபதெவ்விதமோ
கூறிடுந்தமிழ்கள் சோசியனூல்கள்
  கூர்ந்துநீதேர்ந்திடயாதோ
வேறிடுமனது யிதற்குள்ளேயென்ன
  வேணதோர்நூல்களை விரும்ப
தேறிடும்படியே யைம்பதின்முறையைத்
  தெளிந்தவன்சோசியன் தேர்வான்.

இ-ள். கரும்பைப் புசிப்பது எவ்வாறுயெனில்; எழுபது அறுபது வயதுக்குள்ளாகவும் பேசும்படியாகிய தமிழ்களும் சோதிடநூற்களும் மனமானது கூர்ந்துத் தேர்வதற்கு எவ்விதமோ அவ்விதமாக வேண்டிய நூற்களையுந்தேடி விரும்பாமற்படிக்குத் தேறும்படியாக இந்த அன்பதுபாடலில் சொல்லிய முறைப்படிக்குத் தெரிந்து சொல்குவோன் சோதிடனுகுவன் எ-று. 96

வானெனுமாகா சத்திலுள்ள
  வாரிருபத்தினே ழாகும்
தானெனும்நக்ஷத் திரங்களும்பார்க்கத்
  தாவரகெணிதங்க ளனைத்தும்
யேனெனுமுரைப்பேன் வயதுயெண்ணான்கு
  யிருதயந்தன்னிலே யிருக்கத்
தேனெனுமதுர மிராமதேவன்றான்
  றெளிந்துரைத்தே னைந்துபத்தே.

இ-ள். வாகனத்தினிடமாக விருக்கும் இருபத்தேழு நட்சத்திரங்களையும் பார்க்கத் தாவரகணிதங்கள்யாவும் உரைசெய்ய வயதுமுப்பத்திரண்டாகவும் இருதயத்திலிருக்க மதுரத்தைப்போன்ற மொழிக்கு ஒப்பாக இராமதேவன் யாவருக்குந் தெளிவாக விளங்கும்படி பாடல் 50-க்குள் உரைத்தேன் எ-று. 97

பத்தெனுமைந்துத் திறவுகோலிதனைப்
  பரிக்ஷைக ளறிந்துநீபேச
சுத்தெனும்வேண்டாம் வேறொருநூலுந்
  தொல்லையாம் வயதுனக்கில்லை
சித்தெனுமிதற்குள் லக்கினகெணிதம்
  க்ஷணமது தவிரவிடாமல்
நத்தெனுமனதைக் கூர்ந்துநீபார்த்து
  நலமிடறிரண்டையு முரைப்பாய்.

இ-ள். இந்தப் பாடல் ஐம்பதும் திறவுகோலாக விளங்கும். இதனைப் பரிட்சையாக அறிந்து நீபேசுதற்கு சுத்தி நீ அலையவும் வேண்டாம். வேறுநூலும் பார்ப்பதற்கு உனக்கு வயதோ இல்லை. இந்நூலினிற்குள் இலக்கினங் கணிதம் இவைகளில் ஒருக்ஷணமுந் தவரவிடாமல் மனதை நிலைநிறுத்திப் பார்த்து நன்மை துன்மைகள் இரண்டையுங் கண்டு உரைசெய்குவாய் எ-று. 98

உரைத்திடவங்க பங்கலக்ஷணங்கள்
  உரைப்படி நிறைப்படியாக
யிரைத்திடைநூல்வகை யளவிடைக்குறைச்சல்
  இயம்புதல்விதிமுறை சதியாய்
மறைத்திடவேண்டா மடக்கமில்லாமல்
  மனதுநீ துணிந்துநன்றாக
வரைத்திடக்குறிகள் நீர்ச்சுழித்திருக்க
  வறிந்துநன்றாகநீ பேசே.

இ-ள். சொல்லும்படியாகிய அங்க பங்க லக்ஷணங்கள் யாவும் உரைப்படி நிறைப்படியாகவும் நூலின் வகைப்படிக்கு அளவு யிடைக்கு குறைச்சலும் சொல்வது விதியின் முறைப்படியாகத் தோன்றும். சதியும் இவைகளை மறைத்துப் பேசாமற்படிக்கு பயமில்லாமல் மனமானது துணிந்து நன்றாக கண்ட குறிகள் நீர்ச்சுழிவும் இவைகளை யறிந்து பலன் சொல்கவும் எ-று. 99

இவ்விதக்குணங்குறிக ளனைத்தையும்பாடி
  யிருந்தலக்கின சாதகம்வேண்டாஞ்
செவ்விதமாக யிரண்டையுந்தெரிந்து
  தெளிந்தவன் ஜோசியனென்றே
யெவ்விதம்பலநூல் பார்த்திடவயது
  யேறுத லறுபதுக்கப்பால்
செவ்விததிருஷ்டி யிருவகைசூக்ஷம்
  செம்மையாய்த் தகைமையெவ்விதமோ.

இ-ள். மேற்கூறிய குணங்கள் குறிகள் அனைத்தையும் பாடியும், உதையமாகும் இலக்கினச் சாதகம் பார்க்கவேண்டிய அவசியமில்லாமல்

குறி குணங்கள் இரண்டையு முணர்ந்து தெளிந்தவன் ஜோசியனாகு மென்றனர். அல்லாமற்படிக்கு பலவிதமான நூற்களையும்பார்த்திட வயதோயில்லை. ஆதலால் அறுபது வயதுக்கப்பால் காது கண் என விளங்கும் இருவகைகூட்சமும் எவ்விதமாகுமோ அறியோம் எ-று. 100

மங்கையர்க்கிந்த ரேகையின்குறிகள்
மரணமகவுளாயுசு தீர்க்கம்
சங்கைகள் நன்று யுரைத்ததின்படியே
சரித்திரமறிந்து உச்சரித்தால்
பங்கயமாது சேர்ந்திடுவாழ்வும்
பகர்ந்திடலாகு மின்மிடியுங்
கெங்கையையணியு மீஸ்வரன்விதியின்
கெணிதம்பேசிடும் வல்லன்.

இ-ள். மங்கையர்களுக்கு இந்த ரேகையின் குறிகள் கண்டு உரைப்பது யாதெனில்; மரணம் மகவு ஆயுசு தீர்க்கம் சங்கைகள் இவைகளை நன்றாக உரைக்கும்படி சரித்திரங்களை யறிந்து உச்சரிக்கில் தாமரைமலரினில் வீற்றிருக்கும் சரஸ்வதியும் லட்சுமியுங் கூடி வாழ்வானது பெருகச் செய்குவர். நன்மை துன்மைகளையுங் கூறலாகும். கங்கையைச் சடாபாரத்தில் அணிந்திருக்கும்படியான ஈசுரன் விதித்தவாறு கெணிதம்பேச வல்லவனாகும் எ-று. 101

## பெண்பால் ஆரூட லட்சணம்

முற்றிற்று.



சிவமயம்

# எட்டாவது

# ஆண்பால் ஆரூடலட்சணம்—91



பாதங்கள்பூமி தன்னில் பரவிடாதிருக்குமாகில்
வேதங்கள்சகலநூலும் விரும்பியேயுணர்வானென்று
சேதங்களாகவேதான் சிதறிடாதிருக்குமாகில்
நீதங்கள்கெட்டசட்டு நிந்தனைக்காளாயாவான்.

இ-ள். பாதங்களானது பூமியின்மீது பரவாமல் யிருக்கில் அப் புருஷன் வேதங்களாகிய சகல நூற்களும் வெகு அபேட்சையோடு கற்றுணர்வானென்பர். பாதங்களானது பேதமில்லாமலும் சிதறிடா மலும் இருக்குமாகின் நீதியானது தப்பி நிந்தனைக்கு ஆளாகவிருப்பா னென்பர் எ-று. 1

இப்படிப்பாதந்தன்னி லிருக்கினுமடியிற்குள்ளே
விற்பிடிபோலும்ரேகை விளங்கவேவிரலினூடு
தப்படிபொருந்திடாமல் தடிவிரலதனிற்கூடி
யெப்படிவாழ்வனென்று யியம்பிடுமரசன்மெய்க்கே.

இ-ள். மேற்கூறியபடியுள்ள பாதங்களில் அடியில் வில்லின் பிடி யைப்போல் ரேகையுண்டாகி விரல்களினூடு பொருந்திடாமல் அடிவிர லினிற்கூட்டி யிருக்குமாகின் எவ்விதமாக வாழ்குவான்? அன்றியும் அரசனுடைய தேகத்திற்குச் சொல்லவேண்டும் எ-று. 2

அரசனுக்கிந்தரேகை யடிபெருவிரலிற்கூடி
யிரசலாயொன்றுக்கொன்று யிடையற்றுப்போகிடாமல்
உரசிடாதிருக்குமாகி லுலகத்திலகுதியாக
யிரவலன்பிச்சைக்கார னென்றுநீயியம்புவாயே.

இ-ள். அரசனுக்கு மேற்கூறிய ரேகை அடியின் பெருவிரலினிட மாகக்கூடி ஒன்றுக்கொன்று இடையானது அற்றுப்போகாமல் இருக்கு மாகின் அவ்வரசன் உலகத்தின்கண் அகுதியாகவும் இரவலனென்றும் பிச்சைக்காரனாகுவானென்றும் சொல்லவேண்டும் எ-று. 3

## வேறு

பெருவிரலடியினிற் பிணங்குசங்கிலி
வுருவதாயுரையெலா மொன்றுபோலதாய்த்
தருவெனும்நாட்டினிற் றக்கமன்னனால்
வருவதுதாமென வணங்கலாகுமே.



இ-ள். பெருவிரலின் அடியிற்சங்கிலியின் ரேகையானது உருக்கள்யாவும் ஒன்றுபோலாக யிருக்குமாகின் அப்புருஷன் பூமியின்மீது தக்க அரசர்களால் உதவியானது பெருகி வணங்குவதாகுமென்பர் எ-று. 4

வாய்ந்தமாமணி வந்துடன்மால்வரை
யேய்ந்துசுட்டி விரல்தனிலேறினல்
வாய்ந்தமாநிதி மண்ணினிற்செல்வனல்
வேந்தனுக விளங்குவிபரமே.

இ-ள். மணிக்கட்டினிடமாகநின்று மால்வரையென்னும் ஆள்காட்டி விரலினிடமாகத்தோன்றி சுட்டிவிரலின்மீது ஏறிடில் அப்புருடனுக்கு நிதியானது பெருகி பூமியின்மீது செல்வமுடையவனுகி அரசனுகவும் விளங்குவான் எ-று. 5

எண்ணியமணியென வெழுந்ததோர்வரை
நுண்ணியநடுவிற னூடுபோகிடிற்
பொன்னினைப்படைத்திடும் பூமிதேடிடு
மன்னியகல்வியில் வல்லவனுகுமே.

இ-ள். மணிக்கட்டின் இடமாகத்தோன்றி ஓர் வரையானது நடுவிரலில் பாய்ந்துப்போகிடில் அப்புருடனுக்குப் பொன் பொருள் பெருகும், பூமியானது தேடுவன்; கல்வியில் வல்லவனுக யிருப்பன் எ-று.

வஞ்சமின்மணிபெயர்ந் தெழுந்துமால்வரை
யஞ்சலாமணிவிர லதனிலேறினுற்
கஞ்சமாங்காசினிக் கரசனுகமிக
மிஞ்சியசெல்வமாம் விளங்குமேன்மையே.

இ-ள். மணியானது பெயர்ந்தெழுந்தும் மால்வரையினிடமாக நின்று அணிவிரலி லேறிடில் அப்புருஷன் காசினிமுழுதுமாளும் அரசனுகியும் செல்வமானது பெருகி வாழ்குவான் மேன்மையாகவென்பர் எ-று. 7

வேறு

மேன்மையாம்கரண்டைக்கால்க ளிரண்டதுசிறுத்துத்தேய்ந்து
நேன்மையாய்த்திரேகந்தானும் நேர்த்தியாய்ச்சிவந்துதோன்றி
லீன்மையாம்வயதீராறி லீதலம்தன்னைவிட்டு
தீன்மையாம்சேயற்ருேர்க்கு தீங்கரப்பிள்ளையாவன்.

இ-ள். கரண்டைக்கால்களிரண்டுஞ் சிறுத்து தேய்ந்து தேகமானது நேர்த்தியாகச் சிவந்துதோன்றில் அப்புருஷன் வயது பனிரண்டில் தன்னுடைய தலத்தைவிட்டுச் சென்று சேயற்ருேர்க்குப் பிள்ளையாகுவன் எ-று. 8

காலதனில்ரோமமெல்லாங் கறுத்தமோதிரங்கள்போலே
சாலவேசுருளுமாகில் சாம்பிராச்சியயோகவானும்
மேலதனிற்பின்னும்ரோம மேவியேநெருங்கப்பற்றி
மாலெனுந்திருமின்சேர மண்டலமாளவல்லான்.

இ-ள். கால்களிலுள்ள ரோமங்கள் யாவும் கறுத்தும் மோதிரங்கள் போலச் சுருண்டிருக்கின் அப்புருஷன் சாம்பிராச்சிய யோகவானுகும். மேலும் அதனில் ரோமமானது நெருங்கப்பற்றியும் இருக்குமாகின் விஷ்ணுவின் கிருபையும் திருமாது கடாட்சமும் பெருகி பூமி முழுதும் ஆளும் வல்லவனுவா னென்பர் எ-று. 9

வல்லவன்வயதுநானு மடிப்பதுபொன்றுண்டாகில்
நல்லவனதிககாமி நாயெனத்திரிவனெங்குஞ்
செல்லவன்விகாரத்தாலே செருப்படியெங்கும்பட்டு
வெல்லவன்போலேநன்றுய் வேடிக்கைப்பேச்சுள்ளானே.

இ-ள். புருஷர்களுக்கு வயற்றின் மடிப்பானது ஒன்றுண்டாகியிருக்கில் அதிக காமியாகி நாயைப்போல் எங்குந்திரிந்து விகாரமானது கொண்டு அதினுல் செருப்படி எங்கெனும்பட்டு வல்லவன்போலும் நன்றுக வேடிக்கை பேச்சுள்ளவனுகும் எ-று. 10

இப்படிவயற்றுமேலே யிடப்பக்கம்ரேகையொன்று
கப்படிகவர்போலாகி கவட்டைதான்கீழேநோக்கில்
தப்படியாகவேதான் தரணியிற்களவேசெய்து
யெப்படியலேவனென்று மியம்புமிக்குறியுற்றோர்க்கே.

இ-ள். மேற்கூறியபடி வயிற்றின்மேல் இடதுபக்கம் ரேகையானது ஒன்று கயற்றைப் போலாக்கிக் கீழாகநோக்கி யிருக்குமாகின் அப்புருஷன் பூமியின்மீது களவானது செய்து அலேகுவானென இக்குறியுள்ளோர்களுக்குச் சொல்வாயாகவும் எ-று. 11

வலப்பக்கம்விரலிலேதான் மருங்கதிரேகையொன்று
சிலப்பக்கமம்புபோலே சென்றிடுசமுதராகும்
நிலப்பக்கமிடமாய்நிற்கு நிகுநிர்ணயமரசனுவன்
தலப்பக்கம்வலத்தேபற்றிற் றரணியில்மந்திரியாவன்.

இ-ள். வலதுபக்கத்தின் விரலிதனில் கதலிரேகையானது ஒன்று தோன்றியும் சில பக்கங்களில் அம்புபோலும் விளங்கில் சமுதராகும். இடப்பக்கமாக விருக்கில் அரசனுகுவன். தலேப்பக்கம் வலமாகப் பற்றி நிற்கில் பூமியின்மீதில் மந்திரியாக விருப்பான் என மேலோர் கூறுகின்றனர் எ-று. 12

ஆமெனுமிந்தரேகை யடியதுமுடியைப்பற்றி
சாமெனுந்தலேகீழாகிற் சாவதுகருவியாலே
போமெனும்வயதெண்ணுன்கில் பொன்றிடுவானேயென்று
தாமெனுமிந்தநூலேத் தாவித்தோம்பாவித்தோர்க்கே.

இ-ள். மேற்கூறிய இந்த ரேகையானது அடியிற்றுடங்கி முடியானதைப்பற்றித் தலைக்கீழாகவிருக்கில் அப்புருஷன் கருவியினால் மரணமடைகுவன். இவன் தனக்கு வயது 32-ல் என இந்நூலில் சொல்லினோம் எ-று. 13

மன்னியவுந்திதன்னில் வலம்புரிச்சுழியேபோன்றல்
நன்னியேமார்பில்ரோமம் நாடியேநோக்கியேறில்
கன்னியேமூன்றுதாரங் கருதவேமணவிசாவள்
துன்னியேயிடையாய்நிற்கிற் சொல்லொணாச்செல்வமாமே.

இ-ள். உந்தியினிடமாக வலம்புரிச் சுழியானதுபோலு மிருந்து மார்பினில் ரோமமானது நாடிநோக்கி ஏறியிருக்கில் அப்புருடனுக்குத் தாரமானது மூன்றுசெய்து மரணமாகிவிடும். அந்த ரேகையானது இடதுபக்கமாக விருக்கில் சொல்லொணாத செல்வமுண்டாம் எ-று. ()

செல்வமாமிந்தரேகை செம்மையாய்வலமாய்ப்பற்றி
வில்வமாங்கடைக்கண்தன்னை விரும்பியேநோக்கிப்பார்க்கில்
துல்வமாந்துணிரோமங்கள் துடியதாயெழும்பிச்சாய்ந்து
வல்வமாம்வலத்தேபற்றி நின்றிடிற்செல்வனாவன்.

இ-ள். செல்வமாகிய இந்த ரேகையானது வலதுபக்கமாகப்பற்றியிருக்கக் கடைக்கண்ணால் நோக்கிப்பார்க்க ரோமங்களானது எழும்பிச்சாய்ந்து வலது பக்கமாகப் பற்றிநிற்கில் செல்வனாகுவன் எ-று. 15

இவ்வகைசுழிதான்ரெண்டு மிடமதாம்தலைகீழாகிற்
செவ்வகையரசனாகச் சேர்ந்திருவுரைந்திட்டாலு
மவ்வகைநாலினுள்ளே வகண்டிடுஞ்சர்வனாசம்
தவ்வகைகுணமாமென்று தரணியில்பரிட்சைபேசே.

இ-ள். மேற்கூறியவகையாகச் சுழியானது இரண்டும் இடது பக்கமாகத் தலைகீழாக விருக்கில் அப்புருஷன் அரசனாகவிருந்து செந்திரு கடாட்சமிருக்கினும் இவ்வகையாக நான்கு சுழித்தோன்றில் சர்வமும் நாசமாகப் போய்விடுமெனப் பரிட்சையாகப் பேசவும் எ-று.

பேசிடுமிந்தரேகை பெருமையாயொன்றுக்கொன்று
வீசிடுமதிகவித்தி யாசங்கள்விசிறிநிற்கி
லாசிடும்தமிழும்நன்றா யறிந்துகாஷாயம்பூண்டு
பூசிடும்வெண்ணீறிய பூதலமெய்க்கவல்லான்.

இ-ள். மேற்சொல்லும்படியாகிய இந்த ரேகைகளானது ஒன்றுக்கொன்று வித்தியாசமாகவிருக்கில் அப்புருஷன் தமிழ் நன்றாகக் கற்றுணர்ந்து காஷாயம்பூண்டு வெண்ணீறணிந்து உலகமெங்கும் யாவரும் [illegible]ம்படியாக விருப்பான் எ-று. 17

வல்லவனிந்தரேகை வழியதுதவறிடாமற்
செல்லவனுள்ளானாகிற் செல்வனன் திருக்கூட்டங்கள்
வெல்லவனனேகம்பேர்கள் வேண்டியஞ்சலிகள்போற்ற
நல்லவன்வேந்தனாக நகர்தனில்ரிஷிக்கும்ராசன்.

இ-ள். வல்லமையாகிய இந்த ரேகையானது வழியானது தவறாமல் அப்புருடன் உள்ளோனாகில் செல்வனாகவும் திருக்கூட்டங்களில் அநேகம்பேர்கள் அஞ்சலிசெய்து போற்ற வேந்தனாகவும் நகர்தனில் ரிஷிக்கும் ராஜனாகுவனென்பர் எ-று. 18

சிறுவிரலுயர்ந்துநெற்றி சிறுத்துபெருத்துநிற்கி
லறுதலிதன்னைச்சேர்வ னாயுசும்வயதெண்ணான்காம்
குறுவிரலகலுமாகிற் குலத்தினிலிடுக்கதாக
மறுப்புதலாகவேற்றோர் மங்கையைக்கொண்டுசெல்வன்.

இ-ள். சிறுவிரலானது உயர்ந்தும் நெற்றியானது சிறுத்தும் பெருத்துமிருக்கில் அப்புருஷன் அறுதலியைச் சேர்குவன். அவன் தனக்கு ஆயுசு 32-ஆகுமென்பர். குறுவிரலானது அகன்றிருக்குமாகின் தன்னுடைய குலத்தில் வெறுப்புண்டாகி வேற்றோர்களுடைய மங்கையரைச் சிறையானது கொண்டு செல்குவன் எ-று. 19

செல்வனுமிந்தமார்க்கஞ் சிறுவிரல்தன்னிலூடு
வில்வனும்ரேகையொன்று வில்லதுகளைத்தாப்போல
வல்லவனுமிடைகள்விட்டு வழிவிடாதிருக்குமாகில்
நல்லவனுமவன்தன்பெண்டு நகர்தனில்நீச்சர்க்கீய்வான்.

இ-ள். செல்வனாகிய இன்னோனுக்கு மேற்கூறிய மார்க்கத்தின் படி சிறுவிரலினிடமாகத்தோன்றி ரேகையானது ஒன்று வில்லானது வளைந்தாப்போலும் இடைகளைவிட்டு வழிவிடாமலிருக்குமாகின் அப்புருஷனுடைய பெண்டை நகரின்கண் நீசர்களுக்கீவான் எ-று. 20

ஈய்ந்தவன்வேந்தன்கிட்ட யேந்திழைதனைமுன்கூட்டி
வாய்ந்ததோர்மங்கைதானும் வாங்கிடுந்தனத்துக்காக
பாய்ந்ததோருலகில்வேற்றோர் பாங்கியரெனவேபேசில்
தோய்ந்ததோர்தனத்தைவாங்கி தோகையுமழைத்துசெல்வான்.

இ-ள். மேற்கூறியவண்ணமாக யீந்து அரசனிடமாக அம்மாதை அழைத்துக்கொண்டுபோய் முன்னாக நிறுத்தி அம்மங்கையர் வாங்கிய தனத்திற்காக வேற்றோருடைய பாங்கியரெனப்போகியும் தனத்தை வாங்கிக்கொண்டு அம்மாதை யழைத்துச் செல்குவன் எ-று. 21

சென்றவன்தனக்குப்பின்னுஞ் செய்கையிலின்னமொன்று
நன்றெனப்புறங்கைதன்னில் நாடியரேகையொன்று
சென்றதுபிறைபோற்றோன்றி செல்வியாம்பெற்றபிள்ளை
சென்றவன்மனதிலெண்ணு தேந்திழைதன்னைச்சேர்வான்.

இ-ள். அவர்கள் சென்றபின்பும் இன்னமொன்று கேட்பாயாக; புறங்கையதனில் ரேகையானது ஒன்று பிறையைப்போல் தோன்றி யிருக்குமாகின் அப்புருஷன் பெற்றமகளென்று எண்ணுமல் தன்னுடைய மகளைச் சேர்குவானென்பர் எ-று. 22

உடுக்கெனுமிரேகையொன்று வுறுதியாமிடதுபக்க
மிலகெடுந்துடியில்நன்ரு யிருந்திடிற்குறிசொல்வாஞய்
கொடுக்கெனுமாமரங்கைக் கொண்டவன்மண்டலத்தில்
நடுக்கெனுமருள்கொண்டாடு நடத்தையாமீனமேபேசே.

இ-ள். உடுக்கையைப்போல் ரேகையானது ஒன்று இடதுபக்கமாகத் துடையில் யிருக்கின், அப்புருஷன் குறிகள் சொல்வோனுகியும் மாமரங் கையில்கொண்டு உலகத்தில் மருளானது ஆடும் நடத்தையும் யீனமாமென்பர் எ-று. 23

பேசிடும்வலதுபக்கம் பிணைச்சலாயிரேகைகொண்டு
வீசிடும்படியேகச்சை விரும்பிடிமிடையில்நிற்கி
லேசிடும்படியேகொண்ட யேந்திழைநடத்தையாலே
கூசிடும்வெட்கத்தாலே கூபத்தில்விழுந்துசாவான்.

இ-ள். சொல்லும்படியாகிய வலதுபக்கத்தில் பிணைச்சலாக ரேகையானது இரண்டு கச்சையைப்போல் சுற்றிக்கொண்டு இடையினிடமாக நிற்கில், அப்புருஷன் தான்கொண்ட மனையாள் செய்யுந் துர்நடக்கையினுல் மனமானது தாளாமல் வெட்கமடைந்து கூபத்தில் விழுந்து மரணமாகுவன் எ-று. 24

சாவதுக்கிந்தரேகை சார்ந்திடுமிடுப்பைவிட்டு
மேவதுசமயந்தன்னில் மேவிடும்கலையிற்குள்ளே
ஆவதுமகத்தில்மொட்டு ஆரங்கள்போட்டுநன்ருய்ப்
போவதுமரணமென்று புகலுவாயிவையுற்ருேர்க்கே.

இ-ள். மேற்கூறிய் ரேகையானது இடுப்பைவிட்டு மையமாகவும் கலையினுக்குள்ளு மிருக்கில் நன்ருகவுமிருந்து மரணமாகுவனென்று இக்குறியுள்ளோர்களுக்கு சொல்லவேண்டும் எ-று. 25

அளவிடையளக்கும்பேர்க ளனந்தலிற்கயர்நூல்வாங்கி
தனவிசையபாதமொட்டி தலைக்குறிதன்னையொட்டி
யிளகியேயிருக்கும்பானு மெழுந்தலிலளந்திடாதே
பளகியபடியிலக்கம் பரிசதுபகருமென்றே.

இ-ள். அளவானது அளந்துபார்க்கும் பெயர்கள் நூல்கயறுனது வாங்கிப் பாதத்தை ஒட்டிப்பிடித்துத் தலையையொட்டிப் பார்க்கவேண்டியது. ஆனல் இரவில்பார்க்கவேண்டும். சூரியன் மறையாமுன்னும் அளவிடக்கூடாது. பழக்கமாக இலக்கம்பார்த்து பலாபலன்களைப் பகர்வாயாகவும் எ-று. 26

என்றெனுமாணும்பெண்ணு மிவ்வகைசமயம்பார்த்து
நன்றெனுமளவுநோக்கி நாடுறேம்வெவ்வேருக
சென்றெனும்நூலின்செய்கை செயமபசெயங்கள்ரெண்டும்
பொன்றெனுமரணநாளும் புகலுவோங்குறியுள்ளோர்க்கே.

இ-ள். ஆண் பெண் இருவர்களுக்கும் இவ்வகைச் சமையங்கள் பார்த்து அளவானது நோக்கி அதை வெவ்வேருகப்பிரித்து நூலின் அளவறிந்து செயம் அபசெயம் இவைகள்ரெண்டும் மரணமாகிய நாளும் சொல்வாய் குறியுள்ளோர்களுக்கும் எ-று. 27

வேறு

தோளொடுநடுவிரல் தொட்டுரெட்டிசெய்
நீளமத்தடியொடு நெற்றிநீண்டிடிற்
காலேதன்னுயிரொடு கண்ணுஞ்செல்வராய்க்
கோளறுசதாசிவங் குலாவுஞ்செல்வமே.

இ-ள். தோள்முதலாக நடுவிரல் வரைக்கும் அளந்து அதை இரட்டையாகச்செய்து நீளமதை அளந்துபார்க்கில் நெற்றியானது நீண்டிருக்கில் அப்புருஷன் தன் உயிரோடு செல்வமுடையவனுகி பரமசிவத்தினுடைய கிருபையானது பெருகும் எ-று. 28

வேறு

செல்வவான்முடியையொட்டிச் சேர்ந்திடில்கனவானுவான்
வெல்வவான்கப்பம்வாங்கும் வெண்சமர்க்குடையகோமான்
வல்வவான்முடிகள்போன்ற மகுடங்கள்தரிக்குமன்னன்
நில்வவான்ருரமேழும் வைத்தரசாள்வனென்றே.

இ-ள். அளவிட்டுப்பார்க்கில் சிரசையொட்டி யிருக்குமாகின் அப் புருடன் கனவானுகுவன்; கப்பம்வாங்கும்படியான சமருக்குடைய கோமானுகியும், சிரசில் மகுடங்கள்தரிக்கு மன்னனுகுவன். இவன் தனக்கு தாரமானது ஏழுமுடைத்தாய் வைத்துக்கொண்டு அரசானது ஆண்டு வருகுவானென்பர் எ-று. 29

மன்னியபுருவம்நிற்கில் வாழ்வயதெண்பதாகு
முன்னியமூக்கதாகில் முடிபுமேயெழுபதாகு
மன்னவாயறுபத்தைந்துசென் ருகியமகிமைதானுஞ்
சொன்னதோர்குலத்துக்கெல்லாஞ் சுருக்கமீதெண்ணலாமே.

இ-ள். அளவானது புருவம் வரைக்கும் நிற்கில் அவன் தனக்கு வயது எண்பதாகும். மூக்கின்வரைக்கும் நிற்கில் வயது எழுபதாகும். வாய்வரைக்கும் நிற்கில் வயது அறுபத்தைந்தாகும். இம்மகிமைசொல் லும்படியாகிய குலம் யாவற்றுக்கும் சுருக்கம் இதாகுமென்பர் எ-று.

வேறு

அக்குறிகழுத்தில்வந் தமருமாகில்
தொக்கியவயதுமேல் சொல்லிலன்பதா
மிக்கதுநெஞ்சுறில் வெறுமைதன்னுடன்
புக்கதோர்வய திருபத்துமாகுமே.

இ-ள். அவ்வளவானது கழுத்துவரைக்கும் வந்து அமர்ந்திருக்குமாகின் அப்புருடனுக்கு வயது அன்பதாகும். நெஞ்சுவரைக்கும் வந்து நிற்கில் வெறுமைப்படுகுவன் வயது இருபதாகு மென்பர் எ-று. 31

வேறு

கழுத்தினில்வரைகள்நான்கு காமுறுபிடரிதன்னி
லழுத்திறுபசுமைதானு மானையின்கண்ணைப்போலே
குழித்தறுமுதுகின்கீழே குளிர்ந்துதானிருக்குமாகி
லழித்தருசெல்வந்தானும் வயதுநாற்பத்துமூன்றுமே.

இ-ள். கழுத்தினிடமாக வரையானது நான்கும் பிடரியினிடமாகப் பசுமையைப்போன்ற நிறமுடனும் யானையின்கண்ணைப்போலும் முதுகின்கீழ் யிருக்கின் அப்புருடனுக்குச் செல்வம் பெருகும், வயதானது நாற்பத்துமூன்றுகுமென்பர் எ-று. 32

ஆமெனுமந்தரேகை யாரூடமுற்றதாலே
சோமனைப்போலேவாழ்வன் சொகுசுள்ளராசனுவன்
பூமனுயானைகட்டிப் பூதலமிக்கவாழ்ந்து
தாமனையார்க்குப்பின்னே தான்மரணங்களாவான்.

இ-ள். மேற்கூறிய ரேகையானது ஆரூடமாகத் தோன்றினதினுல் அப்புருடன் சந்திரன்போல் வாழ்குவன். சொகுசுள்ள இராஜனுகுவன். யானையானதுகட்டி பூமியின்கண் யாவரும் புகழும்படியாக வாழ்ந்து மனையாளுக்குப் பின்னும் தான் மரணமாகுவன் எ-று. 33

ஆமெனும்வருஷமொன்றி லாக்கமாந்தலைவிமுன்னே
சீவநாம்பிராணன்போக செல்வனேயில்லைபின்னும்
கோவனுமிந்தமன்னன் கொண்டிடும்வாழ்வுசுத்தம்
ஈவனுந்தருப்போல்வேசிக் கீய்ந்தவன்மாண்டுபோவான்.

இ-ள். வருஷமானது ஒன்றில் தலைவியாகிய மனையாளும் மரணமடைந்துபோகவும் இவர்களுக்குச் சந்ததி யில்லாமையினுலும் மனையாளுக்குப் பின்பு இந்த மன்னன் வாழ்வானது சுத்தமாகவும் தனமுதலானதும் வேசியர்க்கீய்ந்து மரணமடைகுவனென்பர் எ-று. 34

வேறு

கொடியானைக்கண்கள்முதல் மேனியான
கொடியாவுமுள்ள குரிசில்

வடிவேல்விமானம் வரிவில்லதொடு
மலர்நேமியும்பர் மலரின்மால்
முடைதாங்குமுயர் தோரணங்கள்
வுயர்பெற்ற வாவுகமலம்
மடுவாவியொடுகரங் கள்கையி
னுளதாகில் மன்னவனே.

இ-ள். கொடியைப்போலும் யானைக்கண்கள் முதலானமேனியும் கொடிகள் யாவுமுள்ளகுரிசிலும் வடிவுடைய வேலைப்போலும் விமானத்தைப்போலும் வில்லைப்போலும் புஷ்பத்தைப்போலும் தேவர்கள் போலும் மால்ரேகையும் உயர்தோரணங்கள் போலும் வாவுபோலும் கமலம்போலும் மடுவாவியோடுமாகத்தோன்றும் ரேகைகள் கரத்தினிடமாகவும் கையினுள்ளிருக்குமாகில் மன்னவனாகுவன் எ-று. 35

வேறு

கொடியெனுமிரேகைதானுங் கொள்ளிடச்சென்றுப்போல்
நெடியதாய்வெட்டில்லாமல் நேர்த்தியாய்துலங்குமாகில்
வடிவெனுந்திருமாதின்சேர்வை வையகமாள்வனன்றி
படியெனும்வலக்கைதன்னில் பலனிதுநிசந்தப்பாதே.

இ-ள். கொடியைப்போன்ற ரேகையானது கொள்ளிடமாச்சென்றுப்போல் நெடியதாகவும் வெட்டில்லாமல் நேர்த்தியாகத் துலங்குமாகின் அப்புருஷன் திருமாதின் சேர்வையானது பெற்று வையகத்தை யாள்குவன். இந்த ரேகையானது வலதுகரத்தி லிருக்கில் பலனானது யாவுந் தப்பாதுயென்றனர் எ-று. 36

ஆனைநேத்திரத்தினிரேகை யாங்குளிமணித்துவாரம்
யானையின்றமர்வீழ்ந்தாப்போற் பாவகம்செவியிற்பொங்கும்
தானையேதாங்கும்வாறுபோல் தாபித்துயிருக்குமாகில்
சேனையோதளங்கள்மேய்க்கச் சேவிக்கயெஜமானுவன்.

இ-ள். நேத்திரத்தினிடமாகத் தோன்றிய ரேகை மணித்துவாரம்போலும் யானையின்றமர் விழுந்தாற்போலும் பாவகம் செவியிற் பொங்கும், யானையானது தாங்கும்வாறுபோலும் தாபித்திருக்குமாகின் அப்புருஷன் சேனையும் தளங்களும் பெருகவுண்டாக யாவரும் சேவிக்கும்படியான எஜமானாகுவன் எ-று. 37

முதலெனுமிரேகைதானு முடிந்துசாக்குப்போல்
யிதமெனுமொன்றுக்கொன்று யேறிடாதிருக்குமாகில்
விதமதாய்லக்ஷங்கோடி திரவியவிஜயமுள்ளான்
சதமதாய்வாழ்வனென்று சாற்றுமிக்குறியுள்ளோர்க்கே.

இ-ள். முதலாவது ரேகையானது சாக்குப்போலு மிருந்து ஒன்றுக்கொன்று ஏறாமல்படிக்கு யிருக்குமாகின் அப்புருஷன் ஒருலட்சங்

கோடி பொன்தேட விஜயமுள்ளவனுகி சதமாக வாழ்குவானென்று சொல்கவேண்டும் இக்குறியுள்ளோர்களுக்கு மென்றனர் எ-று. 38

மேனியாமிரேகையொன்று மேவியேபிணைச்சலாக
தானியாய்வளைத்துச்சுத்தி ஸ்தாபித்துமிருக்குமாகில்
மானியாம்பொய்யில்லாத மார்க்கவானென்றுபேசு
ஞானியாமுலகுக்கெல்லாம் ராஜாக்கள்பணியவாழ்வான்.

இ-ள். மேனியென்னும் ரேகையானது ஒன்றுக்கொன்று தோன்றிப் பிணக்கலாக வுணர்ந்து சுத்தியுமிருக்குமாகின் அப்புருஷன் மானியாகவும் பொய்சொல்லாதவனுகவு முடைமார்க்கவானுகி ஞானங்கள் யாவுங் கற்றுணர்ந்து உலகையாளும் இராஜாக்கள் யாவரும் பணியும்படியாக வாழ்குவானென்பர் எ-று. 39

அரவெனுமிரேகைதானு மப்பனேசொல்லக்கேளாய்
கெரவெனுங்கெருடபஞ்சாட் சரத்தினிற்செய்யுளாலே
பரவெனுவிஷங்கள்போகப் பார்க்கவல்லமைகளுள்ளான்
குரவெனுங்குளுவைச்சாதிக் குற்றவன்புணர்ச்சிசெய்வான்.

இ-ள். அரவமென்னும் ரேகையானது யிருக்குமாகின் அப்புருஷன் கெருடபஞ்சாட்சரத்தினுலும் செய்யுள்களாலும் விஷங்களானது போக உச்சரிக்க வல்லமையுள்ளவனுகியும் குளுவைச்சாதி மங்கையைப் புணர்ச்சி செய்குவானென்பர் எ-று. 40

கரத்தினில்குரிசில்ரேகை கருதியேயிருக்குமாகில்
மரத்தினில்நீசபங்கம் மதத்திநீர்பிரிந்துபோவன்
திரத்தினிலுரைக்கநீயும் திகைத்திடாமற்றூன்பேசி
நிரத்தினிற்பசுமையாகி நிச்சயம்பொசிக்கவல்லான்.

இ-ள். கரத்தினிடமாகக் குரிசில் ரேகையானது யிருக்குமாகின் அப்புருஷன் நீசபங்கமாகி மதத்தைவிட்டுப் பிரிந்து போய்விடுகுவன். பூமியின்மீது சொல்லுதற்கு நீயும்திகைத்திடாமல்பேசிட அந்தரேகையானது நிரம் பசுமையாகவிருக்கில் நிச்சயமாகவும் நீசமத்தில்சேர்ந்து அன்னம் பொசிப்பான் எ-று. 41

வேலெனுமிரேகைதானும் வேடிக்கையாகவேதான்
கோலெனுமகில்போற்செய்கை கூர்மையாயிருக்குமாகில்
சேலெனும்வாலையொவ்வா சினைகளாம்வரப்பிரசாதம்
ஞாலங்கள்மெய்க்கமீய நடத்தையுள்ளவனும்பேசே.

இ-ள். வேல்ரேகையானது வேடிக்கையுள்ளதாகியும் அகில்போல் செய்கையுள்ளதாகி கூர்மையானதும் பொருந்தியிருக்குமாகின் அப்புருஷன் வாலைக்கொப்பாக வரப்பிரசாதங்கள் பெற்று ஞாலமுழுதும் மெய்க்கும்படியாக நன்னடக்கை யுள்ளவனுகும் எ-று. 42

கோபுரம்போலுமிரேகை கொள்கையேயிடக்கைதன்னில்
தாபரஅஸ்திவாரம் ஸ்தாபித்துயிருக்குமாகில்
தீபரஞ்சகலநூலுந் தீர்க்கமாய்ப்பார்க்கவல்லான்
ஆபரன்சிவன்சோற்றுக்கு மாண்மையுள்ளவனும்பாரே.

இ-ள். கோபுரம்போல் ரேகையானது இடதுகைகளில் தாபரமாக அஸ்திவாரம் ஸ்தாபிந்திருக்கில் அப்புருஷன் சகலநூற்களையும் பார்க்க வல்லமையுள்ளவனுகியும் சிவசொத்து ஆண்மையுள்ளவனென்பர் எ-று. 43

தனுவெனுமிரேகைதானுந் தகமைமைசொல்லக்கேளாய்
மனுவெனுமவன்சொல்வாக்கு மன்னர்கள்புகழ்சொல்வாக்காம்
சனுவெனும்லாவாதேவி சகலவியாபாரஞ்செய்யும்
யெனுவில்லின்செய்புள்மார்க்க மியம்புமிக்குறியுள்ளோர்க்கே.

இ-ள். தனுசுவென்னும் ரேகையானது யிருக்குமாகின் அப்புருஷன் சொல்லும்படியான வாக்கு அரசர்கள் புகழும்படியான வாக்காகும். இலாவாதேவியும் சகலவிதமான வியாபாரங்களும் செய்குவன். வில்லைப்போல் ரேகையுள்ளோர்க்குச் சொல்லுமிப்பலன் எ-று. 44

தோடெனுமிரேகைதானுஞ் சுழிற்றிருவட்டம்போலே
கோடெனுமுள்ளங்கையிற் குறைச்சலில்லாமற்காணில்
நாடெனுமுலகில்வேஷ தாரியாய்மஞ்சள்பூசி
தேடெனும்ஸ்திரீகள்மையல் கொள்ளவேவள்ளலாவன்.

இ-ள். தோடென்னும் ரேகையானது சுழித்து வட்டம்போலும் உள்ளங்கையிற் குறைச்சலில்லாமல் இருக்குமாகின் அப்புருஷன் நாட்டின்மீது வேஷதாரியாகி முகத்தினில் மஞ்சளானதுபூசி ஸ்திரீகள் மையல் கொள்ளும்படியாக வள்ளலாக விருப்பன் எ-று. 45

இவ்விதத்தோடுரேகை யிருந்திடில்வேஷதாரி
செவ்விதாயுள்ளமாதர் சேர்ந்தணைந்திடவுஞ்செய்கை
யெவ்விதங்கற்புள்ளோர்க ளேந்திழையோரையெல்லாங்
கவ்விதஞ்சுரப்பானம்போற் கடுகவேதுடர்வானென்றே.

இ-ள். மேற்கூறியதோடு ரேகையானது யிருந்திடில் வேஷதாரியாகியும் அழகுள்ளமாதர்களைச் சேர்ந்து அணையும்படியான செய்கையும் கற்புடையோர்களாகிய மாதர்கள் யாவரையும் சுரப்பானம்போல் கடுகவும் துடர்ந்து போகுவானென்பர் எ-று. 46

என்றெனத்தொட்டுரேகை யியல்வதையின்னங்கேளு
நன்றெனக்கற்புமாதர் நாயெனவலைந்துபின்பு
சென்றெனையணைவாயென்று செம்மையாய்ப்பொருள்கைசாதம்
தின்றெனச்சேர்வாயென்று திடமுடன்காலில்வீழ்வாள்.

இ-ள். தொட்டுரேகையின்பலன் இன்னமுங் கேட்பாயாக. கற்புடைய மாதர்கள் நாய்போல் அவன்பின்பு அலைந்து என்னைச்சேர்ந்து அணைவாயென்றும் பொருளும் கையிலீந்து சாதமும்படைத்து என்னைச்சேர்வாயென்று பாதத்தில் விழுகுவார்கள். எ-று. 47

மலரெனுமிரேகைதானு மருவியேபத்மம்போலே
பலரெனும்விரிவிலாம லகன்றிடாக்குமிழ்போலாகில்
வலரெனுமுலகினுள்ள பந்துகட்கெல்லாம்நன்றாய்ச்
சிலரெனும்வேந்தர்போற்றச் செல்வவானுதவியுள்ளான்.

இ-ள். மலரென்னும் ரேகையானதுகூடிப் பத்மம்போலும் விரிவில்லாமலும் அகன்றிடாமலும் குமிழ்போலாகவிருக்கில் அப்புருஷன் பூமியின்மீதுள்ள பந்துக்கள் யாவற்றுளுக்கும் நன்மை யுடையவனாகவும் அரசர்போற்றச் செல்வமுடையவனாகி யாவருக்கும் உதவியுள்ளவனாகுமென்பர் எ-று. 48

நேமியாமிரேகையொன்று நேற்றியாம்வீசும்போல
காமியமுலகிலெங்குங் காசுகள்வேணமதெல்லாம்
வாமியாயலைந்துகெட்ட வாங்கியேமதுவுமுண்டு
பூமியில்விழுந்துகெட்ட பூட்டகமெனநீபேசே.

இ-ள். நேமியென்னும் ரேகையானது ஒன்று நேற்றியாகவும் வீசும்போலிருக்குமாகின் அப்புருஷன் காமியாக உலகினில் எங்கும் காசுகள் முதலானதுங் கேட்டுவாங்கி மதுவானது உண்டு தள்ளாடிப் பூமியின்மீது விழுந்து பூட்டகவானாகுமென்பர் எ-று. 49

உம்பெனுமிரேகைதானு முறுதியாயிடக்கைதன்னில்
கம்பமாய்விரலினூடு கவரதாயாதியந்தந்
தம்பமாயிருக்குமாகிற் றரணியிலன்னசத்திரம்
ரொம்பவேயீவாயென்று ரேகையைதெளிந்துசொல்லே.

இ-ள். உம்பெனும் ரேகையானது இடதுகரத்தில் கம்பம்போல் விரலினூடுபாய்ந்து கவர்போல் ஆதியந்தமும் தம்பம்போ லிருக்குமாகின் அப்புருஷன் பூமியின்மீது அன்னசத்திரங்கட்டி யாவருக்கும் தானதருமங்கள் செய்குவன் இக்குறியுள்ளோன் எ-று. 50

மலரெனுரேகைதானு மருவிடுவலக்கைதன்னில்
வலரெனுங்கவர்ந்தானைந்து வழுந்திடயிருக்குமாகில்
பலரெனுமுலகத்துள்ள பரிட்சைகள்போற்றநன்றாய்ச்
சிலரெனும்வைராகியாகி சிதர்வர்க்கமளிக்கலாவான்.

இ-ள். மலரெனும் ரேகையானது வலது கரத்தில் கயறுபோல் ஐந்து ரேகையானது யிருக்குமாகின் அப்புருஷன் தன்னை பலராகிய உலகத்திலுள்ளோர்கள் பரிட்சையாகப் போற்றும்படியாகவு மிருந்து வயிராக்கிய முடையவனாகியும் சிதர்வர்க்கம் அளிக்க வல்லவனாகும். ()

மாலெனுரேகைதானு மார்க்கமாய்முக்கோணம்போல்
சாலவேயிருக்குமாகில் சாம்பிராச்சியயோகமாகும்
வேலெனும்விழியிளுள்பெண் வேகமாய்மோகமாக
கோலமாய்வேந்தர்போற்றக் கோவெனயிருந்துவாழ்வான்.

இ-ள். மாலென்னும் ரேகையானது முக்கோணம்போ லிருக்குமாகின் அப்புருஷனுக்கு சாம்பிராச்சிய யோகமுண்டாகும், வேலைப் போன்ற விழிகளையுடைய மனையாளின்மேல் மோகமாகவும் அரசர்கள் போற்றவும் இருந்து வாழ்குவானென்பர் எ-று. 52

சங்கெனுமிரேகைதானுஞ் சரித்திரமுரைக்கக்கேளாய்
மங்களமாகவேதான் வலமதாய்ப்பற்றிநிற்கில்
திங்கள்வெண்குடைக்குள்நன்ருய்த் திருந்தரசுபுரிந்துவாழ்வன்
பொங்கமாமிடமதாகில் புகழ்மந்திரியெனவேசெய்கை.

இ-ள். சங்கென்னும் ரேகையினுடைய பலன் சொல்லவுங் கேட்பாயாக. அது மங்களகரமாக வலதுபக்கம் பற்றிநிற்குமாயின் அப்புருஷன் சந்திரன் சூரியன் சூழும் உலகின்கண் நன்ருகச் சகல சம்பன்னராக இருந்து அரசாள்குவான். மேற்கூறிய ரேகையானது இடதுபக்கமாக தோன்றிநிற்கில் அரசர்களிடத்தில் மந்திரியாக யிருந்து வாழ்குவானென்பர் எ-று. 53

சக்கரஞ்சதுரம்போலே சதமதாயிருக்குமாகி
லுக்கிரமென்னசொல்வே னுலகினில்மகுடவேந்த
னக்கரமிடக்கைதன்னி லனுகிடில்யூகமந்திரி
தக்கரம்பாதந்தன்னிற் றறித்திடும்செல்வனுமே.

இ-ள். சக்கரம்போலும் சதுரம்போலும் ரேகையானது யிருக்குமாகின் அப்புருஷன் பூமியின்மீது மகுடஞ் சூடும்படியான வேந்தனுகுவன். இந்தரேகை இடதுகையிலிருக்குமாகின் யூகையுடைய மந்திரியாகுவன். கரத்திலும் பாதத்திலு மிருக்கில் செல்வனுகும் எ-று. 54

தோரணமிரேகைதானுந் தொந்தமாயாதியந்தம்
காரணமாதியாகு காட்சியாய்முன்ேனோடு
தாரணிதிருக்குமாகிற் றரணியில்மகுடோர்போற்ற
கோரணிகொள்ளகப்பங் கொட்டிடவல்லனுவான்.

இ-ள். தோரண ரேகையானது தொந்தமாக ஆதியந்தமும் காரணமாகவும் ஆதியாகவும் முன்னோடு கலந்து யிருக்குமாகின் அப்புருஷன்றன்னை மகுடமன்னர்கள் போற்ற கப்பமானது வாங்கவல்லவனுகி உலகமுழுது மாள்குவானென்பர் எ-று. 55

கமலம்போலிரேகையொன்று கரத்தினிலிருக்குமாகில்
விமலனுமென்றுபேச வேந்தனும்வயதீராறில்

நிமலனுமிடக்கைதன்னில் நிச்சயித்திருக்குமாகில்
அமலனுமரசன்மந்திரி யாகுமென்றுரைத்திடாயே.

இ-ள். கமலம்போல் ரேகையானது ஒன்று கரத்தினிடமாக யிருக்குமாகின் அப்புருஷன் விமலருக்கொப்பாக வேந்தனுக வாழ்கு வன். வயது பனிரெண்டிற்குமேலும் அந்த ரேகை இடதுகையி லிருக்குமாகின் அரசனுடைய மந்திரியாகுவன் எ-று. 56

மடுவெனுமிரேகைதானு மருவியேயொன்றுக்கொன்று
நடுவெனுமூடுபாய்ந்து நாற்கவராகுமாகில்
மொடுவெனும்வேந்தன்ராசன் தன்னையேமோசஞ்செய்ய
படுவெனக்கொன்றுவென்று பாரரசாளுவானே.

இ-ள். மடுவென்னும் ரேகையானது ஒன்றுக்கொன்று நடுவாக ஊடுபாய்ந்து நான்கு கபறுபோலாகத் தோன்றுமாகின், அப்புருஷன் வேந்தனுகிய அரசனை மோசங்கள் செய்துக்கொன்று வெற்றியானது அடைந்து அவ்வுலகத்தை அரசாளுவானென்பர் எ-று. 57

மச்சமாமிரேகைதானு மருவியேயிடக்கைதன்னில்
மிச்சமில்லாமலேதான் மீனைப்போலிருக்குமாகில்
தச்சகநாகராசன் றரணியிற்பணிந்துபோற்ற
மிச்சமாய்வாழ்வனென்று மிகவுமிக்குறியுள்ளோர்க்கே.

இ-ள். மச்சரேகையானது இடதுகரத்தில் மிச்சமானது இல்லா மல் மீனைப்போலிருக்குமாகின், அப்புருஷனை ஜகராஜர்கள் போற்ற யிருந்து வாழ்குவான் இக்குறியுள்ளோனுமென்பர் எ-று. 58

வேறு

சங்குசக்கரந் தாரைநெடுங்கொடி
பொங்குநீள்கவ ரிற்குடைபொன்மழு
திங்களங்குச மாகுஞ்செழுங்குடை
யங்கமேவில்வ னரசாள்வானே.

இ-ள். சங்கு சக்கரம் தாரை கொடி கவரி குடை பொன்மழு மாசஅங்குசம் செழுங்குடை இவ்வில்வன ரேகைகள் தேகத்தின் மீதுள்ள புருஷன் உலகமுழுதும் அரசாள்குவானென்பர் எ-று. 59

பெருவிரலடியினிற் பிணங்குசங்கிலி
வுருவதாமிறையெலா மொன்றுபோலதாம்
தருவெனும்நாட்டினிற் றக்கமன்னென
வருவதுதாமென வணங்கலாகுமே.

இ-ள். பெருவிரலின் அடியினிடமாகப் பிணங்கிய சங்கிலிரேகை யானது தோன்றி யாவும் ஒன்றுபோ லிருக்குமாகின் அப்புருஷன்

பூமியின்மீது தக்க மன்னனெனன எவரும் புகழவும் வணங்கவாழ்குவன் எ-று. 60

வாய்ந்தமாமணி வந்துடனோர்வரை
யேய்ந்தசுட்டி விரல்தனிலேறினால்
மாய்ந்தமணிதனை மண்ணினிற்செல்வனாய்
வேந்தனாக விளங்கும்விபரமே.

இ-ள். மணிக்கட்டினிடமாக நின்று ஓர் வரையானது சுட்டி விரல் தனில் ஏறிநிற்கின் அப்புருஷன் பூமியின்மீது செல்வனாகவும் வேந்தனாகவும் விளங்கும் எ-று. 61

எண்ணியமணியென யெழுந்ததோர்வரை
வுன்னியேநடுவிரற் கூடும்போட்டிடில்
பெண்ணினைப்படைத்திடும் பூமிதேடிடு
மன்னியகல்வியில் மன்னனாகுமே.

இ-ள். மணிக்கட்டினிடமாக இருந்து தோன்றிய ஓர் வரையானது நடுவிரலின் கூடுபோட்டிடில் அப்புருஷன் பெண்ணைப்படைப்பன் பூமியானது தேடுவன், கல்வியில் மன்னனாகவிருப்பானென்பர் எ-று.

காக்கைக்கண்ணன் கல்வியில்வல்லவன்
நாக்குக்கூறி நடக்கினுமடமைபோல்
வாக்குக்கோடன் மதனகெருவிவீரன்
மூக்கைப்பாம்பன் முழுக்கள்ளனாகுமே.

இ-ள். காக்கையின் கண்ணைப்போலுள்ளவன், கல்வியில் வல்லவனாகுவன், வாக்கானதுகூறி நடக்கினும் அடிமைபோலாகுவன், வாக்கானது கொடுக்கமாட்டான், மதனன் கெருவி வீரன் மூக்கைப்பாம்பனாகும். இவன் உலகத்தின்மீது யாவரும் ஏசும்படியாகவும் முழுக்கள்ளனாகுமென்பர் எ-று. 63

வேறு

வெயிரறுசென்னிமேலே வாய்விசைமுதலாயுள்ள
மயிர்சிவந்துடம்புநொந்து வழிநடைக்கழிந்துபோகில்
குயிலெனமொழிந்துகைகால் கூப்பிடுங்குறிகளென்னிற்
செயிரறுசீர்மைதானுஞ் செல்வமும்தீண்டிலானே.

இ-ள். சிரசின்மேலும் வாய்விசை முதலாகவுள்ள மயிரானது சிவந்தும் உடம்பானது நொந்தும் வழிநடையானது குறைந்துபோகினும் குயில்போல் மொழியும் கைகால்கள் கூப்பிடுங் குறிகளாகின் அப்புருஷன் சீர்மையும் செல்வமும் தீண்டிலானாகுமென்பர் எ-று. 64

தீண்டிலானிதழின்கீழே திருத்தமேமொழிதானென்று
தூண்டிலைப்போலேநன்றாய்த் தூசறவிருக்குமாகில்

ஆண்டியாயுலகந்தன்னி லலைந்தாத்திரம்வேணமெதல்லாம்
தோண்டியேபினத்திசன்னி தோஷத்தால்மாள்வான்சொல்லே.

இ-ள். இதழின்கீழே திருத்தமாக மொழியானது ஒன்று இலைப் போல் நன்ருகத் தூசானது அறவிருக்குமாகின், அப்புருஷன் ஆண்டியாகி உலகமீதில் அலைந்து ஆத்திரமாக வேணமெதல்லாந்தோண்டி பினத்தியும் சன்னிதோஷத்தினுல் மரணமாகுவன் எ-று. 65

சொல்லவேகயிற்ருல்பார்த்து சொல்லிடும்மரணம்நன்ருய்
வெல்லமுச்சுழியின்கீழே விருத்தமாயிரேகையொன்று
செல்லவேநெடிதாய்நிற்கில் செல்வனுய்ச்சிவவேடத்தை
வல்லவேகளித்துசேர்ந்த வகத்தினிலிருந்துவாழ்வன்.

இ-ள். சொல்லவேண்டில் கயிற்றினுல் பார்த்து மரணமானது சொல்கவும், முச்சுழியின்கீழ் விருத்தமாக ரேகையானது ஒன்று நீண்டு நெடியதாக விருக்கில், அப்புருஷன் சிவவேடத்தைக் களைந்து செல்வமுடையவனுகக் களிப்படைந்து அகத்தில் வாழ்குவான் எ-று.

வாழ்வவன்காவிவேடம் வாங்கியேயெறிந்துப்போட்டு
மீழ்வவனில்லப்பாரில் மீதினிலச்சையுற்று
தாழ்வவன்காவிவேடத் தாஸ்திகள்வேணமெதல்லாம்
மீழ்வவன்சங்கிரார மீதினில்விரும்புவானே.

இ-ள். மேற்கண்டபடி காவிவேடத்தைக்களைந்து எறிந்துப்போட்டுச் சமுசாரவாழ்க்கையில் புகுந்து லச்சைப்பட்டு காவிவேடத்தில் இச்சையற்று ஆஸ்திகள்வேணமெதல்லாம்சேகரிக்க விரும்புவானென்றனர்.

வானெனுங்கழுத்துசந்தில் வாளதுபோலும்ரேகை
தானதுயிருக்குமாகில் தாரணிதன்னிலேதான்
சூனெனவொன்றுக்கொன்று சூதுவாதுற்றவாஸ்தி
நானெனவொருவரில்லா நாயனிலிவனுக்கீய்வார்.

இ-ள். கழுத்தின்சந்தில் வாள்போல் ரேகையானது இருக்குமாகின், அப்புருஷனுக்குத் தாரணிமீதில் ஒருவருக்கொருவர் சூதுவாதுகள் செய்து தேடியவாஸ்திக்கு ஒருவரு மில்லாமற்படிக்குப் போக அந்த ஆஸ்தியானது இன்னேனுக்குக் கிடைக்குமென்பர் எ-று. 68

அலகினில்சுழிதானென்று வப்பனேகொண்டிபோல
யிலகிலாமற்ருன்நன்ருய் விருத்தங்களற்றிடாமல்
இலகியேயிருக்குமாகி லியல்புளவொருவனுஸ்தி
கலகமுற்றிவன்றனில்லில் கடுகவேமுடுகவீய்வான்.

இ-ள். அலகினிடமாகச் சுழியானது ஒன்று கொண்டியைப்போல விலகாமற்படிக்கு நன்ருகவும் விருத்தங்கள் அற்றிடாமலும் இருக்குமாகின், அப்புருஷனுக்கு ஒருவனுடைய ஆஸ்தி கலகத்தினுல் இவனுடைய வீட்டில் கொண்டுவந்து ஈகுவான் எ-று. 69

தாடியிற்சுழிதானொன்று தரிக்குமோதிரங்கள்போலே
நாடியேநடுவில்நிற்கில் நாட்டினிற்பெட்டியோடு
தேடியேகொண்டுவந்து தெரிந்திடாமற்றனீய்ந்து
பேடியாய்ப்போய்ப்பின்னும் பேசிடநாதியில்லான்.

இ-ள். தாடியினிடமாகச் சுழியானது ஒன்று மோதிரம்போல் நடுவாகவிருக்கில் அப்புருஷன் பூமியின்மீது பெட்டியோடு பொருள் தேடிவந்து ஒருவருக்குந் தெரியாமல் ஈய்ந்து பேடியாகப்போய் பின்பு தனக்கு உகபலமாகப்பேசிட நாதியில்லாதவ னுருவனென்பர் எ-று.

தடிந்ததுபருத்துநீளுந் தண்டதையுண்டோனாகிற்
கெடுத்துடல்வியாதிதோன்றிக் கேடதைவிளைக்குமென்றே
துடித்ததோர்கோசந்தானுந் தூயதாய்ச்சிறக்குமாகில்
வடித்திடுந்தரணிதன்னில் வளம்பெறவாழ்வதாமே.

இ-ள். தடிப்பாகியும் பருத்தும் நீண்டும் இருக்கும்படியான தண் டையுடையோனாக விருக்கில், அப்புருஷனுக்குக் கெடுதியாக தேகத் தில் வியாதியானதுதோன்றி கேடானது விளைக்கும். கோசமானது சிறந்திருக்குமாகின் பூமியின்மீது வளமாக வாழ்குவானென்பர். 71

ஆங்கதோர்கோட்டமன்றி வாணில்பெற்றழகனாகி
வீங்கியநரம்புமின்றி மெய்க்கதோர்வெளுப்புமின்றி
யோங்கியநன்மையன்றி யொப்புறவுடையதாகில்
தேங்கமழ்மொட்டுப்போலே விரும்பிடிற்செல்வனாமே.

இ-ள். கோஷ்டமானது ஒன்றுமில்லாமல் ஆணில்பெற்ற அழகு டையவனாகி வீங்கிய நரம்பில்லாமலும் வெளுப்பில்லாமலும் நன்மை யன்றி யிருக்குமாகின், தேங்கு கமுகு இவைகளின் மொட்டுப்போல் விரும்பிடில் செல்வமுடையவனாக வாழ்குவான் எ-று. 72

வலஞ்சுழிதாரையொன்றாய் வளைந்துநாப்பாயுமென்றால்
நலந்தருமார்க்கமுண்டாம் நான்குடனிரண்டுநன்மை
பலங்கொடுயெட்டுமொன்றும் பனிரண்டுமுடையதாகில்
கலந்ததுசுற்றிப்பாயிற் கஷ்டமும்விளைக்குமென்றே.

இ-ள். வலதுசுழியின் தாரையானது ஒன்றாய்வளைந்து நாப்பாயு மாகின் நன்மையானது தருகும், மார்க்கமானது உண்டாகும், அதில் நாலும் இரண்டும் நன்மையாகும்; பலமானதுகெடும், எட்டும் ஒன்றும் பனிரண்டு உடையதாகிக் கலந்து சுற்றிப்பாயுமாகில் கஷ்டமானது விளைக்குமென்றனர் எ-று. 73

கஷ்டமாம்நாலும்ரெண்டு கடுகவேவாறுமேழும்
நஷ்டமாமெடுத்தமார்க்கத் தொழிலெலாம்நாசமாகுந்
திட்டமாமிதுபொய்யாது திருந்தவேநலமும்பத்து
அஷ்டயிஸ்வரியவானு யறையலாமிக்குறியுள்ளோர்க்கே.

இ-ள். கஷ்டத்தையுண்டாக்கும் நாலும் இரண்டுமாகில் ஆறும் ஏழும் நஷ்டமாகத்தான் முயற்சியாக எடுத்த தொழில்கள் யாவும் நாச மாகப்போகும் பொய்யாகாது. பத்தாகில் அஷ்டஐஸ்வரியமும் பெற்று வாழ்குவானென்று இக்குறியுள்ளோர்க்கு உரைக்கலாம் எ-று. 74

ஒன்றியபீசமொன்றே யாகிடிலுறுதியில்லை
நின்றிவைரெண்டுமொன்றாய் நேர்த்தியாய்நின்றுதோன்றில்
அன்றதுசிவக்குமாகி லாயசுகுறைவதாகும்
மன்றினிற்பசியால்நொந்து வாடியேதவிப்பனென்றே.

இ-ள். பீசமானது ஒன்றாகில் உறுதியில்லையாம். இரண்டுமொன் றாக நேர்த்தியாகவும் நின்றுதோன்றுமாகினும் சிவக்குமாகினும் ஆயு சானது குறைவாகும். பூமியின்மீது பசியினால்நொந்து மனமானது வாடித்தவிப்பானென்றனர் எ-று. 75

நெற்றியில்வரைதானைந்து நேர்த்தியாயிருக்குமாகில்
சத்தியம்வயதுநூறு தரித்திரம்பார்ப்பான்காணே
புத்தியிலறிந்துநிற்கப் புகலுவானரையொன்றுக்கு
சித்தியாம்வயதைநன்றாய்ச் சிறக்கவேவுரைக்கக்கேளே.

இ-ள். நெற்றியில் வரையானது ஐந்துயிருக்கில் அப்புருஷனுக்கு வயது நூறாகும் சகல தரித்திரங்களும் பார்ப்பான். புத்தியினால் அறிந்து நிற்கவும், வரையானது ஒன்றினுக்குச் சித்தியாகிய வயதை நன்றாகவும் வுரைக்கக் கேளுமென்றனர் எ-று. 76

கேளென்றாற்பிடரிதன்னிற் கெருவிதரேகையொன்று
தேளென்றாலதுபோலங்கந் தெரிந்தங்கேயிருக்குமாகில்
தோளென்றாலவன்தன்செய்கை துகர்த்தவன்சுத்தமாகில்
ஆளென்றாலச்சமாக ஆணவனிவனும்பேசே.

இ-ள். பிடரிதன்னில் கெருவித ரேகையானது ஒன்று தேளைப் போல் தேகமுடையதாகித் தெரியும்படியாக விருக்கில் அப்புருஷ னுடைய செய்கையாதெனில் சுத்தமுடையவனாகியும் அச்சவானாகியும் உடைய ஆணவனிவனுமெனப்பேசும் எ-று. 77

பேச்சென்றாலிந்தரேகை பிடரிவிட்டெங்கேயேனும்
வீச்சென்றாலந்தமார்க்க மிருக்கபொல்லாதகோளன்
ஏச்சென்றாற்பொல்லாசத்திய மெங்கெனும்பேச்சேயாச்சிவ்
வாச்சென்றாலிவனுக்கொப்போ வாறுரைக்குறியுற்றோர்க்கே.

இ-ள். பேசும்படியாகிய இந்த ரேகையானது பிடரியை விட்டு யெங்கேயேனும் மேற்கூறிய மார்க்கமாக விருக்கில் அப்புருஷன் பொல்லாத கோள் சொல்வோனாகுவன். யாவரும் பேசும்படியாக பொல்லாத சத்தியங்கள் செய்குவானென்றும் பேச்சாகும். இவனுக் கொப்பாக உரைக்கவேண்டும் இக்குறியோர்க்கும் எ-று. 78

கோடதாமிரேகையொன்று கொள்கையேவலதுபக்கங்
கூடெனுமல்குல்தன்னிற் கூடியேயிருக்குமாகில்
மாடதைமேய்த்துச்சீவ னார்த்தமேசெய்யவல்லன்
நாடதிலிவனைப்பார்த்து நாகரீகமாகப்பேசே.

இ-ள். கோடதாகிய ரேகையானது ஒன்று வலதுபக்கமாக அல்குல்தன்னில் கூடியிருக்குமாகின் அப்புருஷன் மாடு மேய்த்துச் சீவனம் செய்குவன். பூமியின்மீது இவனுடைய குறியைப் பார்த்துப் பேசவும் எ-று. 79

குண்டியிற்சுழிதானொன்று குணங்களையாளிபோலே
வொண்டியேயிருக்குமாகி லெரண்டொடிதன்னைவிட்டு
யண்டிடாபிரதேசத்தி லர்த்தங்களுரைத்துப்பின்னும்
கண்டபேர்களித்தெண்ணான்கிற் கடியதோர்மரணஞ்சொல்லே.

இ-ள். குண்டியினிடமாகச் சுழியானது ஒன்று யாளியைப்போலுமிருக்குமாகின் அப்புருஷன் தன்னுடைய மனையாளைவிட்டுப் பிரதேசத்தில் சென்று அர்த்தங்களானது உரைத்தும் பின்பு கண்டவர்கள் யாவருங்களிக்க விருந்தும் 32-வயதில் மரணமாகுவன் எ-று. 80

பீசத்தில்ரேகையொன்று பிணைச்சலாயறுபட்டாற்போல்
மாசறுத்தோளில்நீள மார்க்கமுற்றிருக்குமாகில்
தேசத்தில்விற்கும்புல்லைச் சுமந்துசீவிப்பான்நீ
யீசத்துரேகைபார்த்து யியம்பிடுநிசந்தப்பாதே.

இ-ள். பீசத்தினிடமாக ரேகையானது ஒன்று பிணைச்சலாக அறுபட்டதுபோலும் மாசானது அற்றுத் தோளின்மேல் நீளமாகயிருக்குமாகின் அப்புருஷன் தேசத்தின்மீது விற்கும்படியான புல்லைச் சுமந்து சீவனஞ்செய்குவான். இந்த ரேகையைப் பார்த்து பலாபலன் சொல்லுவதில் நிசமானது ஒன்றுந் தப்பாது எ-று. 81

முறமதுபோலும்ரேகை முடிவதாய்தீர்க்கமாக
வுறமதிலிருக்குமாகி லுலகினிற்சீவனார்த்தம்
பறமதையென்னசொல்வேன் பாரினில்வேசியோர்க்குத்
திறமதுசெலுத்துந்தூதன் தெரிந்துநீவறிந்துபேசே.

இ-ள். முறத்தைப்போல் ரேகையானது முடிவாகியும் தீர்க்கமாகவுமிருக்கின் அப்புருஷன் உலகமீது சீவனார்த்தஞ்செய்ய வேசியர்களுக்குத் தூதானதுசென்று பிழைப்பானென்பர் எ-று. 82

இடக்கரந்தனிலோர்ரேகை யியம்புங்கோடாலிபோலே
தொடக்கமாயிருக்குமாகில் தேசத்தில்ஸ்திரீசாதிக்கு
மடக்கொடிதனக்குநன்றாய் மஞ்சள்வெங்நீரிரண்டும்
நடக்கிறவயணமொன்று நன்மையாமினம்நீபேசே,

இ-ள். இடது கரத்தினிடமாக ஒரு ரேகையானது கோடாலி போலுமிருக்குமாகின், அப்புருஷன் தேசத்திலுள்ள ஸ்திரீசாதிகளுக்கு மஞ்சள் அரைத்துக்கொடுத்தும் வெந்நீர் காய்ச்சியீந்தும் பிழைக்கும் நடக்கையாளுகும் எ-று. 83

பாடத்திற்சுழி தானொன்று படத்தினில்விளக்கைப்போலே
வூடத்துப்போயிடாமல் வுறுதியாயிருக்குமாகில்
வேடத்தைப்பூண்டுநன்ருய் விஷவித்தைசகலதெல்லாம்
நாடத்துப்புகழநன்ருய் நல்வயித்தியனும்பேசே.

இ-ள். பாடத்தினிடமாகச் சுழியானது ஒன்று படத்தில் விளக்கைப்போலும் ஊடத்துப்போகாம லிருக்குமாகின், அப்புருஷன் வேடங்களானது பூண்டு விஷவித்தைகள் சகலமானதும் கற்றுணர்ந்து நாட்டிலுள்ளவர்கள் யாவரும் புகழ வயித்தியனுகுவானென்பர் எ-று.

அலகினில்ரேகையொன்று யழுந்திடநெடுநேராக
விலகிடாதிருக்குமாகில் விதமதுமச்சத்தாலே
வுலகினில்சீவனுர்த்த முறுதியாமெனநீபேச
லலகிடவேண்டாஞ்சொன்னேன் மயமதையறிந்துகொள்ளே.

இ-ள். அலகினிடமாக ரேகையானது ஒன்று தோன்றி நெடுநேராகவும் விலகிடாம லிருக்குமாகில் அப்புருஷன் மச்சமானது விற்று உலகின்மீது சீவனஞ்செய்குவன் எ-று. 85

பல்லதுயெத்துகொத்தாய் பருத்துப்பொருந்திநிற்கில்
நல்லதுயிருக்குந்தேகம் நாக்கிளைப்போலதாகில்
வில்லதுசகலமார்க்க விதங்களுஞ்செய்யவல்லன்
அல்லதுபிசகொன்றில்லை அப்பனேவறிந்துபேசே.

இ-ள். பல்லானது எத்தாகவும் கொத்தாகவும் பருத்துப்பொருந்தி நிற்கில், அப்புருஷனுக்குத் தேகம் நன்மையாகும். நாக்கிளைப்போலாக விருக்கில் வில் முதலான சகலமார்க்கங்கள் யாவுஞ்செய்குவன். பிசகானது யாதொன்றுமிராது குறியானது அறிந்து பேசவும் எ-று. 86

கண்டத்திற்சுழி தானொன்று கடுகிவெட்டருவாள்போல
துண்டித்துப்போகிடாமல் துலக்கமாயிருக்குமாகில்
பண்டத்துக்கென்னசெய்வேன் பாவைபோல்பேசவல்லான்
பிண்டத்துக்கெதியில்லாமற் பிரட்டுகட்டுமையோன்பேசே.

இ-ள். கண்டத்தினிடமாகச் சுழியானது ஒன்றுவெட்ட அருவாள்போலும் துண்டித்துப் போகாமல் இருக்குமாகின், அப்புருஷன் ஸ்திரீகளைப்போல்பேச வல்லமையுடையவன், பிண்டத்திற்குக் கெதியில்லாமற் பிரட்டும் கட்டுமாகப் பேசுவோ னெனப்பேசும் எ-று. 87

இச்சுழிகழுத்தைவிட்டு யிரங்கியேயெங்கணுந்தான்
அச்சுழியிருக்குமாகி லரிவையர்மையல்கொள்ள

மெச்சுழிக்குடையோன்வல்ல மேன்மையாம்வேசியோரை
யுச்சுழிகொள்ளவல்லா னுண்மையாமெனநீபேசே.

இ-ள். மேற்கூறிய சுழியானது கழுத்தைவிட்டு இறங்கி எங்கே யேனும் அந்தச் சுழியானது இருக்குமாகின் அப்புருஷனைப் பார்த்து ஸ்திரீகள் மையலானதுகொள்ள மெய்சுழிக்குடையோனுகியும் வல்ல மையுடைத்தாய் மேன்மையாகிய வேசியர்களைக் கைவசமாகக்கொள்ள வல்லமையுள்ளவனெனப்பேசும் எ-று. 88

கக்கத்திலிரேகையொன்று கருதியேபிணைச்சல்போலே
பக்கத்திலிருக்குமாகில் பாரினிற்பெற்றபிள்ளை
வெட்கத்தையென்னசொல்வேன் வேண்டியபிதாவின்செய்கை
திக்கற்றபாவிநன்றாய்த் திருந்தவேயணைந்துசேர்வான்.

இ-ள். கக்கத்தினிடமாக ரேகையானது ஒன்று பிணைச்சல்போலும் பக்கத்தில் இருக்குமாகில் பூமியின்மீது பெற்றபிள்ளையின் வெட்கத்தைச்சொல்லமுடியாது. பிதாவினுடைய செய்கையாக இத்திக்கற்ற பாவி திருத்தமாக அணைந்து சேர்குவானென்பர் எ-று. 89

இப்படிசுழிதானொன்று யிருந்திடத்துடையிலூடு
தப்படியில்லாமற்றன் றரணியிற்சகோதரானை
துப்படியில்லாப்பாவித் துயர்ச்சையாய்ச்செய்வேனென்று
யெப்படியுரைக்கலாமென் றெண்ணியேயுரைத்திடாயே.

இ-ள். மேற்கூறியபடி சுழியானது ஒன்றயிருக்கத் துடையின் ஊடாக விருக்க அப்புருஷன் பூமியின்மீது சகோதரனை யில்லாமற்படி துயர்செய்வேனென்று சொல்குவான் எ-று. 90

இமைதனிற்சுழிதானொன்று யிடமதாய்வலமாய்ப்பற்றி
யமையதில்துலகமாகி லரசனுய்ப்பெற்றதாயை
சமையமாய்ச்சேர்க்கைசெய்யுஞ் சண்டாளசென்மமென்னு
வுமையொருபாகன்சொன்ன வுறுதியைவுரைத்திடாயே.

இ-ள். இமையினிடமாகச் சுழியானது ஒன்று இடமாக நின்று வலமாகப்பற்றி யிருக்குமாகின் அப்புருஷன் அரசனுகிப்பெற்ற தாயாரைச் சேர்க்கையானதுசெய்யும் சண்டாள தேகனுமென்று உமையொரு பாகனுகிய பரமசிவன்சொன்ன உறுதியாகிய இப்பலனை யுரைசெய்குவாய் எ-று. 91

## ஆண்பால் ஆரூடலட்சணம்-91

முற்றிற்று.

---

ஆக பாடல்-310

சிவமயம்

உ ரோ ம ரி ஷி நா த ர்

அருளிச்செய்த

# சோதிட சிந்தாமணி விளக்கம்-210

## காப்பு

ஆதியந்தமாய் நிறைந்த சோதிபாதம்
ஆதிசிவனுமையு நிருவாணி பாதம்
சோதிமணியென் குருவாம் நந்திபாதஞ்
சுருதிகணேசன் றனொடு வல்லபைதன் பாதம்
நீதியொடு துதித்துலகில் நன்மைதுன்மை
நிலையுடனே பிசகாமல் நன்றாய்ச்சொல்வேன்
போதிக்க சோதிடசிந்தாமணி விளக்கமப்பா
புகலுவேன் உரோமரிஷி புகலுவனே. 1

புகலுவெனின் னூற் றிருநூறு பத்ததாகும்
புகழ்பெற்ற விந்தநூல் சோதிட விளக்கமையா
வகையுடனே யென்னைப்போல் ராமதேவர்
வசனித்த முந்நூற்றுப் பத்துந்தேடி
தொகையுடனே யிருநூலுஞ் சோதித்தேரு
தொல்லுலகி லுன்வாக்கியம் பொய்க்காதையா
நகையுறவிவ் விருநூலி லொன்றைப்பார்த்து
நவின்றிடிலோ வுன்சொல் பொய்யாகப்போமே. 2

## சுக்கிர புதசாரம்

பொய்போகப்புகருடைய சாரங்கேளு
புனிதத்தைமாதமுதங் கண்டதிங்கள்
மெய்யாய்முப்பதிற்பெருக்கித் திதியுங்கூட்டி
மேலாகக்கண்டதுகை ஏழிற்கூறி
ஐயாகேள்பெருக்குந்தொகை தொண்ணூற்றஞ்சில்
அதைக்கழித்துநின்றசேடந் திருவோணமுதலாய்
செய்யவன்றநட்சத்திரமெந்த நட்சத்திரமோ
சேர்ந்தந்தராசியில் சுக்கிரனிருப்பான்காணே.

இ-ள். பொய்யாத சுக்கிரனுடைய சாரத்தைக்கேளும். தைமாதம் முதலாகக்கண்ட திங்களில் 30-ல் பெருக்கித் திதியையுங் கூட்டிக்கண்ட துகையை [illegible]ல் பெருக்குந்தொகையை தொண்ணூற்றியஞ்சில்

அதைக் கழித்து நின்ற சேடத்தை திருவோண நட்சத்திர முதலாகப் பார்க்கில் அன்று எந்த நட்சத்திரமோ அதற்குரிய இராசியில் சுக்கிரன் இருப்பானென்று கண்டுணர்கவும் எ-று. 3

காணப்பாகிழக்கிருந்தால் இரண்டுநட்சத்திரந்தான்
கருதியேதள்ளிமிஞ்சிய நட்சத்திரமெதுவோ
தோணப்பாவதிலிருப்பான் ஒத்திருந்தால்
சுகமாயிரண்டுநட்சத்திரங் கூடக்கூட்டி
வீணென்றுயெண்ணாதே பார்த்தநட்சத்திரத்தில்
மிகுந்திருப்பான் அதிற்பளிங்குமேவிப்பாரு
வூணப்பாபுதனுக்கு மிப்படியேசாரம்
உகந்துவிட்டமுதலெண்ணி யிருக்கப்பாரே.

இ-ள். சுக்கிரன் கிழக்குபக்கமிருக்கில் இரண்டு நட்சத்திரமாகும். அதில் தள்ளிய நட்சத்திரமெதுவோ அதில் சுக்கிரனிருப்பான். ஒத்திருக்குமாகில் இரண்டு நட்சத்திரங் கூடக்கூட்டி பார்த்த நட்சத்திரத்தில் சுக்கிரனிருப்பான். புதனுக்கும் இப்படியே சாரம் அவிட்ட முதலாயெண்ணிப் பார்க்கவேண்டும் எ-று. 4

பாருலகில்யாதொரு சாதகருக்கருமையாக
பண்பானவுயிர்க்கு மூன்றுமிடத்துக்குடையோனும்
சீருலகிலவன்றிசை சாமான்னியமென்னும்
செப்பவன்பொசிப்பின் றிசையதிகசாரம்
ஏருலகிலெட்டுக்குடையோன் செனனகாலத்தி
லெக்காலிலிருந்தானோ அந்தராசியில்
வீருலகில்சனிவருங்கா லவன்பொசிப்பில்
விளங்குமந்தமாதத்தில் விளம்பக்கேளே.

இ-ள். பூமியின்மீது யாதாமொரு சாதகர்க்கும் பார்க்கவேண்டியது. இலக்கினத்திற்கு 3-ஆமிடத்திற்குடையோனும் அவன்றிசை சாமான்னியமென்னும் பொசிப்பில் திசை சாரமாகும். எட்டுக்குடையோன் சாதகன் செனனகாலத்தில் எந்தக்காலி லிருந்தானோ அந்த இராசியில் சனிவருங்காலம் அவன் பொசிப்பில் உதிக்கு மாதத்தில் சொல்லக்கேளு மென்றனர் எ-று. 5

விளம்புவன்ராசியல்லது லக்கினத்தோன்
விடாராகுயேழெட்டு மூன்றிரண்டில்நிற்க
கிளருமம்மாதத்திலவன் ராசிநட்சத்திரத்தில்
கெடியானசக்கரமாம் லெக்கணத்துக்குடையோன்
வளருநட்சத்திரம் வருகிலதிலந்தராசி
வாழ்வோன்பாதத்திலந்த மாதத்தில்
சளையாமலெந்ததேதி வருகிறதோவந்ததேதி
சாமான்னியமெனத் தெளிந்துபின்புசொல்லே

இ-ள். அதன் நின்ற இராசியோன் அல்லது இலக்கினத்தோன் இராகு இவர்கள் 7-8-3-2 இந்த ஸ்தானங்களில் நிற்க, அம்மாதத்தில் அவன் இராசி நட்சத்திரத்தில் இலக்கினத்திற்குடையோன் வரும் நட்சத்திரம் வருக. அந்த மாதத்திலும் எந்த தேதி வருகிறதோ அந்த தேதி சாமான்னியமெனத் தெளிந்துப் பின்பு பேசுவாயாகவும் எ-று.

சொல்லுயிர்க்குமூன்று மிடத்தினில்வாழ்வோனும்
துலங்கும்ராசிக்குடையோனு மொருராசிகூடில்
அல்லவவருடன்தவத் திருவர்களிரொருவ
ரனுசரிக்கிறல்லதவ் வீடதைப்பார்த்தாலும்
வல்லயிப்படியிருந்தா லோருயிர்க்குள்
வரும்பிறவியிரட்டைமைந்த ரெனவுங்கூறு
நல்லவாண்கிரகமென்று லாணேயாகும்
நங்கையெனுங்கிரகநின்றால் பெண்ணிரண்டெண்ணே.

இ-ள். இலக்கினத்திற்கு 3-ஆமிடத்தில் நின்றோனும், அந்த இராசிக்குடையோனும் ஒரு இராசியில் கூடிநிற்க, அல்லது அவருடன் இருவர்களிலொருவர் சேர்ந்து நிற்க, அல்லது அந்த இராசியைப் பார்க்கினும் இவ்விதமாக இருந்தால் ஒரு இராசியில் பிறப்பது இரட்டைப் பிள்ளையாகும். அதில் ஆண்கிரகமாகில் ஆண்பிள்ளையாகும்; பெண் கிரகமாகில் பெண் இரட்டையாகப் பிறக்கும் எ-று. 7

## தெத்துபுத்திர ஜாதகம்

என்னமெலக்கணத்தோனும் இராசியோனும்
இருவருமேபெண்ணினில் பெண்ணிரண்டாமப்பா
இன்னமும்லக்கணத்தோனும் நாலுக்குடையோனு
மிவருடனேசந்திரனு முயிரினில்வந்திடுக
மன்னவனேபிறந்திடினு மிரட்டைசேயாம்
மகிழ்ந்துயிந்தசோதிடத்தின் வகையைக்காணு
சொன்னகுறிபிசகாது தெத்துபுத்திர
சுதனுகுமாச்சரியஞ் சொல்லக்கேளே.

இ-ள். இலக்கினதிபதியும் அந்த இராசிக்குடையோனும் பெண் கிரகமாகில் பெண் இரண்டாகும். இலக்கினத்தோனும் நாலுக்குடையோனும் இலக்கினத்தில் வந்து நிற்கப் பிறக்குஞ்சேயானது இரட்டையாகும். மனமானது மகிழ்ந்து இந்தசோதிடத்தின் வகையைக் காண வேண்டில் இதிற்சொன்ன குறியானது யாதும்பிசகு இராது. தத்து புத்திரனுகும் ஆச்சரியத்தைச் சொல்வேன் கேட்பாயாகவும் எ-று. 8

கேளய்யாவுயிர்க்குமைந்தா மிடத்திலேதான்
கெட்டியுடனேபுதனு மங்கிருக்க
நீளய்யாவந்தவீட்டுக் குடையபுதன்பகையாய்
நின்றகிரகங்களுடன் கூடவவனுடனே

வாளய்யாசனியல்லது குளிகனுடன்கூடி
 மருவவல்லதவன்ருசி தனையேபார்த்திடினும்
நாளய்யாபிசகாது தெத்துபுத்திரனாவான்
 நான்சொன்னேன்சோதிடந்தான் முழுதுங்காணே.

இ-ள். இலக்கினத்திற்கு 5-ஆமிடத்தில் புதனிருக்கஅந்தவீட்டுக்குடைய புதன் பகையாக நின்ற கிரகங்களுடன்கூட அவருடன் சனி அல்லது குளிகனுடன் கூடிநிற்க, அல்லது அவனுடைய இராசியைப் பார்க்கினும் சாதகமானவன் இதிற்கூறியவாறு பிசகாமற்படிக்கு தத்து புத்திரனாகுவன். நான்கூறிய சோதிடத்தை முழுதுங்காண்பாய் எ-று.

முழுதுமைந்தாமிடத்தோனும் மொன்பதோனும்
 உகந்தவொருராசியிலிருக்கத் தந்தைவர்க்கம்
பழுதில்லைதெத்துபுத்தி ரனுமேயாவான்
 பகர்ந்தவந்தயிருகிரகத்துடனே நாலாம்
வழுவிலாவீட்டோனு மல்லதுசுக்கிரன்தான்
 வாழ்ந்திருந்தால்தாய்வர்க்கத் தல்லதுபெண்சாதி
செழுத்தவர்க்கத்திலாவது தெத்தாகப்போவான்
 தெளிந்துகொள்வாய் நேத்திரயோகமதனைக்கேளே.

இ-ள். இலக்கினத்திற்கு 5-ஆமிடத்தோனும் 9-ஆமிடத்தோனும் கூடி ஒரு இராசியில் நிற்கச் சாதகமானவன் தந்தையினுடைய வர்க்கத்தில் தத்துபுத்திரனாகுவன். மேற்கூறிய கிரகங்களிரண்டுடன் 4-ஆமிடத்தோனும் அல்லது சுக்கிரன் கூடிநிற்கில் தாய்வர்க்கம் அல்லது தன்னுடைய மனையாள் வர்க்கத்திலாவது தத்துப் புத்திரனாகப் புகுவன். தெளிவாக அறிந்துக்கொண்டு நேத்திரயோகபலன் கேட்பாயாகவும் எ-று. 10

## நேத்திரயோக பலன்

யோகமாம்லக்கணத்துக் குடையோனோடே
 யுண்மைரெண்டாமிடத்தோனு மிருக்கவவருடனே
சோகமாய்ப்பளிங்கோனுங் கூடிநிற்கில்
 சிவசிவாநேத்திரம்போம் அவர்களுடன்பின்னும்
வேகமாம்பானுநேசித்திருந்து விரும்பிடவே
 விளங்கபுவிவருமுன்னே குருடனெனப்பேராம்
வாகுடையசந்திரனிரவில் குருடாகும்
 வகைபுடனேபயித்தியநோய் வருகும்வாறுகேளாய்.

இ-ள். இலக்கினத்திற்குடையோனோடு 2-ஆமிடத்தோன் கூடி நிற்க அவருடன் சுக்கிரன் கூடி நிற்கினும் நேத்திரமானதுபோகும். அவர்களுடன் சூரியன் கூடிநிற்கில் சாதகன் பூமியில் உதையமாகுதற்கு முன்னும் குருடனாகும். சந்திரன் நிற்கில் இரவில் குருடனெனப் பெயராகும். பயித்தியநோய் வரும்வாறுகேளும் எ-று. 11

## பயித்தியம்

வாறுகேளுயிர்க்கைந்தா மிடத்திலல்லதுகேள்
மைந்தனேஏழினிலாவது நீபாராய்
போருகேளிரவியன் றிராகுங்கூடிப்
பொருந்திடவேசித்தப்பிரமை பைத்தியமாகும்
மாறுகேள்சேய்சனி அரவுகதிர்தான்
மகிழ்ந்தாறுபனிரெண்டு யெட்டில்மேவ
நேருகேளெப்போயிவன் றிசையில்பொசிப்பில்
நிலைக்கவல்லதவனோடே கூடியவர்பொசிப்பே.

இ-ள். இலக்கினத்திற்கு 5-ஆமிடத்திலாதல் அல்லது 7-ஆமிடத்தில் சூரியன் செவ்வாய் இராகு இவர்கள் கூடியிருக்கச் சாதகமானவனுக்குச் சித்தப்பிரமையும் பயித்தியமு முண்டாகும். செவ்வாய் சனி பாம்பு சூரியன் இவர்கள் 6-12-8-இந்த ஸ்தானங்களில் மேவிநிற்க அவர்களுடன் கூடியவர் பொசிப்பிலுமாகும் எ-று. 12

## அன்னகளை

பொசிப்பில்வருமன்னகளை யோகங்கேளாய்
புதனுமாறுமிடத்தோனு மூயிருக்குள்ளே
வசிப்பதல்லயிருவருமே ராசில்நிற்க
வவருடனேகருநாகங் கூடுமாகில்
பசிப்பதுதான்மிகவாகும் அன்னம்கிட்டா
பாவியவன்முன்செய்த தோஷத்தாலே
நிசப்பமிதன்னவன்னக்களை யோகநேரு
நிலையானபுதன்றிசையில் அவன்பொசிப்பே.

இ-ள். அன்னகளையின் யோகத்தைக் கேளாய். புதனும் 6-ஆமிடத்தோனும் இலக்கினத்திலிருக்க, அல்லது இந்த இரண்டுகிரகமும் ஒருராசியில் நிற்க, அவர்களுடன் இராகு கூடிநிற்கச் சாதகமானவனுக்குப்பசியானது அதிகமாகும். அன்னமானது கிடைக்காது. இன்னோன் முன்செய்த தோஷத்தாலும் அன்னக்களையின் யோகங்கள் நேருவது புதனுடைய திசையிலும் அவன்புத்தியிலு மென்றுணர்கவும் எ-று.

## நீரடைப்பு

அவனுடையபொசிப்பிலது உயிர்க்குதசாங்கிசத்தில்
அவனுடனேஒருராசியில் மூவர்கூடில்
தவமிகுந்தோர்க்கடியோனு மொருகிரகங்கூடில்
சாந்தமெய்ஞ்ஞானியெனத் தானேவாழ்வான்
பவமில்லாஉயிர்க்குபத்தா மிடத்தோன்மூன்றும்
பாங்குடையவீட்டோனு மதியெனுமோர்வீட்டில்

உவந்திடிலோ நீரடைப்பன்யீளைமேக
முயிர்க்குமூன்றுமிடத்தி னோங்குமவனுடனே.

இ-ள். மேற்கூறியவன் பொசிப்பில் உயிர்க்குத் தசாங்கிசத்தில் அவருடனே ஒரு இராசியில் மூன்றுகோட்கள் கூடிநிற்கச் சாதகமானவன் தவத்தில் மிகுந்த பெரியோர்களுக்கு அடிமையாக விருப்பன். ஒருகிரகங் கூடிநிற்கில் மெஞ்ஞானியென யாவரும் புகழவாழ்குவன். உயிர்க்கு 10-ஆமிடத்தோனும் 3-க்குடையோனும் பாபக்கிரகம் இவர்கள்கூடி ஒருராசியில் நிற்க நீரடைப்பானது காணும். ஈளைமேகவியாதியானது அணுகும். உயிர்க்கு 3-ஆமிடத்தோனுடனே கேளும் எ-று. 14

ஓங்குமாறுமிடத்தோனும் தனுசில்வாழ
உகந்துசெவ்வா யிவர்களுடன்கூடிநிற்க
ஓங்கியதுஅனலோன்பார்க்க நீரடைப்பன்காணும்
ஓகோஓகோயின்னமிதினது வுரையக்கேளாய்
யோங்குயிர்க்கு நாலாவதிடத்திற்சந்திர
னுகந்திருக்க வவனோடுமூவர்கூடி
யோங்கிடவேபிறந்தவுயிர் நாற்கால்சீவன்
உரைத்திடவே மோக்ஷசாதகத்தைக்கேளே.

இ-ள். மேற்கூறிய கிரகத்துடன் 6-ஆமிடத்தோன்கூடி தனுசுராசியில் நிற்க செவ்வாயும் இவர்களுடன் கூடிநிற்க, அவர்களை அனலோன் பார்க்கச் சாதகனுக்கு நீரடைப்புக்காணும். இன்னமுங் கேட்பாயாக: உயிர்க்கு 4-ஆமிடத்தில் சந்திரனிருக்க அவனுடன் மூன்றுகோட்கள் கூடிநிற்கப் பிறந்த சீவனனது நாற்காலுள்ளதாகும். உரைக்கும்படியான மோட்ச சாதகத்தைக் கேளும் எ-று. 15

## மோட்ச சாதகம்

மோட்சமுயிர்க்கைந்தினிலே யல்லதொன்பதிலே
புண்மையாய்நாற்கிரகங் கூடமோக்ஷம்
காக்ஷியுடன்நாலி லேழிற்பத்தில்
காணசுபக்கிரகம்நின்றால் மோட்சமெய்தும்
தாட்சியிலாஉயிர்க்குமூன்று மிடத்தோனொன்பதினில்
தானிருக்க ஒன்பதுக்குடையோநட்பு
ஆட்சியிலேயிருக்க வவனுடனேசுக்கிரன்
அல்லதுகுருவாகிலுங் கூடியிருக்கப்பாரே.

இ-ள். இலக்கினத்திற்கு 5-ஆமிடத்திலேனும், அல்லது 9-ஆமிடத்திலேனும், நாலுகிரகங்கள் கூடிநிற்கில் மோட்சமாகும். 4-7-10-ல் சுபக்கிரகங்கள் நிற்க மோட்சமானது எய்தும். உயிர்க்கு 3-ஆமிடத்தோன் 9-ஆமிடத்தி லிருக்க 9-க்குடையோன் நட்பு ஆட்சியிலிருக்க அவருடன் சுக்கிரன் அல்லது குருவாகினுங் கூடியிருக்கப்பாரும். 16

பாரப்பாஅல்லதுபார்க்கப் பிறந்தோனையா
பகருஞ்சிவதலங்களிலே தியானமடாதிபதியாய்
கூரப்பாஇருப்பனுயிர்க் குடையோன்புதனுக்க்
குறையாமல்புதனுந்தன் வீட்டினிலேயிருக்க
ஆரப்பாபிறந்தவனுக்கு யென்னேரந்தீரா
ஆசனத்தில்ரோகம்வரு மறிந்துகாணு
நேரப்பாவுயிர்க்குடையோன் சந்திரனுங்கூடி
நிலைத்துஒருராசியிலே யிருக்கவவனுடனே.

இ-ள். மேற்கூறியவாறு இருக்கப் பிறந்த சாதகன் சிவஸ்தலங்களில் மடாதிபதியா யிருந்து வாழ்குவன். உயிர்க்குடையோன் புதனுகியும், தன்னுடைய வீட்டில் பலன் குறையாதிருக்க, சாதகனுக்கு என்னேரமுந் தீராத ஆசனரோகம் பாதிக்கும். உயிர்க்குடையோனுஞ் சந்திரனுங்கூடி ஒரு இராசியிலிருக்க அவர்களுடன் கேளும் எ-று. 17

அவருடனேராகுகே திருவர்கள்கூடி
லசடானவெண்குட்ட மணுகுமிவர்தாமும்
பவமுறவேசெவ்வாயிலிருக்க பெருரோகம்
பரவுமடாவுயிர்க்குரெண்டா மிடத்துக்குடையவனும்
தவருடனேயாறுமிடத் தோனுங்கூடி
தானிருக்கமேடமல்லது தான்றேறில்
சுவரிடவேசாதகனும் மடிக்கடிமைந்த
சொற்சோர்வு படுவனுயிரிற்சந்திரனே.

இ-ள். மேற்கூறிய கோட்டுகளுடன் இராகுவேனும் கேதுவேனுங் கூடிநிற்க, சாதகனுக்கு வெண்குஷ்டரோகமானது சம்பவிக்கும். இக்கிரகம் பாபிகளாகவிருக்க செவ்வாயுமிருக்க பெருரோக முண்டாகும். உயிர்க்கு 2-ஆமிடத்திற்குடையோனும் அவருடன் 6-லிருக்க சாதகன் அடிக்கடி சொற்சோர்வுபடுவன். உயிர்தன்னில் சந்திரனிருக்கக்கேளும் எ-று. 18

### மரணயோகம்

சந்திரனில்மூன்றுமிடத் தோனும்வாழிற்
றும்முலைப்பாலில்லாமல் அன்னியமுலையருந்தும்
இந்துலகில்மரணயோகத் தைக்கேளாய்
யியல்பந்தராசிக்குடையோனு மன்னவனு
சந்ததமாருயிர்க்குமூன்றுமிடத் தோனும்வாழ்கத்
தன்னுடனேராகுவரி லண்டரோகம்
பிந்தியுமூன்றுமிடத்தன் குருவுமுயிர்தன்னில்
பிசகாமலிருக்கவவர்திசையினில் நற்பொசிப்பில்.

இ-ள். மேற்கண்டபடி உயிரில் சந்திரனிருக்க சந்திரலக்கினத்தில் 3-ஆமிடத்தோனிருக்கச் சாதகனுக்குத் தாயாருடைய முலைப்பாலில்லா

மல் அன்னியமூலைப்பா லருந்துவன். இப்பூமியின்கண் வாய்க்கும் மரணயோகத்தைக் கேட்பாயாக. இயல்பாகிய அந்த இராசிக்குடையோனும் மன்னவெனும் உயிர்க்கு 3-ஆமிடத்தோனுமாகவிருக்க அவருடன் இராகு கூடில் அண்டரோகமுண்டாம். 3-ஆமிடத்தோனும் குருவும் உயிர்த்தானத்தி லிருக்க அவருடைய திசைப்பொசிப்பில் கேளும் எ-று. 19

பொசிப்பதனில்நாற்கால் மிருகத்தினாலே
போமுயிருஞ்சாதகர்க்கு விவர்களோடையா
உசிப்பினிலேசெவ்வாய்தான் கூடில்வலிரோகம்
உண்டாகுமுயிர்க்கு மூன்றாமிடத்துக்குடையவனும்
வசப்பினிலேராசிக்கு மூன்றதனுக்குடையோனும்
வாகாகசனியும்மூவர்களும் முடன்கூடில்
அசப்பினிலேயோர் ராசியிலிருக்கவவருடனே
அங்காரகனுங்கூடி யிருக்கப்போரினிலே.

இ-ள். மேற்கண்ட பொசிப்பில் சாதகனுக்கு நாற்கால் மிருகத்தினாலே உயிரானதுபோகும். இந்தக் கிரகங்களோடு செவ்வாய் கூடி நிற்க வலிரோகங்காணும். உயிர்க்கு 3-ஆமிடத்திற்குடையவனும் அந்த ராசிக்குடையோனும் சனியும் இவர்கள் மூவருங்கூடி இராசியி லிருக்க அவர்களுடன் அங்காரகன் கூடியிருக்கப் போரினில் கேளும் எ-று. 20

போரினிலேசண்டையினால் மரணம்வருமெய்யாம்
புகலுவேனுயிரோனோ டாறுக்குடையோனும்
வாரினிலே ராகுகேதுக்கள்கூடில்
மங்கைமருந்திட்டாலே மரணமாவன்
காரியோன்கூடில்கள்ளர் தன்னாலேமரணம்
காட்டுறேநின்னமுந்தான் மரணக்குறிப்பதனை
கூறினில்ராசியாலும் நாலுக்குடையவனுங்
கூடியெட்டாமிடத்திருக்க வவருடனேபாவர்.

இ-ள். மேற்கூறியபடி போரில் சண்டையினால் மரணமடைகுவன். உயிர்க்குடையோனோடு 6-ஆமிடத்திற்குடையவன், 6-ஆமிடத்தில் இருக்க, அவருடன் இராகு கேதுக்கள் கூடிநிற்க, ஸ்திரீகளின் மருந்தினால் மரணமடைகுவன். சனி சேர்ந்துநிற்கில் கள்ளர்கள் கையினால் மரணமடைகுவன். இன்னமும் விபரமாகச்சொல்லுகின்றேன், மரணக்குறியதனைக்கேளும். இராசிக்குடையோனும் 4-க்குடையவனுங்கூடி 8-ஆமிடத்திலிருக்க அவருடன் பார்க்கக்கேளும் எ-று.

## பாலாரிட்டம்

பாவர்கள்சேர்ந்திடி லாறும்வயதில்சீர்ணத்தால்
பறந்தோடுமவனுயிரும் பாதவிக்கமைந்தா

ஆறியாம்லெக்கனத்தி ராசிலேயும்
அரியவெட்டாமிடத்தேயும் பாவர்வாழ
சாவியாயிருந்தவர்கள் பலயீனராகில்
தப்பாதுமூன்றுந்திங்கள் மரணம்வந்தெய்தும்
தாவியதோர்பாவர்களைக் கணத்திலீணை
தாமதிலேபாவருர அஸ்வராமிடமே.

இ-ள். மேற்கண்டபடிக்கு பாபர்கள் சேர்ந்துநிற்க, பிறந்தசேட ஆறுவதுவயதில் சீரணத்தால் மரணமாகுவன். இலக்கினத்திலும் 8-ஆமிடத்திலேயும் பாபர்கள் சேர்ந்துநிற்கப் பெலவீனராகவிருக்க, மூன்றுவது மாதத்தில் மரணமடைகுவன். பாபக்கிரகங்கள் இலக்கினத்திலிருக்க அதில் பாபர்கள்கூட 6-ஆமிடத்திற்கேளும் எ-று. 22

ஆறுமிடமெட்டாமிட பாவரேறி
யனுசரிக்கபகையவருஞ் சேர்ந்துவாழ
தீராதுபத்தாளுள் மறலியூர்புகுவர்
செப்புகிறேன்பாலா அரிட்டம்பணிந்துபாரு
சீராகுமுயிர்க்கு மூன்றுமிடத்தினிலேவையா
தினகரனும்வேந்தனுஞ் செவ்வாயுஞ்சேரில்
மாராததீர்க்க மிகுந்திருடனுவான்
மகத்தானபுதன்சேரிற் குட்டையனுகுவனே.

இ-ள். மேற்கண்ட 6-ஆமிடத்தினும் 8-ஆமிடத்தினும் பாபக்கிரகங்கள் ஏறிநிற்க, அவருடன் பகைவர்கள் சேர்ந்துவாழப் பிறந்தசேய் பத்தாம்நாள் மரணமடைகுவன். சொல்லுகின்றேன். பாலாரிட்டம் பணிந்துகேட்பாயாகவும். உயிர்க்கு 3-ஆமிடத்தில் சூரியன் வேந்தன் செவ்வாய் இவர்கள் மூவருஞ் சேர்ந்து நிற்கச் சாதகன் தீர்க்கமுள்ள திருடனுகுவன், புதன் சேர்ந்துநிற்கில் குட்டையனுவன் எ-று.

ஆவானேசெவ்வாய் ராகுரெண்டுபேரும்
அப்பனேராசியிலிருக்கத் தொப்புள்பருத்திடும்
போவானேன்புதன்சனியும் ராசியிலேயிருக்க
பெருகவேசடலமெங்கும் ரோமம்பெருத்திருக்கும்
மேவானலக்கினத்தில் ரவியுமாறுமிடத்தன்
மேலானராசியனுஞ்சேரிற் பூனைக்கண்ணன்
தாவாமலுயிர்க்கு மூன்றுமிடத்துக்குடையவனும்
தப்பாமல்ரவியுஞ்செவ்வாய் சேர்ந்திடினிற்கேளே.

இ-ள். செவ்வாய் இராகு இவர்களிரண்டுபேரும் இராசியிலிருக்கச் சாதகனுக்குத் தொப்புளானது பெருத்திருக்கும். புதனும் சனியும் இராசியிலிருக்க பெருகும்படியாக சடலமெங்கும் ரோமமானது பெருத்திருக்கும். இலக்கினத்தில் சூரியனிருக்க 6-ஆமிடத்தில் இராசியாதிபதியுஞ் சேர்ந்து நிற்கப் பூனைக்கண்ணனுகும். உயிர்க்கு மூன்று

மிடத்திற்குடையவனும் சூரியனும் செவ்வாயுஞ் சேர்ந்து நிற்கக் கேளும் எ-று. 24

கேளப்பாதலைமயி ரில்லாப்பிறப்பன்
கிளர்தாதுப்போக மதிகதிககாமியனும்
வாளப்பாஊஷ்ண போசனமேசெய்வான்
வளருயிர்க்கு பத்தாவதிடத்தில்நானும்
நீளப்பாராகுவுஞ் சூரியனும்நிற்கில்
நிலைகங்கையாத்திரைப் போவான்பாரு
ஆளப்பாவலது கெங்காசலத்தா
லபிஷேகமிருந்தவிடங் கிடைக்கும்பாரே.

இ-ள். மேற்கண்டபடி கிரகங்கள் நிற்கச் சாதகமான குழவிக்குத் தலையில் மயிரில்லாமல் பிறக்கும். இன்னோனுக்கு தாதுபுஷ்டியுண்டாம் போகத்தில் அதிக காமியனுகை யிருப்பான். ஊஷ்ணபோசனஞ் செய்கு வன். உயிர்க்கு 10-ஆமிடத்தில் இராகுவும் சூரியனுங்கூடி நிற்கில் கெங்காஸ்நானஞ்செய்ய யாத்திரை போகுவன். அல்லது கெங்காசலத் தால் அபிஷேகஞ்செய்ய மிருந்தவிடங் கிடைக்கும் பாருமென்றனர் எ-று. 25

பாரப்பாவுயிர்க்குபத்தில் மீனமாகிப்
பாங்காகப்புதனிருந்தால் கெங்கையுண்டு
ஆரப்பாவுயிரில்ராகுவிருந்து வுயிரோனும்
அதிலிருக்கமுக்கிக்கொண் டிருப்பான்மிக்க
சீரப்பாவுயிர்க்குமெட்டா மிடத்துக்குடையோனும்
திரமாகராகுவும் லெக்கணமேயேற
கூரப்பாகொடியைச் சுத்திப்பிறப்பனவனென்று
குணமதுப்புதனிட லெக்கணத்திலீண.

இ-ள். உயிர்க்குப் பத்தாமிடம் மீனவிராசியாக அதில் புதனிருக்க கெங்காஸ்நானமுண்டாம். உயிரில் இராகுவிருக்க உயிருக்குடையோ னும் அதிலிருக்க முக்கிக்கொண்டிருப்பான். 8-ஆமிடத்திற்குடையோ னும் இராகுவும் இலக்கணமேறிநிற்க கொடியானது சுற்றிக்கொண்டு பிறக்கும். அல்லது புதனுடைய லக்கினத்தில் செனனமாகக் கேளும் எ-று. 26

ஈணவர்தபுதனுறு மிடத்திருக்க
இல்லாவிடிலாறுமிடத் தோனோடொக்க
நாணவேபுருட னலியாய்ப்பிறப்பன்
நங்கைபிறந்திடினில் முகமீசையுண்டு
ஆணப்பாலக்கணத்தாறுவது ராசியிலே
யாவதுபாவர்களிருந்தால் ஸ்திரீகளினுற்ரேஷம்
ஊணப்பாவுயிர்க்கேழு பத்தினிலேதான்
உகந்துசந்திரன் சூரியனுவதுயிருந்தால்.

இ-ள். இலக்கினத்திற்கு 6-மிடத்தில் புதனிருக்க, அல்லது 6-ஆமிடத்தோனோடு சார்ந்துநிற்கச் சாதகன் அலியாகவிருப்பன். பெண்பிறந்திடில் முகத்தில் மீசையானது உண்டு. இலக்கினத்துக்கு 6-வது இராசியில் பாபக்கிரகங்களிருக்க ஸ்திரீகளினால் தோஷம் நேரும். உயிர்க்கு 7-ல் சந்திரனாவது சூரியனாவது யிருக்கக் கேளும்.

இருந்திடினில்ஸ்திரீகள் வலுவினிலேசேர்வார்
யில்லையென்றதில்பளிங்க னிருக்கவழகியதோர்
திரந்தருகும்போக மாதர்களேசேர்வார்
செப்புறேன்சனிசெவ்வாய் ராசிக்குடையோராம்
தெரிந்திடவேஉயிர்க்கு நாலிலல்லதுராசியினில்
செப்புமவரிருக்க ராத்திரியின்காலம்
பரந்திடவேயேவலினாற் கல்லெரிதான்விழுகும்
பகருமுயிர்க்கே மூன்றுமிடத்துக்குடையவனே.

இ-ள். மேற்கண்டபடி யிருக்கில் சாதகனை ஸ்திரீகள் வலிய வந்து சேர்வார்கள். அதில் சுக்கிரனிருக்க அழகுடைய போகமாதர்கள் வந்து சேர்குவர். சனி செவ்வாய் இவர்கள் நின்ற இராசிக்குடையோனும் இவர்கள் உயிர்க்கு 4-ஆமிடத்தில் அல்லது இராசியினிலிருக்க சாதகனுக்கு இராத்திரிகாலத்தில் ஏவலினாற் கல்லானது வந்துவிழுகும். உயிர்க்கு 3-ஆமிடத்திற்குடையவனே கேளும் எ-று. 28

உடையவனேபாவியவன் கூடிலல்லது
மூன்றுமிடத்தினிலே பாவரேற
அடையுமுயிர்காறு ராசிக்குமேலே
அப்பனேமூன்றுராசி யெண்ணிக்கொண்டு
திடமாமோர்ராசியனும் நீசனாகில்
சேதமாய்பூமியில்விந்து சிந்திப்போகும்
தடையிலாயுயிர்க்கேழில் செவ்வாய்சுக்கிரன்
றனிருக்கக்கைம்பெண்கள் நேசிப்பானே.

இ-ள். மேற்சொன்ன கிரகம் பாபியுடன் சேர்ந்திடில் அல்லது 3-ஆமிடத்தில் பாபக்கிரகங்களேற உயிர்க்கு 6-ம் இராசிக்குமேல் மூன்று இராசி எண்ணிக்கொண்டு அதில் ஒரு இராசியோன் நீசமாகில் சாதகனுடைய விந்தானது சேதமாய் பூமியில் சிந்திப்போகும். உயிர்க்கு 7-ஆமிடத்தில் செவ்வாய் சுக்கிரனிருக்க கைம்பெண்ணை இச்சித்துச் சேர்குவானென்பர் எ-று. 29

நேசிப்பர்ஏழானோ டோராகுசேரில்
நிலைந்தவிடந்தனுசு மீனமாயிருந்தால்
ஆசிப்பான்பலஸ்திரீக ளுடனேநேசம்
மனுகும்ராசியனோ டேரவியுங்கூடில்
போஷிப்பான்ராஜ ஸ்திரீகளுடனேநேசம்
புனிதவுயிர்நாலோனும் மொன்பதோனும்

வீசிப்பாய்பகைவருடன் கூடியொருராசில்
விளங்கச்சாதகனும் பரவிந்துகாணே.

இ-ள். நேசிப்பான் 7-ஆமிடத்தானோடு இராகு சேர்ந்துநிற்க, அந்த இராசி தனுசு மீனமாகவிருக்கச் சாதகன் பலஸ்திரீகளினிடத்தும் நேசிப்பான். இந்த இராசியாதிபதியுடன் சூரியன் சேர்ந்திடில் இராஜஸ்திரீகளுடன் நேசங்கொள்வன். உயிர் தானாதிபதியும் 4-க்குடையோனும் 9-ஆமிடத்தோனும் பாபர்களுடன் சேர்ந்து ஒரு இராசியிலிருக்கப் பிறந்தசாதகன் பரவிந்தமாகுமென்பர் எ-று. 30

காணவேவுயிர்காரினுடைய சந்திரனுங்
கருதுஞ்செவ்வாய்கூடிநாலி லிருந்திடில்மைந்தா
நாணவேயவன்தாய்க்குந் தோஷமுண்டுண்டு
லக்கணத்துக்கொன்பதோன் ஆறுக்குடையோனும்
ஊணவேபாவருடன் கூடியொருராசியிலும்
உள்ளவன்பெண்சாதிக்குந் தோஷமுண்டு
தோணவேயவருடனே காரிகூடில்
சூத்திரனாற்றோஷமென்று சொல்லலாமே.

இ-ள். உயிர்க்கு 6-ல் நின்ற சந்திரனும் செவ்வாயுஞ் சேர்ந்து 4-ஆமிடத்திலிருக்கச் சாதகனுடைய தாய்க்குத் தோஷமுண்டாம். இலக்கினத்து 9-ஆமிடத்தோனும் 6-க்குடையோனும் பாபர்களுடன் சேர்ந்து ஒரு இராசியிலிருக்கச் சாதகனுடைய மனையாளுக்குத் தோஷம் நேருமென்று சொல்லவும் எ-று. 31

சொல்லவுயிர்க்குடையவனு நாலுக்குடையவனுந்
தொல்லாறிலெட்டிற் பனிரெண்டிலிருந்தந்த
தொல்லைவீடது பகைவீடாயிருந்தால்
சொற்பனத்திலுஞ் சுகமேயில்லையில்லை
வல்லவுயிரோனு மேழாமிடத்திருக்க
வகையேழாமிடத்தோனு முயிரேநிற்க
அல்லதுவோராசியினில் யிருந்துகூட
அச்சாதகனைச்சேரும்பெண் மரணமாமே.

இ-ள். உயிர்க்குடையோனும் 4-க்குடையவனும் 6-8-12-லிருக்க அந்தவீடு அவர்களுக்குப் பகைவீடாகவிருக்கில் சாதகனுக்குச் சொர்ப்பனத்திலும் யாதொரு சுகமுமில்லையாம். உயிர்க்குடையோன் 7-ஆமிடத்தோன் உயிரில் நிற்க அல்லது ஒருராசியிலிருந்துகூட அச்சாதகனைச் சேரும்பெண் மரணமாகுவளென்பர் எ-று. 32

## பூர்வயோகம்

மரணமாம்பூர்வயோகஞ் சொல்லக்கேளு
மகத்தானவுயிர்க்குப்பத்தா மிடத்திற்குடையவனும்

அரணமாம்புதனரசன் மூன்றுபேரும்
அப்பனேயிரண்டாவ திடத்திருக்க
கிரணமாம்யாகசாலைசெய்து புகழ்பெறுவன்
கீர்த்தியொடுபாக்கியவானாக வாழ்வன்
இரணமிலாவுயிர்க்கு நவத்தான்பதிதோ
னிருவோரும்பகைவீட்டி லிருந்துபலமற்றால்.

இ-ள். பூர்வயோகங்களைச் சொல்லக்கேளும். உயிர்க்குப் பத்தாமிடத்திற்குடையவனும் புதன் குரு இவர்கள் மூன்றுபேரும் 2-ஆமிடத்திலிருக்கச் சாதகமானவன் யாகங்கள் செய்து புகழானது பெருகுவன். கீர்த்தியோடு பாக்கியங்கள்பெற்று வாழ்குவன். உயிர்க்கு 9-ஆமிடத்தோனும் பத்துக்குடையவனும் இவர்களிரண்டு பேரும் பகைவீட்டிலிருந்து பலமானது அற்றுயிருப்பாராகில் கேளும் எ-று.

பலயீனராகில் ஸ்ரீமந்தபுத்திரனல்ல
பகருயிர்க்குப்பதினொன்றோன்பாவர் வீட்டிலிருக்க
சலமாகநான்குடையோன் திங்களிலேமைந்தன்
றரியாமற்போயிடுங்கா னுயிர்க்கேழோனும்
நலமிலாநீச்ச னுயிரவிவீட்டில்
நாடவல்லதவ னங்கிஷத்தில்நிற்க
மலமாகக்கழரோகம் வருகுமப்பா
மற்றவனுச்சாங்கிஷத்தி லிருந்தாற்கண்ணில்.

இ-ள். மேற்கூறியவாறு பெலவீனராகில் பிறந்தசாதகன் சீமந்தப் புத்திரனல்லவென்பர். உயிர்க்கு 11-ஆமிடத்தோன் பாபர்கள் வீட்டிலிருக்க சலவிராசியில் 4-க்குடையோனிருக்க பிறந்தசேய் ஒரு மாதத்தில் மரணமாகும். உயிர்க்கு 7-ஆமிடத்தோனும் நீச்சனுகிச் சூரியனுடைய வீட்டிலிருக்க அல்லது அவனுடைய அங்கிசத்திலிருக்க கழரோகமணுகும். உச்சாங்கிசத்திலிருக்க கண்ணில் கேளும் எ-று.

கண்ணிலேபித்தகாசம் வருகுமையா
கருதுவபகைவீட்டி லல்லதுபகைராசி
என்னுமங்கிசத்திலேயாவது மேயிருந்தால்
யிடராகுங்குட்டங் குமரகண்டம்வாய்க்கும்
எண்ணவனேடே ராசியோனுமுயிரோனும்
அனுசரிக்கிற்குன்மமொடு வன்னத்வேஷமாகும்
எண்ணவனேடாறு மிடத்தோனுங்கூடில்
மனுஷரைக்கொல்லும் பில்லிசூனியங்கற்பானே.

இ-ள். மேற்கூறியவண்ணம் கண்களில் பித்தகாசம் உண்டாகும். பகைவீட்டில் அல்லது பகைராசி யென்னும் அங்கிசத்திலிருக்க குட்டமும் குமரகண்ட வலியும் வாய்க்கும். அவர்களோடு இராசியோனு முயிரோனும் அனுசரித்து நிற்கில் குன்மவியாதியோடு அன்

னத்துவேஷமாகும். ஆறுமிடத்தோன் கூடில் மனுஷர்களைக் கொல்லும் பில்லி சூனியங் கற்பான் எ-று. 35

கற்பானையவனோடே எட்டோனுங்கூட
காணிராசிக்குடையோனுங் குஜனுங்கூடில்
மற்பானைன்கைம்பெண்ணுப் பிள்ளையாவான்
மகத்தானவுயிர்க்குப்பதி னென்றில்செவ்வாய்
அப்பாகேளஞ்சி லொன்பதிலேசூரியன்
அவனிருக்கஆடுமாடு எருமைக்கூட்டம்
ஒப்பொருவரில்லாமற் றிரண்டிருக்கும்
உகந்தவர்களுடன்ராகு வல்லது நான்குளிகன்.

இ-ள். கற்பான் அவருடன் 8-ஆமிடத்தோன் கூடினும் அந்த இராசிக்குடையோனும் செவ்வாயுங்கூடில் கைம்பெண்ணின் பிள்ளையாகுவன். உயிர்க்கு 11-ஆமிடத்தில் செவ்வாயிருக்க 5-9-ல் சூரியனிருக்க சாதகனுக்கு ஆடு மாடு எருமைக்கூட்டம் இவைகள் ஒருவருக்கும் நிகரில்லாமல் திரண்டிருக்கும். அவர்களுடன் இராகு அல்லது குளிகன் கேளும் எ-று. 36

குளிகனிருவரிலொருவன் கூடிதானிருக்க
குக்கலொடுபன்றிபல மிருகங்களோடு
விளிகபலபட்சியொடு நானுதான்னியம்
விதமுடனேயிருப்பனின்னம் விளம்பக்கேளு
களிக்கவேரெண்டுநாலில் பத்தில்பனிரெண்டில்
கருதுமிந்தராசியி லெத்தனைபேரத்தனைபேர்
பளிகமுடன்பிள்ளை பிறந்திடும்போதவ்வீட்டில்
பாலகனேயிருந்த ரெனப்பண்பாய்ச்சொல்லே.

இ-ள். மேற்கண்ட குளிகனிலிருவரில் ஒருவர் கூடியிருக்கச் சாதகமானவனுக்கு குக்கலும் பன்றியும் பல்விதமான மிருகங்களும் பட்சிகளும் நானுவிததான்னியமும் உடையவனுக விருப்பன். இன்னமுஞ் சொல்லக்கேளும்: 2-4-10-12 இந்த இராசியில் எத்தனை கிரகமிருந்ததோ அத்தனை பிள்ளை பிறக்கும்போது அந்தவீட்டில் பாலகனிருந்தரெனச் சொல்லவும் எ-று. 37

சொல்லுவதுசனியிருந்தா லன்னியஸ்திரீயொருத்தி
சுக்கிரனுஞ்சந்திரனெனில் சுபமங்கிலியொன்று
வெல்லுவதுசெவ்வாயனிற் கைம்பெண்சாதி
வீற்றிருந்தோர் வளமெனவேவிளம்புவாயே
மல்லுவதுலக்னராசி முப்பதாகப்பிரித்து
வகைதற்காலத்து வருபாகத்துடையோனும்
நல்லவதுசுபக்கிரக மானுலவ்வீட்டை
நாடுமெட்டுதிக்கினிலோர் திக்கிலையாம்.

இ-ள். சொல்லுவது யாதெனில் சனியிருப்பானாகில் அன்னிய ஸ்திரீ யொருத்தியாகும். சுக்கிரனுஞ் சந்திரனுமாகில் சுமங்கலி யாகும். செவ்வாயிருக்கில் கைம்பெண்சாதியெனச் சொல்கவும். இலக்கின இராசியை முப்பதாகப் பிரித்து தற்காலத்துக்கு வரும் பாகத்துக்குடையோனும் சுபக்கிரகமாகில் அந்த வீட்டை நாடும் எட்டுதிக்கில் ஓர் திக்கில்லையாமென்பர் எ-று. 38

அய்யகேள்பூர்வதனமுண்டு நகைக்காதே
  யத்தனமிருக்குந்திசை யடையாளங்கேள்
துய்யவந்தகிரகஞ்சூரியனாகி லதுகிழக்குச்
  சுக்கிரனெனில்தீமூலை செய்வாயானால்
மெய்யாய்கேள்தெற்கினிலே ராகுவானால்
  மேல்நிருதிசனியானா மேற்கதாகும்
பொய்யாதுதிங்களெனில் வாய்வுதிக்கும்
  புதனானல்வடதிக்கு ராசாவானால்.

இ-ள். கேட்பாயாக. பூர்வதனமானது உண்டாம். நகைக்காமற் கேளும். தனமிருக்கும் திசையின் அடையாளம் சொல்குவேன். அந்த கிரகம் சூரியனாகில் கிழக்குதிசையாகும். சுக்கிரனாகில் அக்கினிமூலை யாகும். செவ்வாயாகில் தென்திசையாகும். இராகுவாகில் நிருதிமூலை யாகும். சனியாகில் மேற்காகும். சந்திரனாகில் வாய்வுமூலையாகும். புதனாகில் வடக்குதிசையாகும். இராஜாவானால் கேளும் எ-று. 39

ராசனென்றாலீசான்னியம் பூர்வதனமுண்டு
  நாடுமிந்தகிரகமென்றால் அந்தயிடஞ்சமீபம்
ஏசும்பில்லிசூனியம்வைத் திருந்தயிடமாகும்
  யீனனாய்க்கிரகமஸ்த மனமாகினாலும்
வீசும்பகைவர்களோடே கூடியிருந்தாலும்
  விளங்காமல்பூமியய்யன் தூர்க்கிபிடாரி
வாசஞ்சீரணமாய்ப்போ யிருந்தநிலமாகும்
  வகையானசுபக்கிரக மானாற்கேளே.

இ-ள். மேற்கண்ட இராஜனாகி விருக்கில் ஈசானியம் பூர்வதன மானது உண்டென்பர். நாடிய இந்தக் கிரகங்களாகில் அந்தயிடஞ் சமீபமாகும். பில்லி சூனியம் வைத்தயிடமாகும். ஈனனாய் கிரகம் அஸ்தமனமாகினும் பகைவர்களுடன் கூடியிருக்கினும் அந்தப் பூமி விளங்காமல்படிக்கு ஐயன் தூர்க்கி பிடாரி வாசமாகும்படி சீரணமாகப் போயிருந்த நிலமாகும். சுபக்கிரகங்களானால் கேளும் எ-று. 40

கேளடாசுபக்கிரக மானால்நல்ல
  கேள்வியுள்ளதேவதா பூமியாகும்
நாளடாயிப்படியே பார்த்துச்சொல்லு
  லக்கணநாலாமிடத்தி லொருவரில்லாவிட்டால்

பாளடாவக்கிரகத்துக்குச் சமீபமென்னும்
 பகர்ந்தநாலுக்குமுன்னே பாவர்களிருந்தாக்கால்
நீளடாமேற்குதிசை பாழென்றுசொல்லு
 நிலையுயிர்க்குமூன்றுவதிடத்தில் பாவர்களே.

இ-ள். கேட்பாயாக. சுபக்கிரகமாகில் நல்ல கேள்வியுள்ள தேவதா பூமியாகும். நாளும் இவ்விதமாகப் பார்த்துச் சொல்லவேண்டும். இலக்கினத்திற்கு 4-ஆமிடத்தில் ஒருகிரகமும் இல்லாவிடில் அக்கிர கத்திற்கு சமீபமென்னவும். 4-ஆமிடத்திற்கு முன்னும் பாபர்க ளிருக்க மேற்குதிசை பாழென்று சொல்லவும். உயிர்க்கு மூன்றுவ திடத்தில் பாபர்களே இருக்கக் கேளும் எ-று. 41

பாவர்களிருக்கினிலே கிழக்குப்பாழு
 பார்நீயேயுயிர்க்குடையோன் பாவரோடே
தாவிடவேராசியல்ல தெட்டில்நிற்க
 சாதகனுக்குடம்பெல்லாம்சிரங்கு ரணமதாகும்
மேவிஇந்தப்படிசொன்னேன் யென்நூலுக்கு
 மிகுந்தராமர்நூலல்ல மற்றதிந்தப்
பூவினிலேஇந்நூலுக் கெதிர்நூலுண்டோ
 பொய்யென்றால்சுட்டுவிடு இந்நூல்தானே.

இ-ள். மேற்கூறியபடி பாபர்களிருக்க கிழக்குபக்கம் பாழாமென் பர். உயிர்க்குடையோன் பாபர்களுடன்கூடி ஒரு ராசியிலிருக்க அல் லது 8-ஆமிடத்திலிருக்க சாதகனுக்கு தேகமாதியந்தமும் சிரங்கும் இரணமுமாகத் தோன்றும். இந்தப்படியாகச் சொன்னேன் என்நூலு க்கு மிகுந்த ராமர் நூலல்லால் மற்றது இந்தப்பூமியினில் இந்நூலுக்கு எதிர்நூலுண்டோ? இது பொய்யென்றால் சுட்டுப்போடும் எ-று. 42

இந்நூல்தானிருநூற்றுப்பத் தெவர்கொடுக்கப்போறார்
 இகத்திலுள்ளகலியுக மானவர்களோயீவார்
பின்னூல்சூஸ்திர மன்பதுவும்பாரு
 பேய்மக்கள்சொன்னபடி பலிதசித்தி
தன்னூல்போலில்லாத தோஷத்தாலே
 தாரணியோர்சொல்சோதிடமே பொய்யாய்ப்போச்சு
ஐன்னூரில்நான்சொன்னேனென் றெளித்தார்சித்தர்
 ஆனபோதிலுமென்னூ லாராய்ந்துபாரே.

இ-ள். இந்நூலாகிய இருநூறை யாவர்கள் கொடுக்கப்போறார் கள். இகத்தின்கண்ணுள்ள கலியுகமாந்தர்களோ யீவார். இதற்குப் பின்னால் சூத்திரமாகிய ஐம்பதும் பாரும்; சொன்னபடி பலிதசித்தி யாகும். தன்னுடைய நூலைப்போல் இல்லாத தோஷத்தினால் தரணி யோர்கள் சொல்லுஞ் சோதிடமானது பொய்யாகப்போச்சு. ஐந்நூறில் யான்சொன்னதாகச்சொல்லி வொளித்தார்கள் சித்தரானவர். ஆன போதினும் என்னுடைய நூலை ஆராய்ந்து பாரும் எ-று. 43

பாரப்பாராமதேவர் நூலும்நன்று
 பாலிற்றேன்விட்டதுபோல் பண்பாய்ச்சொன்னார்.
ஆரப்பாபதினெண்பேர் சித்தர்பாடல்
 அகப்பட்டால்அதிலும் நிலைகாணலாம்பார்
வேரப்பாவுலகினிலே வேசிமக்கள்
 வீணென்பார்பாவிகள்பல் லுதிரக்குத்து
சீரப்பாயுனக்கிகிரி யுண்டோவாலை
 தியானமதுமறவாமல் தினமும்போற்றே.

இ-ள். பார்ப்பதற்கு ராமதேவர்நூலும் நன்றாகும். பாலினோடு தேன்விட்டாற்போல் பண்பாகச்சொல்லினார். பதினெண்பேராகிய சித்தர்பாடலும் அகப்படுமாகின் அதிலும் நிலைகாணலாகும். உலகின் மீது வேசியினுடைய மக்கள் இந்நூலை வீணென்பாராகில் அவர்க ளுடைய பல்லானது உதிரும்படியாக அடிக்கவேண்டும். சீராக வாலையினுடைய தியானஞ் செய்குவாய் எ-று. 44

போற்றிடவேபொசிப்பின்வாக்கு யோகங்கேளு
 புனிதவுயிர்க்குடையவன்குருன் ராஜனாகில்
ஏத்திடவேதயிரினிலே விருப்பமாவன்
 இயல்புதனேயாமாகில் புளிப்பில்விருப்பமாவான்
பார்த்திடவேசந்திரனெனில் பாலினிலேவிருப்பம்
 பளிங்கனெனில்சர்க்கரை தின்பண்டங்களில்விருப்பம்
சாத்திடவேசனியானால் காட்டுக்கீரையின்பம்
 தண்மையுயிரோனுடனே ராகுகேதேகில்.

இ-ள். போற்றிய பொசிப்பும் வாக்கும் யோகமுங் கேளும். உயிர்க்குடையவன் வியாழனாகில் சாதகமானவன் தயிர்மீது விருப்ப முடையவனாகும். புதனாகில் புளிப்பில் விருப்பமுடையவனாகுவன். சந்திரனாகில் பாலில் விருப்பமுடையவனாகும். சுக்கிரனாகில் சக்கரை யுடன் தின்பண்டங்களில் விருப்பமுடையவனாகும். சனியாகில் காட் டுக்கீரையின்மீது விருப்பமுடையவனாகும். உயிருக்குடையவனுடன் இராகு கேது சேரில் கேளும் எ-று. 45

ஏகிலிருவரிலொருவ ரிவருடனேகுளிகன்
 யேகிடிலோசத்திபூசை செய்துமாங்கிஷங்கள்
வாகிலதைபொசிப்ப னுயிரோனுமன்னனாகில்
 வண்மையுடன்சமவூஷ்ண போசனமேசெய்வன்
பாகில்புதன்சந்திரனெனில் குளிர்ந்தவன்னம்புசிப்பன்
 பாலுடன்செவ்வாயானால் சுடசுடச்சாப்பிடுவன்
போகில்சுக்கிரன்சனியேயெனில் சாமாதிபோசனமே
 புரிந்துபுசித்திடவே பொருந்துவானே.

இ-ள். மேற்கண்ட இருவர்களில் ஒருவர் இவர்களுடன் குளிகன் ஏகிடில் சாதகன் சத்திபூசையானது செய்து மாமிசங்களைப் புசிப்

பன். உயிருக்குடையோன் வியாழனுகில் சமமாகிய ஊஷ்ணபோசனம் பொசிப்பான். புதன் சந்திரனுகவிருக்கில் குளிர்ச்சியாகிய அன்னம் பொசிப்பன். சூரியனுடன் செவ்வாயாகில் சுடசுடப்பொசிப்பன். சுக்கிரன் சனியாகில் சாமாதிபோசனம் புரிந்து பொசிப்பதற்குப் பொருந்துவன் எ-று. 46

பொருந்துமுயிர்தனக்கிரண்டில் வேந்தனுகில்
புனிதவேதங்கள்வரும் சுக்கிரனுகில்
யிருந்திடினில்சாஸ்திரங்க ளெட்சணங்கள்சொல்வன்
யினியபுதனிருக்கில்தமிழ்க் கதிபனுகும்
வரந்தசெவ்வாய்சனிக்கு தெலுங்குகர்னுடம்
வருங்கேதுராகுயிருந் தவருடனவ்வீட்டோன்
யிருந்திடவேஅன்னியபல பாஷைகற்பான்
விளங்கவரும்யோகபலன் விளம்பக்கேளே.

இ-ள். உயிர்த்தானத்திற்கு 2-ஆமிடத்தில் வியாழனுகவிருக்க சாதகனுக்கு வேதவாக்கியங்கள் வருகும். சுக்கிரனுல் சாஸ்திரங்கள் எட்சணங்கள் சொல்குவன். புதனிருக்கில் தமிழ்க்கதிபனுக விருப் பன். செவ்வாய் சனி இவர்களிருக்கில் தெலுங்கு கர்னுடகமுங் கற்பன். கேது இராகு இவர்களிருந்த அவருடன் அவ்வீட்டோன் யிருந்திட அன்னிய பலபாஷைகளுங் கற்பன். விளங்கவரும்படியான பலன் சொல்லக்கேளும் எ-று. 47

விளம்புவேனுயிர்க்கேழி லெட்டியிரவிவீட்டில்
மேவிதிங்களிருக்கதிங்கள் வீட்டிலிரவியுமே
வளம்பெறவேயிருக்கப்பத்துக் குடையோனிவரோடே
வாழ்ந்திருக்கச்சாதகன் பதினேருவயதுமுதலாய்
தளம்பெறவேவயதளவும் தண்டிகையிலேறித்
தானிருப்பானுயிர்க்குடையோ னீச்சனுனலும்
சளம்பெறவேரவியுடனே கூடிவல்லதுகேள்
சஞ்சலமாய்ப்பகைவருடன் கூடினிற்கால்சுகமே.

இ-ள். சொல்வேன் கேட்பாயாக: உயிர்க்கு 7-ஆமிடத்திலும் 8-ஆமிடத்திலும் சூரியனுடைய வீட்டிலும் சந்திரனிருக்க, சந்திர னுடையவீட்டில சூரியனிருக்க, 10-க்குடையோன் இவர்களுடன் கூடிநிற்கச் சாதகமானவன் பதினேருவயது முதலாகத் தனக்குரிய வயதளவும் தண்டிகையிலேறி வாழ்ந்திருப்பன். உயிர்க்குடையோன் நீசனுகினும் சூரியனுடன் கூடினும் அல்லது பாபர்களுடன் கூடி நிற்கினும் கால்சுபமாகு மென்பர் எ-று. 48

சுகமானலக்கினத்தில் வேந்தனுந்தானிருக்க
சுத்தமுடன்புதன்பார்க்க வல்லதுகூடியிருக்க
செகமாளுவனரசனவன் கொற்றலேமீதாக
தினம்வகிப்பருயிரொடு தேளதாக

திகழுதனிற்குசனிருந்தால் திசையோகமாகுஞ்
செப்புவேன்மிதுனம்பெண் ணதுவுயிரதாக
வரையுடனேபுதனிருந்தால் பிலத்தசாதகனும்
வண்மையுடன்தனுசுமீனமாகி குருவிருந்தால்.

இ-ள். இலக்கினத்தில் வியாழனிருக்க அவரைப் புதன்பார்க்க அல்லது கூடியிருக்கச் சாதகமானவன் சொல் செகத்தரசனுக்கு மேன்மையாகவிருக்கும். உயிரினும் விருச்சிகவிராசியினும் செவ்வாயிருக்க திசையோகமாகுமென்பர். மிதுனமும் கன்னியும் இலக்கினமாக அதில் புதனிருக்க பெலத்த சாதகமாகும். தனுசு மீனம் லக்கினமாக அதில் குருவிருக்கக் கேளும் எ-று. 49

## மாளவயோகம்

குருவிருந்தாலதிகயோக வானுமப்பா
குருநாலிலிருந்தால் மாளவயோகங்கேளு
திருமாதினருட் பெறுவாரிவன்தாய்தந்தை
திடம்பெறுவர்சாதகனுங் காணவொண்ணு
அருமையானைபுரவியுடன் கனகபொற்றண்டிகையும்
ஆடையாபரணஞ் சலதுரகங்கிரிதுரகம்
பெருமைமிகுவாதிபத்தியம் வெகுஜெனபோஷகனும்
பிரபலமுண்டுகாடேகினும் பிரியாதிவ்வாழ்வே.

இ-ள். மேற்கூறியவண்ணம் குருவிருக்கில் அதிக யோகவானுகும். குரு நாலாமிடத்திலிருக்க மாளவயோகமாகும். அதின்பலன் கேளும். சாதகனுடைய தாய்தந்தையர்கள் திருமாதின் அருள்பெறுகுவர். திடம்பெறுகுவர். சாதகனுங்காண என்னுளும் யானை புரவியுடன் கனகமயமான தண்டிகையும் ஆடையாபரணாதிகளும் சலதுரகம் கிரிதுரகமும் பெருமையாகிய ஆதிபத்தியமும் வெகுசெனபோசகனுயும் பிரபலமாக வாழ்குவன். தான் காடேகினும் இந்தவாழ்வானது குன்றுதென்றனர் எ-று. 50

அழகின்னமகரங்குடம் யுயிராகிசனியும்
அதிலிருந்தால்யோகமுண்டு உயிர்க்கும்ராசிக்கும்
தழையவொருவனுமாகில் பூரணபலமென்று
சாத்தபுட்கலேயோகமென்றும் பூமிபாலனென்றும்
செழியவேவீற்றிருப்பா னுயிர்க்குநாலாமிடத்தில்
செங்கதிரோன்சந்திரன் செவ்வாய்ராகுகூடில்
அழியவேயவ்வீடு பகைவீடாயிருக்க
அப்பனேபிறந்தோன்வீடு மூவாண்டுக்குள்ளே.

இ-ள். மகரம் கும்பம் உயிராகி அதில் சனியிருக்க யோகமுண்டாம். உயிர்க்கும் இராசிக்கும் ஒருகிரகமாகில் பூரணபலனுண்டாமென்றும் புஷ்கலேயோகமென்றும் பூமிபாலனென்றும் யாவரும் புகழ

வீற்றிருப்பன். உயிர்க்கு 4-ஆமிடத்தில் சூரியன் சந்திரன் செவ்வாய் இராகு இவர்கள் கூடிநிற்க, அந்தவீடு பகைவீடாகவிருக்க பிறந்த சாதகனுடையவீடு மூன்றுவருஷத்திற்குள்ளாக கேளும் எ-று. 51

மூவாண்டுவருமதற்குள் சீரணமாய்ப்போகும்
உடும்புபாம்புபெருச்சாளி பேய்கள்குடிகொள்ளும்
தீவாண்டுவாதைபடுங் கிட்டும்பந்துக்களினாலே
தீராதகலகம்வரு மின்னங்கேளு
ஏவாண்டுமுயிருக் கிரண்டில்நாலு
யேழுதனிலேகதிர்புதன் சுக்கிரனிருக்கில்
கூவாண்டுதனதான்னிய முடையோனவான்
கூருயூகிகளினுமே லாகியாவானே.

இ-ள். மேற்கூறியவண்ணம் மூன்றுவருஷம் வருகுமுன்னம் சீரணமாகப்போகும். அந்த வீட்டில் உடும்பு பாம்பு பெருச்சாளி பேய்கள் இவை முதலானதும் வாசம்செய்யும். பாதைபடச்செய்யும். பந்துக்களினால் தீராதகலகம் வரும். இன்னமுங் கேட்பாயாகவும். உயிர்க்கு 2-4-7-ல் சூரியன் புதன் சுக்கிரன் இவர்களிருக்கத் தனதான்னிய முடையோனாகுவன். சொற்களில் யூகியாகுவனென்பர் எ-று. 52

ஆவானேவுயிர்க்குமெட்டுக் குடையோராகி
யதிதானயெமராசிக் குடையோனுமானால்
போவானேதேசாந்திரி யாகத்தானே
புகனுயிரோன்பலத்துநட்பு ஆச்சிஉச்சத்திருந்தால்
தாவானேன்பலத்த சாதகமதாகும்
சத்துருவெனில்தெரிந்துகொண் டுரைசெய்நீயே
ஏவானனிராசிதன்னைச் சொல்லக்கேளு
என்மகனேயதின்விபர மினிமேற்றானே.

இ-ள். உயிர்க்கும் எட்டுக்குடையோராகியும் எமராசிக்குடையோனுமாகில் சாதகன் தேசாந்திரியாகப் போகுவன். உயிருக்குடையோன் பலத்து நட்பு ஆட்சி உச்சத்திலிருக்க பலத்த சாதகமாகும். ஆனால் சத்துருகிரகமறிந்து பலன் சொல்கவும். இராசிகள் சொல்லக் கேளும் அதினுடைய விபரம் இனிமேற்றானும் எ-று. 53

தானேயொருராசிநூற்று முப்பத்தைந்துநாழி
தானாகயிந்நாழிமுப்பது பாகமாகும்
மானேபாகமொன்றுக்கு நாலரையேநாழி
வகைபிரித்துமுப்பது பாகமதால்
பானேலக்கினவுரையைச் சொல்லக்கேளு
பரிந்துநூற்றுமுப்பத் தைந்துநாழிபாதிசெய்து
ஆனேயறுபத்தேழரைநாழி நாழிகையதாகும்
அறுபத்தேழரைநாழி பதினைந்தாயாக்கே.

இ-ள். ஒரு இராசிக்கு நூற்றிமுப்பத்தைந்து நாழிகை; இந்த நாழிகை முப்பது பாகமாகும்; பாகமொன்றுக்கு நாலரை நாழியாகும்; வகையைப்பிரித்து முப்பதுபாகமாகவும் வைத்தபின்பு இலக்கின உரையைச் சொல்லக்கேளும். நூற்றுமுப்பத்தைந்து நாழிகையைப் பாதியாகச் செய்துபார்க்க அறுபத்தேழரை நாழிகையாகும்; அறுபத்தேழரை நாழிகையைப் பதினைந்தாய்ச்செய்து கேளும் எ-று. 54

ஆக்குநாழிகைமூன்றிற்கூறில் நாற்பத்தைந்தாம்
அதுமுதல்திரேக்காணமாக யிருக்கும்வரையைக்கேள்
நோக்குநூற்றுமுப்பத்தைந்து நாழிகையும்காலும்
நுகச்செவ்வாயிருந்தாலும்யிந்த ரெண்டுபேரும்
தாக்குமிடங்காலுக்குநடுவே யெத்தனைகாலிருந்ததோ
வத்தனைபேர்சகோ தரமென்றெண்ணித்
தாக்குமாண்பெண்கிரகமறிந்து ஆண்பெண்ணென்று
சாத்துபிதாவர்க்கமந்த மாதத்தில்ரவியே.

இ-ள். மேற்கூறியவண்ணம் ஆக்கிய நாழிகையில் மூன்றில்கூறில் நாற்பத்தைந்தாகும். அதுமுதல் திரேக்காணமாக யிருக்குஞ் சொல்லக்கேளும். நூற்றுமுப்பத்தைந்து நாழிகையின் காலில் செவ்வாயிருக்கினும், இந்த இரண்டுபேரும் தாக்குமிடம் காலுக்கு நடுவாக எத்தனை காலிருந்ததோ, அத்தனைபேர் சகோதரர்கள் என்று எண்ணி ஆண்பெண் கிரகமறிந்து ஆண்பெண்ணென்று சொல்கவும். பிதாவினுடைய வர்க்கம் அந்த மாதத்தில் சூரியனும் கேளும் எ-று. 55

ரவியிருந்தகாலுக்குமுயிர்க் கொன்பதாமிடத்தில்
நாடுமவன்காலுக்கும் நடுவேயெத்தனைகால்
புவிகாணக்கண்டதோ அத்தனைபேர்பிதாவோடு
பிறந்தோர்பெண்ணுனித்தனையென் றறிந்துசொல்லு
ரவிசந்திரனிருந்த காலுக்குமுயிருக்கும்
நாலோனுறுகாலுக்கு யெத்தனைகாலாச்சோ
சுவியோடத்தனைபேர் மாதாவுடன்பிறந்தோர்
சொல்பிசகாமுன்போ லாராய்ந்துசொல்லே.

இ-ள். மேற்கூறியவண்ணம் சூரியனிருந்தகாலுக்கு உயிர்க்கும் 9-ஆமிடத்தில் அவனுடைய காலுக்கு நடுவாக எத்தனை கால் பூமி காணக்கண்டதோ அத்தனைபேர் பிதாவோடு பிறந்த பெண்ணுமென்று அறிந்து சொல்குவாய். சூரியன் சந்திரன் இருந்த காலுக்கும் உயிருக்கும் 4-ஆமிடத்தோன் ஏறிய காலுக்கு எத்தனைகாலாச்சுதோ அத்தனை பேர் மாதாவுடன் பிறந்தோர்களென்று சொல்லானது பிசகாமல் அறிந்து சொல்வாயாகவும் எ-று. 56

ஆராய்ந்தேழுக்குடையோன் யிருந்தகாலுக்கும்
அப்பனேசுக்கிரனின்ற காலுக்குநடுவே

பேராய்ந்துஎத்தனைகால் கண்டதோவத்தனையில்
  பிறவியுடன்பிறந்தோ ரெனவேசொல்வாய்
வீராய்ந்துவுயிர்க்குடையோ னிருந்தகாலுக்கும்
  வியாழந்தங்காலுக்கு நடுகண்டதொகையைச்
சீராய்ந்துபுத்திரர்பெண் ணித்தனையென்றுரையே
  செப்பநட்பாட்சியுச்சம் பகைநீசங்காணே.

இ-ள். ஆராய்ந்துபார்த்து 7-க்குடையோனிருந்த காலுக்கும் சுக்கிரன் நின்ற காலுக்கு நடுவே எத்தனைகால் கண்டதோ அத்தனையின் பிறவியுடன் பிறந்தோனெனச் சொல்குவாய். உயிர்க்குடையோன் இருந்த காலுக்கும் வியாழனின்ற காலுக்கும் நடுகண்ட தொகையைப் பார்த்து புத்திரர் புத்திரி இத்தனை யென்றிரைப்பாய். உரைக்கினும் நட்பு ஆட்சி உச்சம் பகை நீசம் கண்டுரைக்கவும் எ-று. 57

காணப்பாஅபுரூபப் பலத்தைச்சொல்வேன்
  காணுயிர்க்கிருபத் திரண்டாநட்சத்திரம்
தோணப்பாயென்னநட்சத் திரமோவந்த
  சுகனத்துக்கார்த்திகையோ வருதோவத்திசையில்
ஊணப்பாசெய்போதில் சாமான்னியபலனென்று
  ஓகோகோசொல்லவரின்னம் பலத்தைக்கேளு
பேணப்பாசூரியனுக்குஞ் செவ்வாய்க்குமாகில்
  பெலமாகும்புகர்க்குள் குருவுக்கும்நடுவினிலே.

இ-ள். காண்பதற்கு அபுரூபப்பலத்தைச் சொல்வேன் கேட்பாயாக. உயிர்க்கு 22-ம் நட்சத்திரம் என்னநட்சத்திரமோ அந்த சுகுணத்திற்கு யாருடைய திசை வருகின்றதோ அத்திசையிலும் புத்தியிலும் சாமான்னிய பலனாகுமென்றும் சொல்குவர். இன்னமுங் கேட்பாயாக. சூரியன் செவ்வாய்க்குமாகில் பெலமாகும். சுக்கிரன் குருவிற்கும் நடுவாகக்கேளும் எ-று. 58

நடுவினிலேபெலமாகும் சனிக்கும்ராகுவுக்கும்
  நான்சொல்வேன்அந்தரபலன் புதந்திங்களுக்கும்
புடவினிலேயெப்போதும் பலமாங்காணு
  புகழ்பெரியராசிகுண முழுதுங்கேளு
தடவினிலேஆடெருது மிதுனநண்டு
  சாத்தஅரிபெண்ணோடு யிவையாறும்பொட்டை
நெடுவில்கோள்தேள்மகர மிந்தநாலும்
  நெஞ்செவிடுகுடமீன் யிந்தரெண்டும்.

இ-ள். நடுவில் பெலமாகும், சனிக்கும் ராகுவுக்கும் அந்திரபலனாகும், புதனுக்கும் சந்திரனுக்கும் எப்போதும் பலனாகும், புகழ் பெரிய இராசியின்குணம் முழுதுங்கேட்பாயாக. மேஷம்-ரிஷபம்-மிதுனம்-கடகம்-சிங்கம்-கன்னி-இந்த ஆறுயிராசியும் பொட்டை

யாகும். தனுசு-துலாம்-விருச்சிகம்-மகரம்-இந்த நாலும் செவிட்டுராசி யாகும். கும்பம்-மீனம்-இந்த இரண்டுராசியுஞ் சொல்லக்கேளும் எ-று.

இந்திரண்டுஞ்சப்பாணி யின்னமிதிற்சூட்சம்
இயம்புகிறேன் ஆடுமாடு சிங்கமிந்தமூன்றும்
விந்தையுறபகற்காலம் பொட்டைநண்டுகன்னி
மிதுனமிந்தராசி ராத்திரியிற்பொட்டை
முந்துபோவவிருச்சிகம் ராக்காலஞ்செவிடு
வில்மகரப்புகர்செவிடு மீன்புகர்ச்சப்பாணி
சிந்தைகுடம் ராத்திரிகாலஞ்சப்பாணி
செல்வனேராசிகுண மிவ்விதங்கண்டறியே.

இ-ள். மேற்கண்ட இராசியிரண்டுஞ் சப்பாணியாகும். இன்னமும் இதில் சூட்சமானது சொல்லுகின்றேன் கேட்பாயாக. மேஷம்-ரிஷபம்-சிங்கம்-இந்த மூன்று ராசியும் பகலில் பொட்டையாகும். கடகம்-கன்னி-மிதுனம்-இந்த மூன்றுராசியும் இராத்திரியில் பொட்டையாகும். விருச்சிகவிராசி இராக்காலத்திற் செவிடாகும். தனுசு-மகரம் செவிடாகும். மீனம்-சப்பாணி-கும்பம் இராத்திரிகாலத்திற் சப்பாணியாகும். இவ்விதமாக இராசிகளின் குணங்களின் குணங்கள் கண்டறிவாய் எ-று. 60

அறியவேபிதிர்நாளைச் செப்பக்கேளாய்
அப்பனேசாதகன் லக்கணமுப்பதாக
பிரியவேசெய்துவவன் பிறந்தபாகம்
பேறெந்தவாரமோ அப்பாகத்துடையோன்
உரியநட்சத்திரராசி யெதுவோராசி
வுகந்தவந்தராசிபிதிர் நட்சத்திரமாகும்
தெரியவதற்குநாலோ னெந்தவிராசிதானே
சிறந்தவந்தராசிமாதம் நட்சத்திரமாமே.

இ-ள். பிதுருடைய நாட்களைச் சொல்வேன் கேட்பாயாகவும். சாதகனுடைய லக்கினம் முப்பதாகப் பிரிவுசெய்து அவர் பிறந்தபாகம் பார்க்க எந்தவாரமோ அப்பாகத்துக்குடையோன் உரிய நட்சத்திர ராசி எதுவோ அவ்விராசி பிதுர்நட்சத்திரமாகும். அதற்கு 4-ஆமிடத்தோன் எந்தயிராசிதானே அந்த ராசி மாதம் நட்சத்திரமாகும் எ-று.

ஆமப்பாபுகமிரந்த பாற்சென்றுனே
அப்பாகநட்சத்திர ராசிமனைவிக்காம்
ஓமப்பாசெவ்வாய்பாக மெதுவோவந்த
உண்மையாம்பாக நட்சத்திரராசி
தாமப்பாசகோதர நட்சத்திரராசி
சாத்தினேன்நட்பாட்சி ராசிநட்சத்திரமே
நாமப்பாசொன்னபடி பார்த்துச்சொல்வாய்
நானிலத்தோர்நகைசெய்ய நாடிடாதே.

இ-ள். சுக்கிரன் எந்தபாற்சென்று நின்றானே அந்தப்பாக நட்சத்திரம் இராசி மனையாளுக்காகும். செவ்வாயின் பாகமெதுவோ அந்தப்பாகநட்சத்திரம் இராசி சகோதரர்களுக்காகும். நட்சத்திரம் இராசிகளைச் சொன்னேன். நட்பாட்சி ராசிநட்சத்திரம் இதிற் கூறிய வாறு பார்த்துச்சொல்லுவாய். பூமியின்மீதுள்ளவர்கள் நகைக்கும் படிக்கு நாடிடாதே எ-று. 62

நாடியேமுயிரோனு முயிரினிலிருக்க
  நலமல்லதாட்சியுச்சங் களிலிருக்க
நீடிரெண்டாமிடந்தனிலே புதனிருக்க
  நிலையாகிப்பனிரெண்டில் புகரிருக்கப்
பாடியதுரகசிய ஜாதகமதாகும்
  பகர்ந்திடிலோமியோகமெனும் பாங்கதாகும்
கூடியுமிரண்டினிலே நாலினிலேசூரியன்
  குருபுதனுஞ் சுக்கிரனுமூவர்கூடில்.

இ-ள். உயிரோன் உயிரிலிருக்க, அல்லது ஆட்சி உச்சத்திலிருக்க, 2-ஆமிடத்தில் புதனிருக்க, 12-ஆமிடத்தில் சுக்கிரனிருக்கக் கூறிய சாதகம் இரகசியமாகும். யோகமானது நன்மையாகும். உயிரிலும் 2-ஆமிடத்திலும் 4-ஆமிடத்திலும் சூரியனிருக்க குரு புதன் சுக்கிரன் இவர்கள் மூவரும் கூடிடினும் கேளும் எ-று. 63

மூவர்களால்சாதகனும் பலத்தானையா
  மொழியக்கேள்ராஜாதி ராஜனாவான்
மூவர்களாலெத்தனைமந்திரிக ளிருந்தாலும்
  முதலவனிதன்வாக்குமேலா மதியோனாவான்
மூவர்களால்சதுரங்க பெலத்தோனாவான்
  உலகில்நீதிவழுவாமல் மனுவுரைப்பான்
மூவர்களாலனைவருக்கு மதிசொல்பவனாய்
  முகந்திடுவானிவ்விதமாய் சொல்லத்தாமே.

இ-ள். மேற்கூறிய மூன்று கிரகங்களின் சாதகன் பலன் பெருகுவன் இராஜாதி யிராஜனாகுவன் அல்லது எத்தனைபேர் மந்திரிகளிருந்தாலும் முதல்வனாக இவனுடைய வாக்கு மேலாகவிருக்கும். புத்திபுடையோனாவன். சதுரங்கச்சேனைகள் வாய்த்து பெலத்தோனாகுவன் பூமியின்மீது நீதியானது வழுவாமல் மனுவானது உரைப்பன். யாவருக்கும் புத்தியானது சொல்வோனாகியும் உகந்திருப்பான் சொல்மேலாகவும் எ-று. 64, 65

மேலாகவுயிருக்கு மொன்பதாமிடத்தில்
  மகிழ்ந்துசுக்கிரன்புதன் குருவுமங்கிருக்க
பாலாகவந்தவீடு புதனாட்சிவுச்சம்
  பண்புத்தால்முன்திசையில் புதையலெடுப்பான்காண்

மாலாகவந்ததிதரிருவர் திசைப்பொசிப்பர்
 மயங்காமல்யெவ்வள வாகிலுங்கிடைக்கும்
மூவாகவுயிர்க்குநாலோ னொன்பதோன்ராசியோனும்
 உகந்துவொன்பதாமிடத்தி லிருக்கவல்லவென்றால்.

இ-ள். உயிர்க்கு 9-ஆமிடத்தில் சுக்கிரன் புதன் குரு இவர்கள் மூவருமிருக்க, சாதகமானவீடு புதனுடைய ஆட்சி உச்சமாகவிருக்க, அவருடைய முன்றிசையில் சாதகன் புதையலெடுப்பான். அல்லது அவர்களுடைய திசைப்பொசிப்பில் கலக்கமில்லாமல் எவ்வளவாகிலுங் கிடைக்கும். உயிர்க்கு 4-ஆமிடத்தோன் 6-ஆமிடத்தோன் அவர்களிருந்த இராசியாதிபதியும் கூடி 9-ஆமிடத்திலிருக்க அல்லது கேளும் எ-று. 66

பலமாகுமுயிருக்கு வொன்பதோனும்நாலில்
 வீற்றிருக்கவவனுடனே சுபர்கள்கூட
நலமாகுமல்லது சுக்கிரன்வியாழம்
 நாடியிவரிருவரி லொருவர்களேகூடி
அலமாகப்பார்க்கவவன் றிசையிலேழோ
 னறியவீணலதில்கனக பல்லக்கேறுவன்
பெலமாகுஞ்சந்திரனில் கூடியிருக்க
 புகழ்பெறவேயஸ்வகொடை சுகமுண்டாமே.

இ-ள். உயிர்க்கு 9-ஆமிடத்தோனும் 4-ஆமிடத்திலிருக்க, அவருடன் சுபக்கிரகங்கள்கூட, அல்லது சுக்கிரன் வியாழன் இவர்களிருவரில் ஒருவர் கூடிப்பார்க்க, அவருடைய திசையில் 7-க்குடையோன் புத்தியில் சாதகன் கனத்த பல்லக்கேறுவன். சந்திரனுடன் கூடியிருக்க அசுவமும் கொடையும் புகழும் சுகமும் உண்டாகி வாழ்குவான் என மேலோர் கூறுகின்றனர் எ-று. 67

சுகமந்தவுயிர்க்குயேழோன் விலக்கவல்லதுகேள்
 சுத்தமொடுநட்பாட்சி யுச்சத்திருக்க
திகமுறவேயனலோனும் பலத்திருக்க
 சிறப்புடனேகனகபல்லக் கதின்மேலேறி
நகைபெறவேயிருபுறமும் சாமரைகள்வீச
 நாயகனாய்வீற்றிருப்பன் யின்னமுயிருக்கே
அகமகிழநாலோனொன் பதிலேயிருக்க
 அந்தவொன்பதோனும் நாலிலேழிற்போக.

இ-ள். உயிர்க்கு 7-ஆமிடத்தோன் பெலவானாகவிருக்க, அல்லது நட்பாட்சி உச்சத்திலிருக்க, 4-ஆமிடத்தோன் பெலவானாகச் சாதகமானவன் யாவரும் புகழ சிறப்பானது பெருகி கனதண்டிகையின் மேலேறி இருபுறமும் கௌரியானது வீசிக்கொண்டுவர நாயகனாக வீற்றிருப்பன். உயிர்க்கு 4-ஆமிடத்தோன் 9-ஆமிடத்திலிருக்க, 9-ஆமிடத்தோன் 4-ஆமிடம் 7-ஆமிடத்திலேறி நிற்கக்கேளும் எ-று. 68

போகும்வீடது சுபவீடாயிருக்க
புனிதசுபரிருக்க வல்லவர்கள்பார்க்க
யேகும்வினைமுன்ன பலனதாகும்
இயற்றநாலாமிடத்தோனும் பகையிற்கூடி
சோகமாய்நீச்சனுகிப் போக்வல்லதுகேள்
சூரியனுடன்கூட அஸ்தமானமாவ
வேகமாயவன்றிசைப் பொசிப்பின்முந்திதாம்
விண்ணிலேயேகிடுவான் விந்தைகேளே.

இ-ள். மேற்கூறிய வீடு சுபவீடாகவிருக்க, அதில் சுபக்கிரகங்களிருக்க, அல்லதுபார்க்க, சாதகனுக்கு முன்கூறிய பலனுகும். 4-ஆமிடத்தோன் பகைவீட்டிற் கூடி நீசமடைந்திருக்க, அல்லது சூரியனுடன்கூட அஸ்தமனமாகவிருக்க அவனுடைய திசைப்பொசிப்பில் முன்னும் மரணமடைந்திடுவன் எ-று. 69

## களத்திர யோகம்

விந்தையென்னவுயிர்க்குநாலா மிடத்தில்சனிசந்திரன்
வீற்றிருக்கமறுமனை யாட்டிப்பிள்ளை
அந்தமுடனுண்டாகும் பத்தோனேழோ
னரியரெண்டோன் மூவரொருராசில்நிற்க
சந்ததமாயவனும்வெகு தாரங்கொள்வான்
சாற்றுவேனுயிர்க்குமைந்தா மிடத்தோனையா
சிந்தையுறரெண்டில்மூன்றி லிருக்கவிவர்திசையில்
செப்புவேன்பிள்ளையுண்டாந் தெளிந்துகேளே.

இ-ள். உயிர்க்கு 4-ஆமிடத்தில் சந்திரனிருக்கச் சாதகமானவன் மறுமனையாட்டியின் மைந்தனுகும். 10-க்குடையோன் 7-க்குடையோனும் 2-க்குடையவன் இவர்கள் மூவரும்கூடி ஒருராசியிலிருக்க சாதகன் வெகுதாரங்கள் கொள்குவான். உயிர்க்கு 5-ஆமிடத்தோன் 2-ஆமிடம் 3-ஆமிட மிவைகளிருக்க அவன் றிசையில் புத்திரருண்டாந் தெளிவாகக்கேளும் எ-று. 70

## புத்திர யோகம்

தெளிந்ததென்னவைந்தா மிடத்தோனுடையா
சேர்ந்துவியாழமேயிருக்கப் பிள்ளையுண்டாம்
விளிந்தென்னஐந்தோனு முயிரில்நிற்க
விளங்குமுயிரோனுமைந்தா மிடத்தில்நிற்க
களிந்தென்னபிள்ளையுண்டா மவர்கள்பெலம்பார்த்து
கருதுவாம்ஐந்தாமிடத்தோ னுரேருடன்கூட
வளிந்தென்னஅல்லதாறில் நிற்கும்பிள்ளை
வகையுடனேபெற்றெடுப்ப தில்லைதானே.

இ-ள். 5-ஆமிடத்தோனோடு கூடி வியாழனிருக்கப் பிள்ளையுண்டாம். 5-ஆமிடத்தோன் இலக்கினத்திலிருக்க இலக்கினத்தோன் 5-மிடத்திலிருக்க பிள்ளையுண்டாம். கிரகங்களிட பலன் பார்த்துச் சொல்லவேண்டும். 5-ஆமிடத்தோன் 6-ஆமிடத்தோனுடன் கூட அல்லது ஆறுமிடத்தில் நிற்கப் பிள்ளையானது பெற்றெடுப்பதில்லையாமென்பர் எ-று. 71

தானுனவுயிர்க்கைந்தோ னஸ்தமனமாக
  தானல்லமொன்பதா மிடத்திருக்க
ஊனுனஉயிரற்ப னுவான்புத்திர
  யோகமுண்டுஒன்பத்தோன் மூனோடேகூடி
மீனுனயோகராசி லிருக்கநல்ல
  மேன்மையுடன்பிறக்கும்பிள்ளை தீர்க்காயுசுண்டு
மானுனயோகமுண்டு ஐந்துக்குடையோனும்
  மங்கியெட்டாமிடத்திருக்க ஏழுக்குடையோனே.

இ-ள். உயிர்க்கு 5-ஆமிடத்தோன் அஸ்தமனமாக அல்லது 9-ஆமிடத்திலிருக்க உயிரானது அற்பவானுகும். யோகமானது உண்டாகும். 9-ஆமிடத்தோன் 3-ஆமிடத்தோனுடன் கூடி ஒருராசியிலிருக்க பிறக்கும் பிள்ளைக்குத் தீர்க்காயுளுண்டாகும். யோகமானது பெருகும். 5-க்குடையோன் 8-ஆமிடத்திலிருக்க 7-க்குடையோனுங் கேளும் எ-று. 72

## பர்வதயோகம்

ஏழுடையோனைந்தினிலே வீற்றிருக்க
  யென்னசொல்வேன் பிறவிவந்துமிறந்துபோகும்
வாழுடையபர்வதயோ கத்தைக்கேளு
  மைந்தனேவுயிரோனெந்த வீட்டிலிருந்தனனோ
கோழுடையஅந்தவீட்டோ னைந்துவொன்பதிலே
  கூடவல்லகேந்திரங் களிலிருக்க
மாழுடையஅந்தவீடுமூல கோணமாக
  மகிழ்ந்தனது உச்சமாயிருக்க.

இ-ள். மேற்கூறியபடி 7-ஆமிடத்தோன் 5-ஆமிடத்திலிருக்கப் பிறந்தபிள்ளையானது இறந்துபோகும் பர்வதயோகத்தைக் கேட்பாயாக. உயிருக்குடையோன் எந்தராசியிலிருந்தானோ அந்த ராசியாதிபதி 5-9-ல் கூடியிருக்க அல்லது கேந்திரஸ்தானங்களி லிருக்க அந்த இராசி மூலகோணமாக உச்சமாகவிருக்க எ-று. 73

உச்சமாயிருக்கப் பர்வதமாயோக
  மோங்குமிதின்பலன்கேளு பர்வதங்களிலேயும்
மெச்சுநல்லதீர்த்தமொடு வனங்களிலேயும்
  மிகுந்துநல்லமூலிகைகள் மந்திரமறிந்து

இச்சைமிகுசித்துபுரு ஷனுமாய்பாக்கிய
இன்பமிகுவோனுமா யிருப்பானையா
அச்சுதன்போலிருக்காலி லல்லதுகேந்திரத்தில்
அடுத்தவியாழமிருக்க கேசரிமாயோகம்.

இ-ள். மேற்கூறியபடிக்கு உச்சமாகவிருக்க பர்வதாயோகமாகும். அதின் பலனைக் கேட்பாயாகவும். பர்வதங்களிலேயும் தீர்த்தமொடு வனங்களிலேயும் உள்ள மூலிகைகள் அறிந்து மந்திரந்தெரிந்து சித்து புருஷனுமாய் பாக்கியமுடையோனாகி யிருப்பன். அச்சுதன்போலும் இருக்க 4-ஆமிடத்தில் அல்லது கேந்திரத்தில் வியாழனிருக்கக் கேசரியோகமாகும் எ-று. 74

## கேசரியோகம்

யோகமதின் பலன்கேளு ஆனைகுதிரைசேனை
யுகந்தபின்சூழவதி பதியாய்வாழ்வான்
போகமடாவுயிரோனு மாறினிலிருக்க
பாக்கியமிகுநராதிபதி யவன்தானப்பா
மோகமடாசத்துருசங் காரஞ்செய்வன்
மண்ணுலகிலறஞ்செய்தே விளங்குவானும்
ஏகனுயேழுக்குடையோ னேழில்நிற்க
வென்மகனேமகாமந்திரி யோகவானாகுவனே.

இ-ள். மேற்கூறிய யோகத்தின் பலன் கேட்பாயாகவும். சாதகன் ஆனை குதிரை சேனை முதலானதுஞ் சூழ அதிபதியாக வாழ்குவன். உயிர்க்குடையோன் 6-ஆமிடத்திலிருக்க பாக்கியமுடைய நராதிபதியாக விருப்பன். சத்துருக்களைச் சங்காரஞ் செய்குவன். பூமியின் மீது தருமமானது செய்து கீர்த்தியடைகுவன். 7-க்குடையவன் 7-ஆமிடத்திலிருக்க மந்திரி யோகவானாகுவன் எ-று. 75

ஆகுவனேபத்தோனும் பத்தில்வாழ
அப்பனேமந்திரியோ கமதாய்வாழ்வன்
வாகுடனேயெவையுங் கூட்டிப்பிரிக்க
வல்லவனுமகிழ்பின்னுமுயிர்க்குடையோ னலில்வாழ
ஏகுடனேநாலோ னுயிரேழில்நிற்க
ஏழுடையோன்பத்தினிலே பத்தோனேழிலே
போகமுடனேயிருக்க யிவனென்றோபாக்கியவான்
பூலோகத்திவன்கீர்த்திப் பெரிதாம்பாரே.

இ-ள். 10-ஆமிடத்தோன் 10-ஆமிடத்திலிருக்கச் சாதகன் மந்திரியோகம்பெற்று வாழ்குவன். யாவையுங் கூட்டுப்பிரிக்க வல்லவனாக விருப்பன். உயிர்க்குடையோன் 7-மிடத்திலிருக்க 4-க்குடையோன் உயிரிலும் 7-ஆமிடத்திலுமிருக்க 7-க்குடையோன் 10-ஆமிடத்திலிருக்க 10-க்குடையோன் 7-ஆமிடத்திலிருக்க சாதகமானவன் பாக்கியவானாகி பூலோகத்தில் கீர்த்தியானது பெருகி வாழ்குவன் எ-று.

பாரையாமற்றோர்பகை நீச்சமாகினுமே
பலாபலன்கள்குறையாது பகைவாராது
ஆரையாயிப்பலன்தான் பொய்க்காதையா
அவனியெல்லாமொரு குடையளரசனாகும்
சீரையாஉயிரோனும் ராசியோனும்
சேர்ந்துநட்பிலேயிருக்க வவர்களோடே
நேரையாரவியுமேழோ னட்பில்வாழ
நிசங்குதிரைகுடைகள் வருந்தீர்க்காயுசுண்டே.

இ-ள். மற்றக்கிரகங்கள் பகைநீசமாகினும் பலாபலன்கள் யாதுங் குறையாது. பகையானது வராது. இப்பலனானது பொய்யாது. இந்தப் பூமிமுழுதும் ஒருகுடைக்கீழாளும் அரசனாகுவன். உயிர்க்குடையோனும் இராசியாதியும் சேர்ந்து நட்பு ஸ்தானத்திலிருக்க குதிரையும் குடையும் வருகும். தீர்க்காயுசு உண்டாகி வாழ்குவன் எ-று. 77

உண்டையாயுயிர்க்கேழோ னுயிருக்குடையோனும்
உகந்தமிருபத்திரண்டாந் திரேகாணத்தோனும்
கொண்டையவரவர் நட்சத்திரகாலுக்கு
குறிக்கயெண்பத்தெட்டாங் காலுக்குடையோனும்
கண்டையாநட்பாயிருக்க யெண்பத்தெட்டாங்கால்
காணவவர்நட்சத்திரத்துக் கிருபத்திரண்டாம்
பண்டையாநட்சத்திர மாகுங்காணு
பகரநாலாங்காலோனும் நட்பிலேக
விண்டையாதப்பொழுது பிறவிகாண
விளங்குமைந்தன் தீர்க்காயு சோடுதானே.

இ-ள். உயிர்க்கு 7-ஆமிடத்தோனும் உயிர்க்குடையோனும் இருபத்திரண்டாந் திரேகாணத்தோனும் இவர்களைக்கொண்டு அவரவர் நட்சத்திரக் காலுக்குக் குறிக்க எண்பத்தியெட்டாங் காலுக்குடையோனும் நட்பாயிருக்க எண்பத்தியெட்டாவதுகால் காண அவர்கள் நட்சத்திரத்திற்கு இருபத்திரண்டாவது பண்டை நட்சத்திரமாகும். நாலாங்காலோனும் நட்புஸ்தானத்திலேற அப்போது சாதகன்ஜெனனமாக அப்பாலகன் தீர்க்காயுசுடன் வாழ்குவான் எ-று. 78

ஓடாமலெட்டுடையோன் ராசியிருக்க
வுகந்தஸ்தராசியோனு மெட்டுக்குடையோனும்
வாடாமலேயிருக்க ஆறுக்குடையோனு
மாறும்ராசியிலிருக்க அல்லதுமெட்டினிலாவதுவே
கேடாமலேயிருக்க பிறந்தபிள்ளை
புவியில்குருவருளால் தீர்க்காயுசோடிருப்பான்
நீடாமலேவருஷ யோகத்தைக்கேளு
நீசமேயுயிரோனு மாறுக்குடையோனே.

இ-ள். 8-ஆமிடத்திற்குடையோன் இராசியிலிருக்க ஸ்திரராசியோனும் எட்டுக்குடையோனுகியிருக்க 6-க்குடையோனும் மாருமல் இராசியிலிருக்க அல்லது 8-ஆமிடத்திலிருக்கப் பிறந்தபிள்ளை பூமியின்மீது குருவினுடைய கடாட்சத்தினுல் தீர்க்காயுசோடிருப்பான். வருகும்படியான விஷயோகத்தைக் கேட்பாயாக. உயிரோனும் 6-ஆமிடத்திற்குடையோனும் கேளும் எ-று. 79

## விஷயோகம்

ஆறுக்குடையோனிவர்கள் ரவியுடனேகூடில்
அனர்த்தாபசுரத்தாலே மரணமதுவெய்தும்
பேருக்குடையோன்சந்திரன் கூடில்சலகண்டம்
பெலஅஸ்துவயறு கழிச்சலாலேகண்டம்
போருக்குடையோன்செவ்வாய்கூடில் விரணங்களினுல்
பொருந்துகண்டம்புதனென்ருல் பயித்தியத்தால்கண்டம்
சீருக்குடையோன்வியாழங்கூடில் வாதசுரமும்
சிவசிவாவயற்றுவலியால் கண்டமாமே.

இ-ள். 6-க்குடையோன் இவர்கள் சூரியனுடன் கூடினுல் சாதகனுக்குத் தாபசுரத்தினுல் மரணஞ்சம்பவிக்கும். சந்திரன் கூடிநிற்கில் ஜலகண்டம் நேரிடும். வயறுகழிச்சலினுல் மரணபயம் நேரிடும். போருக்குடையோனும் செவ்வாயுங்கூடில் இரணங்களினுல் கண்டம் நேரிடும். புதனிருக்கில் பயித்தியத்தினுல் கண்டம். வியாழன் கூடிநிற்கில் வாதசுரத்தினுலும் வயிற்றுவலியினுலும் கண்டம் எ-று. 80

கண்டமாம்ராகுகேது கூடில்மைந்தா
கடுவிஷத்தினுற்கண்டம் கரியனுல்
ஒண்டுங்கள்ளர்களாலே கண்டமாகும்
ஓகோகோசுக்கிரனென்ருல் ஸ்திரீகளாலேகண்ட
முண்டுயிர்க்குநாலி லேழில்பத்தில்
சூரியன்அணுகவவன் திசையில்ராசகலகமாகும்
மீண்டுசெவ்வாயிருந்தா லாயுதத்தால்காயம்
விளங்கும்புதனிருந்தால் வித்தைப்பிரசங்கத்தால்பகையே.

இ-ள். இராகுவேனும் கேதுவேனுங் கூடிநிற்க விஷத்தினுல் கண்டம் சம்பவிக்கும். சனி கூடநிற்கில் கள்ளர்களால் கண்டஞ் சம்பவிக்கும். சுக்கிரனுகவிருக்கில் ஸ்திரீகளினுல் கண்டம். உயிர்க்கு 4-7-10-ல் சூரியன் நிற்க அவனுடைய திசையில் அரசர்களுடைய கலகமாகும். செவ்வாய் கூடிநிற்கில் ஆயுதங்களினுல் காயமானது படும். புதன் கூடிநிற்கில் வித்தைப் பிரசங்கத்தினுல் பகையாகும் எ-று. 81

பகையாகுங்குருவிருந்தால் பொன்னுதானம்
பகருங்கன்னியாதானம் பரவுபகாரந்தான்

வகைபுரிவனிராகுகேதுவாகி லீனசாதியாலே
வண்மையொடுபிரசங்க மாயிருப்பன்
தொகையோடுவுயிர்க்கொன்ப தோனுங்கூடித்
துருவலர்கள்வீட்டிலிருக்க ராசிக்குடையோனும்
இகலுடனேபலயீன மாகமெத்த
யெத்தனைபேர்பெலமுடனே யிருந்தாலுந்தான்.

இ-ள். குரு கூடியிருந்தால் பொன்தானம் கன்னியாதானம் பரவுபகாரம் இவைகள் செய்குவன். இராகு கேதுவாகில் ஈனஜாதியினாலே பிரசங்கவானாகவிருப்பன். உயிர்க்கு 9-ஆமிடத்தோனுங்கூடி துருவலர்களின் வீட்டிலிருக்க அந்த ராசிக்குடையோன் பெலவீனமாக எத்தனைபேர்கள் பெலமுடனிருக்கினுங் கேளும் எ-று. 82

இருந்தாலும்பிதாமரணந் தப்பாதப்பா
யெழிற்பிதிர்தானத்தோனு மாயுளோனும்
பொருந்தவிவர்பகையோடே பகைவீட்டிலிருக்க
புணர்ந்திவரோடே ராசியோனிருக்க
விருந்துபின்னுமொக்க கிரகங்கூடியொரு
வீட்டில்விளங்கவல்லதுபார்க்கப் பிறந்தசேயன்
தெரிந்திடவேபிதாவிந்துக் குதித்தோனென்றே
செப்புவாயஸ்தான வகையறியக்கேளே.

இ-ள். மேற்கூறியவண்ணம் கிரகங்களிருக்க பிதாவினுக்கு மரணமானது தப்பாது. 7-ஆமிடத்தில் பிதுர்த்தானத்தோனும் ஆயுளோனும் பகையாகி பகைவீட்டிலிருக்க இவருடன் ராசியாதிபதியிருக்க பின்பு ஒக்கக்கிரகங்கூடி ஒருராசியிலிருக்க அல்லது பார்க்கச் சாதகமானவன் தன்னுடைய பிதாவிந்துக்கு பிறந்தவனென்று சொல்குவாய் ஸ்தானவகை யறியக் கேளும் எ-று. 83

அறியவேயுயிர்க்குநாலு மாதுருஸ்தானம்
ஆருயிருக்கொன்பதுவே பிதுர்ஸ்தானமாகும்
தெரியவேவொன்பதுடையோனும் பனிரெண்டோனும்
தெளியவந்தராசியிலிருக் கின்றனரோவந்த
வரியவந்தராசிநாதன் நட்பாட்சியுச்சம்
வண்மையுடன்தானிருக்க மைந்தாகேளு
பெரியராசியினிடதிரு வெந்ததிக்கோ
பிறந்தவந்ததிக்குவீடு வாசலாங்கேளே.

இ-ள். ஸ்தானவகை அறியவேண்டில் உயிர்க்கு 4-ஆமிடம் மாதுர்ஸ்தானம் 9-ஆமிடம் பிதுர்ஸ்தானமாகும். 9-ஆமிடத்திற்குடையோனும் 12-க்குடையோனும் எந்தராசியி லிருக்கின்றார்களோ, அந்த ராசிதான் நட்பாட்சி யுச்சமாக இருக்கக்கேளும். இராசியினிட எந்த திக்கே சாதகமானவீடு வாசலாகும் காணபாய் எ-று. 84

வாசலென்னரவியென்றால் கிழக்குசுக்கிரன்
வந்துரைத்தாலனல்மூலை செவ்வாயானால்
பேசவேதெற்காகும் ராகுவானால்
பெரியதோர்நிருதிமூலை சனியானால்
ஆகவேமேற்குமூலை சந்திரனானால்
அப்பனேவாய்வுமூலை புதனுமானால்
தேசுறவேவடமூலை வியாழமென்றால்
செப்புவாயீசான்யமெனத் தெளிந்துநீயே.

இ-ள். வாசல் காணவேண்டில் சூரியனாகில் கிழக்கு, சுக்கிரனாகில் அக்கினிமூலையாகும், செவ்வாயாகில் தெற்காகும், இராகுவாகில் நிருதி மூலையாகும், சனியாகில் மேற்கு, சந்திரனாகில் வாய்வுமூலையாகும், புதனாகில் வடக்கு, வியாழனாகில் ஈசான்னியமூலையாகும் என்று தெளி வாகச்சொல்வாய் எ-று. 85

நீயேகேள்உயிர்க்கொன்ப தோனுமதிசனியும்
நிலைத்துயிருக்காறினிலே யிருக்கஅஸ்த
மாயோகேளாரோனோ டுகந்திருக்க
மரணம்பிதாவுக்கு ராத்திரியிலென்னே
நோயேகேள்மதிகூடில் பகலிலேமரணம்
நுகருவாவுயிர்க்குசர ராசியிலேசூரியன்
தூயேகேளிருக்கில்பிள்ளை பிறந்தபோது
சொல்லுபிதாவூரி லிருக்கான்பாரே.

இ-ள். உயிர்க்கு 9-ஆமிடத்தோனும் சந்திரனுஞ் சனியும் இவர் கள் உயிர்க்கு 6-ஆமிடத்திலிருக்க, அல்லது 6-க்குடையவனோடு கூடி நிற்க, சாதகனுடைய பிதாவிற்கு மரணம். இராத்திரியில் சம்பவிக் கும் சந்திரன் கூடிநிற்கில் பகலில் மரணம் வாய்க்கும். உயிர்க்குச் சரவிராசியில் சூரியனிருக்கப் பிள்ளையானது பிறந்தபோது பிதா வானவன் ஊரிலிருக்கானென்பர் எ-று. 86

பாரையாதிரராசியில் ரவியிருந்தால்
பண்பென்னபிதாவூரி லிருப்பான்காணு
யாரையாவுபயராசி யானால்கேளு
அசலூர்க்குந்தன்னூர்க்கு மத்தியிலேயிருப்பான்
சீரையாயென்னைப்போல் சொல்வாரில்லைத்
திறமானவடநூலை யாராய்ந்துபார்த்து
நேரையாயான்சொன்னே னிந்தநூலை
நீடுலகோர்தான்கண்டால் காட்டிடாரே.

இ-ள். திரவிராசியில் சூரியனிருக்க, சாதகனுடைய பிதா ஊரி லிருப்பான். உபயவிராசியாகில் கேளும். அயலூருக்கும் தன் ஊருக் கும் மத்தியிலிருப்பன். சீராக என்னைப்போல் சொல்வோர்கள் யாரு மில்லை. திறமாகும். வடநூலை ஆராய்ந்துபார்த்து நேராக இந்தநூலை யான்சொன்னேன். நீடிய உலகத்தோர் காணில் காட்டார்கள் எ-று. ()

காட்டிடார்பலநூலும் பார்த்துத்தேர்ந்து
கணிதநிறைபிசகாமல் நன்றாய்ச்சொல்லு
நாட்டிடாய்நான்சொன்ன யிந்தநூலு
நலமானராமரருள் சாஸ்திரத்தோடு
மாட்டிடாயிதனைவைத்துப் பார்த்துச்சொல்லு
வாலைகிருபையாலுன் வாக்குபிசகாது
ஆட்டிடாயெதிரியுனக் குண்டோவையா
அரகராதர்மசாஸ்திரி நீதானாமே.

இ-ள். காட்டிடார்களாயினும் பல நூற்களையும் பார்த்துத் தேர்ந்து கணிதநிறை பிசகாமற்படிக்கு நன்றாகச்சொல்வாய். நான் சொன்ன இந்தநூலை இராமதேவர் அருளிய சாஸ்திரத்தோடு இதனை வைத்துப் பார்த்துச்சொல்வாய். வாலையினுடைய கிருபையால் வாக்கானது பிசகாது. உனக்கு எதிரியானவர்கள் யாருமில்லை. உலகத்தில் தருமசாஸ்திரி நீயேயாகுவாய் எனப் புகல்வார்கள் எ-று. 88

## சரம்திரவுபையம்

நீதானேகேளடாயென் மைந்தாமைந்தா
நிலைக்கசரம்திரம்வுபய ராசிதன்னை
போதானேமேடம் சரராசிமாடு
புகன்றிடவேதிரராசி மிதுனமுபயராசி
சீதரனேகடகம்சர ராசிசிங்கம்
திரராசிபெண்ணுபய ராசியாகும்
மீதானேகோலுசர ராசிகேளு
விளம்பவேதிரராசி வில்லுபயராசி.

இ-ள். கேட்பாயாக; சரம் திரம் உபயமாகிய ராசிகள் தன்னை யறியவேண்டில் மேஷம் சரவிராசியாகும், ரிஷபம் திரவிராசியாகும், மிதுனம் உபயவிராசியாகும், கடகம் சரவிராசியாகும், சிங்கம் திரவிராசியாகும், கன்னி உபயவிராசியாகும், துலாம் சரவிராசியாகும், விருச்சிகம் திரவிராசியாகும் எ-று. 89

## தாதுமூலசீவன்

வில்லானமகரஞ் சரராசிகும்பம்
மீதானதிரராசி மீனுபயராசி
வல்லானசூரியன்தா துக்கிரகமாகும்
வகையானசந்திரன்மூ லக்கிரகமாகும்
சொல்லாதசெவ்வாய்சீ வக்கிரகமாகும்
சுகமிருந்தபுதன்தா துக்கிரகமாகும்
கல்லானவியாழமூ லக்கிரகமாகும்
காரணமாம்புகர்சீ வக்கிரகமாமே.

இ-ள். மகரம் சரவிராசியாகும், கும்பம் திரவிராசியாகும், மீனம் உபயவிராசியாகும், தாதுக்கிரகம் காணவேண்டில் சூரியன் தாதுக்கிரகமாகும், சந்திரன் மூலக்கிரகமாகும், செவ்வாய் சீவக்கிரகமாகும், புதன் தாதுக்கிரகமாகும், வியாழன் மூலக்கிரகமாகும், சுக்கிரன் சீவக்கிரகமாகுமென்பர் எ-று. 90

கிரகமாஞ்சனி தாதுக் கிரகமாகும்
   கெளிராகமூலக்கிரகம் கேதுசீவக்கிரகம்
உரகமாங்குளிகன்மூல தாதுக்கிரகம்
   ஓகோகோவுயிர்கண்டன் சீவதாது
விரகமாமர்த்தப் பிரகரனஷ்டதாது
   விதிக்காலன்மூலதாது யிப்படிலக்கணமும்
கிரகமாஞ்சீவனி ராசிதேகமென்றே
   கண்டுதெளியின்னமுந் தான்கருதக்கேளே.

இ-ள். சனி தாதுக்கிரகமாகும், இராகு மூலக்கிரகமாகும், கேது சீவக்கிரகமாகும், குளிகன் மூலதாதுக்கிரகம், உயிர்கண்டன் சீவதாதுவாகும், அர்த்தப்பிரகரன் தாதுக்கிரகமாகும், விதிக்காலன் மூலதாதுவாகும். இப்படிக்கு இலக்கினமும் கிரகம் சீவன்ராசி தேகமெனக் கண்டு தெளிந்து இன்னமுங் கேளும் எ-று. 91

தருதவிரண்டாமிடமே வாக்குநேத்திரங்
   கழறுவேனுயிர்க்கிரண்டோ னுலோனுமப்பா
பொருதவேயிவ் விருவருக்கார்மேல்
   போயிருக்கமூன்றுராசிக் குள்ளேகேளு
விருதில்லாப்பலயீன மாயிருக்க
   விளங்கமைந்தன்பிறந்திடிலோ வூமையாவான்
பெருதாலக்கணத்தோ னுலில்வாழ
   பிரியமாய்நாலோனு முயிரில்வாழ.

இ-ள். 2-ஆமிடம் வாக்கு நேத்திரம் உயிர்க்கு 2-4-லி லோனும் இவ்விருவரும் 6-ஆமிடத்திலிருக்க, மூன்றுராசிக்குள்ளாகக் கேளும். பெலனில்லாதிருக்கச் சாதகமானவன் ஊமையாகவிருப்பன். இலக்கினுதிபதி 4-ஆமிடத்திலிருக்க 4-ஆமிடத்தோன் இலக்கினத்திலிருக்க எ-று. 92

மாளவேதந்தைக்கு பாக்கியமுண்டு
   வளருயிருக்குநாலோ னுயிர்கேந்திரமோ
நீளவேவியாழனல்லது புதனவனோடே
   நிகரிலாவித்வனென நிலைக்குஞ்சொன்னேன்
தாழவேயுயிர்க்காறுமேல் மூன்றுராசிக்குடையோர்
   தாங்கள்பெலயீனரென வித்தையில்லை
சூழவேயுயிர்க்குநாலில் செவ்வாய்நீக்கி
   துடியீனவாயிருக்க பகைவீட்டிலிருக்க.

இ-ள். மேற்கூறிய வண்ணமிருக்க சாதகனுடைய தந்தைக்கு பாக்கியமுண்டாகும். உயிர்க்கு 4-ஆமிடத்தோன் உயிர் கேந்திரமாக விருக்க வியாழன் அல்லது புதனவனோடுயிருக்க, நிகரில்லாத வித்தை யுடையவனாகும். உயிர்க்கு 6-ஆமிடத்திற்குமேல் மூன்றுராசிக்குடை யோர் பெலவீனராக விருக்கில் வித்தையானது அற்பமாகும். உயிர்க்கு 4-ஆம் வீட்டில் செவ்வாயிருந்து பெலயீனமாகப் பகைவீட்டி லிருக் கக்கேளும் எ-று. 93

வீட்டிலிருந்தவன் பகையோடேயிருக்க
மேவிபிறந்தவன்வீடு அனலாற்றீயும்
வாட்டிடவேதரித்திரமா மின்னங்கேளு
மகத்தானவுயிர்க்குமூன் றில்சூரியனேக
நீட்டும்வகைவிந்தைகேள் மூன்றுபடியமுது
நிமிஷத்தில்பொசிப்புண்டவ் வுயிர்க்குயேழில்
காட்டியதோரவியிருந்து பலயீனமாகக்
கருதுவதென்சித்தப்பிரமை பயித்தியமாமே.

இ-ள். மேற்கூறியவண்ணம் இருந்த கோள்பகையுடனிருக்க சாதகமானவனுடைய வீடு அனலால் வெந்துதீயும். தரித்திரமானது பெருகும். இன்னமுங் கேட்பாயாக. உயிர்க்கு 3-ஆமிடத்தில் சூரிய னிருக்க விந்தையானதைக்கேளும். மூன்றுபடியமுது ஒருநிமிஷத்தில் புசிப்பன். உயிர்க்கு 7-ஆமிடத்தில் சூரியனிருந்து பெலவீனமாகக் கருதுவது சித்தப்பிரமையும் பயித்தியமும் விளைவிக்குமென்பர். 94

பயித்தியமன்றியுயிர்க்கு பதினொன்றோனையா
பகரமாம்நாலாம்வீட் டினிலிருக்க
நயத்துடனேநாலோனு உயிரில்நிற்க
நலமாகசுபக்கிரகங்கள் கூடிநிற்க
யியற்றுவதேனிவன்றிசையில் பொசிப்பிலேதான்
நெடுப்படாபுதையதனை யெடுப்பான்காணு
பயங்தோடிரண்டினிலுடையோர் அவனுடனேராகு
பண்புத்தவ்விரண்டாம் வீட்டிலிருக்க.

இ-ள். உயிர்க்கு 11-ஆமிடத்தோன் 4-ஆமிடத்திலிருக்க 4-ஆ மிடத்தோன் உயிரில்நிற்க, அவருடன் சுபக்கிரகங்கள் கூடிநிற்க, இவ னுடைய திசைப்பொசிப்பில் சாதகன்பொதையல் எடுப்பான். 2-ஆ மிடத்திற் குடையவனோடு ராகுகூடி 2-ஆமிடத்திலிருக்க எ-று. 95

இருக்கவாறுவயதினிலே பல்லெல்லாம்போம்
இலக்கினத்துக்கிரண்டாமிடத்தினில் சூரியனிருக்க
யிருக்கவனென்னேரங் தானதர்ம
னிலையில்லையெரிப்புமுக னுவான்வாயில்
செருக்குடனேநல்வார்த்தை வாராதையா
செவ்வாய்நோக்கிடில் செல்வமதிகமாகும்

முருக்குடனேசனியிருந்தால் கள்ளனவன்
உகந்துரெண்டில்குருவிருந்தால் விரும்பிக்கேளே.

இ-ள். மேற்கூறியவாறு கிரகமிருக்க சாதகனுக்கு ஆறுவயதில் பல்லானது யாவும்போகும். இலக்கினத்திற்கு இரண்டாமிடத்தில் சூரியனிருக்க என்னேரமுந் தானதருமம் நிலையில்லாமலும் கோப முடைய முகத்தோனாகுவன். வாயில் நன்மையாகிய வாக்குவாராது. செவ்வாயால் பார்க்கப்படில் செலவானது அதிகப்படும். சனியிருக்கில் கள்ளனாகுவான். 2-ஆமிடத்தில் குருவிருக்க விருப்பமோடு கேளும்.

விரும்பியேஎப்போதும் தனலாபத்தோடே
விளங்குவான்பளிங்குநின்றால் ராஜசபையினிலே
திரும்பாதசிம்பம்போல் வித்துவானாகி
தொடுத்தகாரியம்செயம் பண்ணுவானே
பெரும்பதவிபுதனுக்கு மிப்படியேயாகும்
பிறைமதியுந்தானிருக்கப் பரஸ்திரீகளுடனே
கரும்பெனவேயெண்ணி யென்னேரமுங்கேளிக்கை
கேளிவிலாசமதாக யிருக்கயென்போன்.

இ-ள். எப்போதுந் தனவானாக விருப்பான். சுக்கிரன்நிற்கில் அரசர்களுடைய சபையில் சிம்பத்தைப்போல் வித்துவானாகி யாதொரு காரியங்களையும் செயம்பண்ணுவன். புதன் நிற்கினும் இப்பலனாகும். சந்திரனிருக்கில் பரஸ்திரீகளுடன் கரும்பைப்போல் பாவித்து யென் னேரமுங் கேளிக்கையானது செய்து கேளிவிலாசமாக இருக்கயென் போன். எ-று. 97

எண்ணமென்னமூன்றினிலே கதிரோன்நின்றால்
எப்போதும்ஜெனனமில்லா திருப்பான்காணு
வண்மையென்னகுஜன்நின்றால் துக்கமாவன்
வகையென்னசனிநின்றால் ஜெனப்பகையனவன்
தண்மையென்னராகுநின்றால் கிலேசமொடுதுன்பம்
தான்பெறுவனாகார போசனவானையா
உண்மையென்னசுபர்நின்று பெலத்தாராகில்
உகமையொடுபால்பழமு மறுசுவைபோசனமும்.

இ-ள். மூன்றாமிடத்தில் சூரியன் நிற்க சாதகன் எப்போதும் ஜெனனமில்லாமலிருப்பன். செவ்வாய்நிற்கில் துக்கப்படுகுவன். சனி நிற்கில் ஜெனனப்பகையாகுவன். இராகுநிற்கில் கிலேசமோடு துன்ப மனுபவிப்பன். ஆகாதபோசனவானாகும். சுபக்கிரகங்கள் நின்று பெலன்பெற்று இருக்கில் பால் பழம் இவைகளோடு அறுசுவைப் போசனம் பொசிப்பன் எ-று. 98

போசனமுந்தனசவுக்கிய வானுமாகி
புகழுடனேபிராமணபத்தி தேவபத்தியுடனே

பூசையோடுயர்ந்தவித்து வானுமாகி
 புகல்தான தர்மபல வுபகாரனுவான்
வாசனையாமுயிர்க்குநாலி லைவரும்போயிருக்க
 வாரென்னமூவாண்டில் பிறந்தவீடுபாழாம்
நாசன்மிவ்வரிலொருவர் பகைக்கவோராண்டில்
 நலித்துகுடிகெடுந்தீயால் மனைதன்சேதங்கள்.

இ-ள். போசனமும் தனசவுக்கியவானுமாகி, பிராமணபத்தி தேவபத்தியுடன் பூசைபுரிந்து, உயர்ந்தவித்துவானுகி, தானதரும பல உபகாரமுஞ் செய்குவன். உயிர்க்கு 4-ஆமிடத்தில் ஐவர்களும் ஏறி நிற்க சாதகன் பிறந்தவீடு மூன்றுவருஷத்தில் பாழாகப்போகும். இவர்களில் ஒருவர்பகைக்க ஒருவரிடத்தில் பகையாகும். நலிந்து குடியானது கெட்டு தீயினுல் மனைசேதமாகும் எ-று. 99

சேதங்கள்வருங்குளிக னவனிருந்தால்கேளாய்
 பிறப்பொடுபின்னொரு உப்பரியில்வாழ்வன்
பேதகங்களில்லாமல் சுபகரன்நின்றால்
 பெருமையொடுசவுக்கியனாய் நாற்கால்விருத்தியனாய்
கேதங்களற்றவனாய்தன தான்னியவானாய்
 கேழ்விமிகத்தான தர்மம் ஞானமுறைமையோனாக
வீதங்களோடுயிர்க்கு யேழில்பாவர்
 விளங்கியேழோனுடன் பாவர்கூடிமூன்றினிலே.

இ-ள். குளிகனெனவன் இருக்கக்கேளும் சாதகன் வேறொரு உப்பரியில் வாழ்குவன். சுபனிருக்கில் பெருமையும் நாற்கால்விருத்தியுடையவனாய் தனதான்னியவானாய் கேழ்வியுடையவனாய் தானதருமம் ஞானமுறையோனாக விருப்பன். உயிர்க்கு 7-ஆமிடத்தில் பாபர்களிருக்க 7-க்குடையோனுடன் பாபர்கள்கூடி மூன்றாமிடத்திலிருக்க எ-று.

ஏருமிடம்பகைவீடா இருக்கவையா
 என்னசொல்வேனொருக்காலுங் கலியாணமில்லை
வாகுடனேபிலத்துசுபக் கிரகமேநோக்க
 மணம்புரிவானல்லாதில்லை மைந்தனேகேள்
பாகமாமைந்தினிலே பாவர்வாழ
 போச்சுதையாபுத்திமந்தனாய் தேகத்தில்
சோகபலயீனனாய் துக்கமனகிலேசனுமாய்
 தோன்றவைக்கும்சுபக்கிரகங்க ளிருந்தாற்கேளே.

இ-ள். மேற்கூறியயிடம் பகைவீடாக இருக்கச் சாதகனுக்கு ஒருக்காலுங் கலியாண மாவதில்லையாம். பலன்பெற்றுச் சுபக்கிரகங்கள் நோக்க மணம்புரிவான் அல்லது இல்லையாம். 5-ஆமிடத்தில் பாபர்கள்வாழ்க புத்தியானது மந்தனாகியும் தேகத்தில் சோகமும் பலயீனமுமாய் துக்கமுடைய மனக்கிலேசனுமாகத் தோன்றவைக்கும் சுபக்கிரகங்கள் இருந்தால் கேளும் எ-று. 101

கேளப்பாஆதாயம் விடாமல்வாய்க்கும்
கெம்பீரனாய்தந்தை யுறவோருடனே
நாளய்யாபுத்திரகளத் திரத்தோனாகி
ராஜபிரீதியுடனே இருப்பான்மிக்க
நீளய்யாயுயிர்க்கோன் பதாமிடத்தோன்
நிலையுடனேநான்காவ திடத்திருக்க
மாளய்யாயெட்டோனும் மூன்றிலேக
வகையுடனேயல்லதெட்டான் பத்திலேக.

இ-ள். ஆதாயங்கள் வாய்க்கும் கெம்பீரனாக தந்தைக்கு உற வோருடனே புத்திரகளத்திரத்தோனாகி இராஜபிரீதி யுடையவனாகி யிருப்பான். உயிர்க்கு 9-ஆமிடத்தோன் 3-ஆமிடத்திலிருக்க 8-ஆமி டத்தோன் மூன்றாமிடத்திலிருக்க அல்லது 8-ஆமிடத்தோன் 10-ஆமிடத்திலிருக்க எ-று. 102

பத்திலேகிடவவனுஞ் சூதுள்ளோனாய்
பதுங்கிகன்னமிடுவனுமாய் பலர்தூஷிக்க
நெத்தியிலெழுத்தின்படி யிருபதாம்வயதில்
நிலையில்லாதாதுஷ்ட னாகிப்போவான்
வித்திலேயுயிர்கெட்டி நடுவேநீச்ச
விவேகியரிருக்கபனி ரெண்டில்புத்தி
முத்திலேவீற்றிருக்க யோர்வித்தையில்லா
மூடனாயிருப்பனிருபத் தெட்டாம்வயதில்.

இ-ள். பத்தாமிடத்தில் ஏகிடச் சாதகன் சூதுள்ளவனாகியும் பதுங்கி கன்னமிடுகுவானாய்ப் பலரும் தூஷிக்க தலையெழுத்தின்படி இருபதாம் வயதில் தாதுநஷ்டனாகிப் போகுவன். உயிர்க்கு 8-ஆமிடத் திற்கு நடுவில் நீச்சவிவேகியரிருக்க 12-ஆமிடத்தில் புதன் வீற் றிருக்க ஒரு வித்தையுமில்லாத மூடனாக விருப்பான். இருபத்தெட் டாம்வயதிற் கேளும் எ-று. 103

வயதிலேமரணம்வரும் லக்கினகேந்திரங்களிலே
வகையாகசுபரிருக்க வுயிரில்பாவரிருக்க
நயதிலேபகர்ந்திடினும் விபசாரிபெற்ற
நங்கையரைமணம்புரிவன் நல்லுயிருகெட்டி
நியதினிலேகுழனிருக்க ரெண்டினிலேசனியும்
நீயரிவொன்பதில்ராகு விருக்கப்பனிரெண்டில்
குயதிசந்திரனிருக்க சாதகனுமையா
கூடியேபகலில்ஸ்திரீ போகமதேசெய்வான்.

இ-ள். மேற்கண்டவயதில் மரணம் சம்பவிக்கும். இலக்கின கேந் திரங்களில் சுபக்கிரகங்களிருக்க உயிரில் பாபர்களிருக்கப் பார்த்த சாத கன் விபசாரிபெற்ற நங்கையரை மணமானது புரிகுவன். உயிர்க்கு 8-ஆமிடத்தில் செவ்வாயிருக்க 2-ஆமிடத்தில் சனியிருக்க 9-ஆமிடத்

தில் இராகுவிருக்க 12-ஆமிடத்தில் சந்திரனிருக்கச் சாதகமானவன் கூடிப்பகலில் ஸ்திரீபோகஞ் செய்குவன் எ-று. 104

செய்வானேவுயிர்க்குபத்தா மிடத்தில்சுக்கிரன்
சேர்ந்தெட்டிலொன்பதிற் சந்திரனிருக்க
மைவானேபகலில்மை தானஞ்செய்வான்
மன்னுமாசாரமில்லான் முகவாடையுடுப்பான்
வைவாவேன்லக்கினத்தில் சனியிருக்க
மைந்தனேஅஷ்டமத்தில் ராகிருக்க
கயவானேன்பார்க்கப் பொன்னில்வெள்ளிருக்க
கலிதேய்பிறையாயிருக்க நவிலக்கேளே.

இ-ள். உயிர்க்குப் பத்தாமிடத்தில் சுக்கிரனிருக்க 8-9-ல் சந்திரனிருக்க சாதகன் பகலில் மைதானஞ் செய்குவன். ஆசாரமில்லாதவன் முக்காடுபோட்டுத் திரிகுவான். இலக்கினத்தில் சனியிருக்க 8-ஆமிடத்தில் இராகுவிருக்க பார்க்க பொன்னில் வெள்ளியிருக்க தேய்பிறைச் சந்திரனை நவிலக்கேளும் எ-று. 105

நவில்வதென்னகையோர்கால் வாங்கிதுக்கம்
நாடிடுவானுயிராடு தேளதாக
கவியவேஅதில்செவ்வா யிருக்கவல்லதுகேள்
கடுகிசொந்தஅங்கிஷத்தி லிருக்கவவனோடே
சனியிரவியனுங்கூடி தேய்பிறையாயிருக்க
சுகவுயிரில்கரும்பாம்பு யிருக்கப்பார்க்க
அலியவேயவன்திசையி னுடல்பிளந்து
அழிவுபடுவானுயிரினிலே ரவிமதியுமிருக்க.

இ-ள். நவில்வது யாதெனில் சாதகனை கையோர் கால்வாங்கி துக்கப்படுகுவான். இலக்கினம் விருச்சிகராசியாக அதில் செவ்வாய் இருக்க அல்லது சொந்த அங்கிசத்திலிருக்க அவரோடு சூரியனுஞ் சந்திரனுங் கூடியிருக்க தேய்பிறையாக உயிரில் கரும்பாம்பு யிருக்கப் பார்க்க அவன்றிசையில் உடலானது பிளந்து அழிவுண்டுப் போகுவான். உயிரில் சூரியன் சந்திரன் யிருக்கக்கேளும் எ-று. 106

இருக்கவவருடன்பகைவன் ராகுகூட
யென்னசொல்வேன்சிவசிவா வல்லதுஅம்மூவர்
உருக்கவேயோராசியில் வந்திருக்க
ஓகோகோயுயிரில்சனி யுகந்திருக்க
வருக்கவேதேய்பிறைய தாகவையோ
மமைந்திருக்கத்தலை வெட்டுண்டோபோகும்
பெருக்கவேபுயிர்க்கும்ப மாயிருக்க
பேர்ந்துரெண்டில் மூணில்புதனிருக்கநீச்சம்.

இ-ள். இருக்க அவருடன் பகைவரும் இராகுவுங்கூட யென்னென்றுசொல்குவேன். அல்லது அம்மூவர்களும் ஒரு இராசியிலிருக்க

உயிரில் சனியிருக்க தேய்பிறைச் சந்திரனாக அமர்ந்திருக்கச் சாதக னுடைய தலை வெட்டுண்டுபோகும். உயிர் கும்ப இராசியாக யிருக்க 2-3-ல் புதனிருக்க நீச்சமாக எ-று. 107

நீச்சனாகிலுமவனோ டிராகுகேது
நிலைத்திருவரொருவரவ னுடனேகூட
ஏச்சினால்பார்க்கப்பிறந் தோனுமையா
யிகழ்ச்சிபடனொண்டியா யாவானையா
பேச்சினால்வருவதுண்டோ விந்தநூலே
பேய்மக்காள்கண்டுதெளிந் துறத்துநில்லு
வீச்சினாலாவதுண்டோ கிரணந்தன்னை
விளம்புவேன்வெளியாக விளம்புவேனே.

இ-ள். நீச்சனாகினும் அவனுடன் இராகு கேது இவர்களிருவரில் ஒருவர் அவனுடன் கூடப் பார்க்கச் சாதகமானவன் யாவரும் இகழ்ச்சி யாகப்பேச மொண்டியாகுவன். பேச்சியினால்வாராது இந்தநூல் பேய்போலலையாமல் கண்டுதெளிந்து உறத்துநிற்பாய். வீச்சினால் யாதும் ஆவதொன்றில்லை. கிராணந்தன்னை விளம்புகிறேன் வெளி யாகவும் எ-று. 108

வெளியாகவந்தந்த மாதந்தன்னில்
வீணல்லராகுகேது யெந்தராசியிலே
பளியாயிருக்கின்றனரோ வதற்குச்சூரியன்
பாங்கெந்தராசி நின்றனோவதற்கு
வளியாகபதினைந்தாம் நட்சத்திரந்தான்
மைந்தனேகிரணமென வறிந்துக்கொள்ளு
ஒளியவேராத்திரி பௌர்ணமிசந்திரன்
உகந்துபார்சந்திரனுங் கிராணமுண்டே.

இ-ள். வெளியாகும்படி அந்தந்த மாதங்களில் இராகு கேது இவர்கள் யெந்தராசியில் இருக்கின்றார்களோ அதில் சூரியன் யெந்த இராசியில் நின்றாரோ அதற்குப் பதினைந்தாம் நட்சத்திரம் கிரண மென்று அறிந்துகொள்கவும். இராத்திரி பௌர்ணமி சந்திரன் தன் னைப் பார்க்க சந்திரகிராண முண்டாமென்பர் எ-று. 109

உண்டையாமக்கிரகணம் பிடித்தபதினைந்தா
முதிநட்சத்திரத்தில் அமாவாசியேகழிந்த
பண்டையாமைந்தாளள் அமாவாசிமிச்சத்தில்
பகலவன்கிரகணமெனவே பணிந்துபாரு
கண்டையாமாத நட்சத்திரமேகேளு
கருதுவேன்சித்திரை விசாகமாதிரையும்
அண்டைவாஅசுபதி மூலவோணம்
அதிதகார்த்திகைபூசம் வகமுமுத்திரம்.

இ-ள். அக்கிரகணம் பிடித்த பதினைந்தாம் நாள் உதிக்கும் நட்சத்திரத்தில் அமாவாசியை கழிந்த பத்தாம்நாள் அமாவாசியை மிச்சத்தில் சூரியனுடைய கிரணமெனப் பணிந்துப்பாரும். மாதநட்சத்திரத்தைக் கேளும். சித்திரை விசாகம் திருவாதிரை அசுபதி மூலம் திருவோணம் கார்த்திகை பூசம் மகம் உத்திரம் எ-று. 110

உத்திரமாமின்னாட்கு பதினோராம்நட்சத்திரம்
உகந்துபார்மாதநட்சத் திரமதாகும்
பத்திரமுயிருக்குங் கேந்திரங்களிலேயான்
பகரைந்தாமிடத்தினிலே யொன்பதிலாவதுகேள்
மித்திகமாமுயிரோனும் வீற்றிருக்க
மேலானஒன்பதோனும் பரமோட்சனாகை
அத்திரமாமுயிரோனும் பலத்திருக்க
அதிதலட்சுமியோக கனவானாமே.

இ-ள். உத்திர நட்சத்திரமிருந்த நாட்குப் பதினோராம் நட்சத்திரம் பார்க்க மாதநட்சத்திரமாகும். உயிர்க்குக் கேந்திரங்களிலேயாகினும், 5-ஆமிடம் 9-ஆமிடம் இவைகளில் கேளும். உயிர்க்குடையோன் வீற்றிருக்க 9-ஆமிடத்தோன் பரமோட்சனாகை, உயிரோன் பெலவானாகவிருக்க லட்சுமியோக கனவானாவன் எ-று. 111

கனமானவுயிர்க்குமெட்டா மிடத்தோனப்பா
கதித்துவோர்ராசியினி லிருக்கவவனுடனே
யினமாகச்செவ்வாயுங் கூடிநின்றால்
யென்னசொல்வேனொருநாளு மெங்குந்தங்கா
மனமாகிதேசாந்திரந் திரிகுவானுயிர்க்கு
மன்னவனும்கேந்திர மேறிநிற்க
தனமாகமூன்றுவ திடத்திற்செவ்வாய்
தாண்பிலாச்சகோதரமுண்டு சத்தினுமாமே.

இ-ள். உயிர்க்கு 8-ஆமிடத்தோன் ஒருராசியிலிருக்க அவருடன் செவ்வாய்கூடிநிற்கச் சாதகமானவன் ஒருநாளும் எங்கேனுந் தங்காமல் மனமானது வெறுத்து தேசாந்திரந் திரிகுவன். உயிர்க்கு வியாழன் கேந்திரமேறிநிற்க 2-ஆமிடம் 3-ஆமிடத்தில் செவ்வாய் நிற்க பெலவானாக சகோதரமுண்டாம் எ-று. 112

ஆமேமூன்றுமிடத்திற் பெலமீனமாகி
அசடாம்ராகுக்கேதுக்க ளுடனேகூடிற்
றுமேதானிருக்க வீரியமில்லாமல்
தாதுநட்டமாயிருக்கும் உயிர்க்காறேனும்
நாமேகேள்மூன்றேனும் ஒருராசியிலேறி
நல்லுறவுயில்லாமற் பகையோடேகூடில்

ஓமேயிந்திரசால மகேந்திரசாலம்
ஓகோகோவவனுக்கே பலிதமாமே.

இ-ள். 3-ஆமிடத்தில் பெலஹீனமாகி இராகு கேதுக்களுடன் கூடினும் தாமேயிருக்கினும் சாதகனுக்கு வீரியவிர்த்தி யில்லாமல் தாது நஷ்டமாகும். உயிர்க்கு 6-ஆமிடத்தோன் 3-ஆமிடத்தோனும் ஒரு ராசியிலேறி உறவில்லாமல் பகையுடன்கூட இந்திரசாலம் மயேந் திரசாலம் இவன்தனக்குப் பலிதமாகி வாழ்குவான் எ-று. 113

பலிக்கவுயிர்க்குத்தசத்தோ னுலோன்வோர்ராசியில்
பாங்குடனேதாமிருக்க வவனுடனேமைந்தா
கெலிக்கச்சந்திரனல்லது சுக்கிரனுவிருக்க
கேள்மகனேஅந்தவீடு நட்பாட்சியாக
வனுக்கவேஅதிகவித்தை கற்றுமருத்துவனும்
மாற்றசித்தனெனவொருவர் கண்களிலேகாணுன்
சொலிக்கவேவுயிரோனும் நாலோனுங்கூடி
சுகமுடனேஒன்பதிலே பிலத்திருக்க.

இ-ள். உயிர்க்கு தசத்தோன் 4-ஆமிடத்தோன் ஒரு இராசியி லிருக்க, அவருடன் சந்திரன் அல்லது சுக்கிரனிருக்க, அந்தவீடு நட் பாட்சியாகவிருக்க, வலிவுபெற சாதகன் அதிக வித்தையானது கற்று மருடத்துவமுடையவனுகி சித்தனென ஒருவருடைய கண்களிலேயுங் காணுன். உயிரோனும் 4-க்குடையோனுங்கூடி 9-ஆமிடத்தில் பெலன் பெற்றிருக்க எ-று. 114

பிலத்திருக்கவவரைப்புத னல்லதுவியாழம்
பெருமையுடன்பார்க்க வன்றிக்கூடியிருக்க
வனுத்தபாதாள அஞ்சனவித்தைகற்பான்
மகிழுயிர்க்குநாலோனும் ராசியோனும்
சொலித்துபத்தினிலிருக்க மதிபார்க்கவல்லால்
சுகமுடனேகூடியிருக்க ஆகரணங்கோகரணம்
தலத்துடனேபலிதமின்னம் நவிலக்கேளு
ரெண்டுக்குடையோனும் நாலுக்குடையோனும்.

இ-ள். மேற்கூறியவண்ணம் பெலன்பெற்றிருக்க அவரைப் புதன் அல்லது வியாழன் இவர்கள் பார்க்கக் கூடியிருக்கச் சாதகன் பாதாள அஞ்சனவித்தை கற்பன். உயிர்க்கு நாலாமிடத்தோனும் இராசியாதிபதியும் 10-ஆமிடத்திலிருக்க சந்திரனுல் பார்க்கப்பட அல்லது கூடியிருக்க ஆகரணம் கோகரணம் பதமுண்டாகும். இன்ன முங் கேட்பாயாக 2-க்குடையோனும் 4-க்குடையோனும் எ-று. 115

உடையவர்கள்நட்பாட்சி ராசியிலேயிருக்க
உகந்துபுதன்பார்க்கவல்லது சேர்ந்திருக்க

20

நடமாடுஞ்சிவனருளும் அரிதாச
நாதாந்தமவுனரிஷி யருளினாலும்
குடதிசையோனருளாலும் கோபாலன்தன்
குலாசலத்தின்மூலிகையும் மந்திரமுங்கற்று
திடமவனுக்கேசொன்ன ரசவாதமற்றும்
தேடியவன்கைக்கூடுஞ் சொன்னேன்பிசகிலேயே.

இ-ள். மேற்கண்ட கிரகங்கள் நட்பாட்சியாகிய இராசியிலிருக்க அவரைப் புதனால் பார்க்கப்பட அல்லது சேர்ந்திருக்கச் சாதகமான வன் சிவனருள்பெற்றும் தாசர்கள் கிருபையும் மவுனரிஷிகளின் அருளும் குடதிசையோனருளினாலும் கோமானுடைய குலாசலத்தின் மூலிகையும் மந்திரங்களுங் கற்று அவன் தனக்குச் சொன்ன ரசவாத மற்று கைகூடும் சொன்னேன். பிசகானது இராது எ-று. 116

இல்லையவருடன்பானுகூடி யிருக்கவையா
யிணையில்லாவுத்தம தேவதைபூசிப்பான்
நல்லதவருடன்ராகு கூடியிருக்க
நாரணனோடரன்பூசை புரிந்துதெரிசிப்பான்
தொல்லையில்லைசெவ்வாய்க்குக் குட்டிச்சாத்திவித்தை
செய்வனடாசனிகூடில் பில்லிசூனியவித்தை
அல்லதவருடன்கேது குளிகநேரிடினும்
அப்பனேயேவல் வஞ்சனைகள்கற்பான்.

இ-ள். மேற்சொன்ன கிரகத்துடன் சூரியன் கூடியிருக்கச் சாதகன் உத்தமதேவதைகளைப் பூசிப்பன். இராகு கூடியிருக்க நாராயணனோடு அரன்பூசையும் புரிகுவன். செவ்வாய் கூடியிருக்கக் குட்டிச் சாத்தான் வித்தைகற்பன். சனி கூடியிருக்கில் பில்லி சூனியவித்தை கற்பன். கேதுவுங் குளிகனுங் கூடியிருக்கில் ஏவல் வஞ்சனைகள் கற்பன் எ-று. 117

கற்பனையேயின்னங்கேள் நாலுக்குடையோனுங்
கதித்திரண்டோன்ராசியிலிருக்க வவனுடனேசுக்கிரன்
மெய்ப்பெறகூடியேயிருக்க வல்லதுநற்சந்திரன்
மேவியேதானிருக்க யிவன்செய்கைமேலாம்
சொற்பெறவேவசியவித்தை கற்பானீஸ்பரியைத்
தெரிசனஞ்செய்துதேர்வான் சர்வமவனதுவே
விற்பெருமுயிரோனு மிராசிக்குடையோனும்
வேதாந்தபத்துக்குடை யோனுங்கூடி.

இ-ள். கற்பனையாக இன்னமுங் கேட்பாயாக. 4-க்குடையோனும் 2-ஆமிடத்தோன் இராசியிலிருக்க அவருடன் சுக்கிரன் கூடியிருக்க அல்லது சந்திரனிருக்க சாதகனுடைய செய்கை மேலாகும். வசிய வித்தைகள் கற்பான். ஈஸ்பரியைத் தெரிசனஞ்செய்து தேர்

வான். சர்வத்திற்கு மவனுகவிருப்பன். உயிரோனும் அந்த இராசிக்குடையோனும் 10-க்குடையோனுங் கூடி எ-று. 118

கூடியேயோர்ராசியி லிருக்கவையா
 கூறுவேன்சித்தனுவன் றிசையில்லாமல்
நாடியேவெகுகாலம் மிறவாமல்முத்தி
 நாதனெனப்பெற்றிருப்பான் நன்மைதானே
நீடியேயுயிரோனு மெட்டோனொருராசியில்
 நிற்கவவருடன்செவ்வா யிருக்கப்பார்க்க
வாடியவன்வீடு பகைவீடாயிருக்க
 மனுஷரைக்கொல்லுகிற வித்தைகற்பான்பாரே.

இ-ள். மேற்கண்ட கோட்கள்கூடி ஒருராசியிலிருக்க சாதகமானவன் சித்தனுகும். திசையில்லாமல் வெகுகாலம் இறவாமல் முத்திநாதனெனப் பெயர் பெற்றிருப்பான். உயிர்க்குடையோனும் 8-ஆமிடத்தோனும்கூடி ஒரு இராசியிலிருக்க அவருடன் செவ்வாய் கூடப்பார்க்க அவர்கள் நின்ற இராசி பகையாகவிருக்க மனுஷரைக் கொல்லும்படியான வித்தை கற்பன் எ-று. 119

பாரேயிராசிக்கு நாலோனேழோன்
 பண்புடனேயோரிடத்தில் யிருக்கவவர்சுபராய்
தேரேயல்லதுபார்க்க பில்லிசூனியவைப்பு
 நிலையுடனேயெடுத்தெறிய வல்லவனுவான்
கூறேகேள்உயிர்க்குநாலு மைந்தாமிடத்தோனுங்
 கூடியோரிடத்திருக்க வவர்களோடே
சேரவேயவன்நட்சத்திர மிருபத்திரண்டாம்நட்சத்திரந்
 தினத்துக்குடையோனுஞ்சென்று கூடினலே.

இ-ள். இராசிக்கு 4-ஆமிடத்தோன் 7-ஆமிடத்தோன் இவர்கள் ஒரு ராசியிலிருக்க அவர்கள் சுபர்களாக அல்லது பார்க்கச் சாதகமானவன் பில்லி சூனியம் வைப்பு இவைகளை எடுத்தெறிய வல்லவனுகுவன். உயிர்க்கு 4-க்குடையோனும் 5-ஆமிடத்தோனும்கூடி ஒரு ராசியிலிருக்க அவருடன் சேர அவன் நட்சத்திரத்திற்கு இருபத்திரெண்டாம் நட்சத்திரம் தினத்திற்குடையோனும் சென்று கூடினல் கேளும்.

சென்றிடவாகாயச்சக்கர மந்திரசக்கரமென்று
 செப்புவார்அதின்பலன்கே ளாகாயத்திலேயும்
நன்றுதருங்கோ புரத்திலேயுங்கம்பம்
 நாட்டியேயாடும்வித்தை யவனுலாகும்
அன்றினிலேயுயிர்க்கிரண்டோ னிராசிக்கிரண்டோனும்
 மருவியேழாமிடத்திருக்க விபரங்கேளு
என்றுபலவித்தையுள்ள வேஷங்கட்டி
 யெழிலாகவாடுவ னின்னங்கேளே.

இ-ள். மேற்கண்டபடி சென்றிட ஆகாயச்சக்கரம் மந்திரசக்கரம் என்று சொல்லுவார்கள். அதின்பலன் கேட்பாயாக. ஆகாயத்திலேயும் கோபுரத்திலேயும் கம்பமானது நாட்டி யாடும்படியான வித்தை யானது சாதகனால் ஆகும். உயிர்க்கு 2-க்குடையோனும் இராசிக்கு ரெண்டோனும் 7-ஆமிடத்திலிருக்க அதின் விபரங்கேளும். பலவித வித்தைகளுள்ள வேஷங்கள் கட்டி யாவரும் மகிழும்படியாக ஆடுவன். இன்னமுங் கேளும் எ-று. 121

இன்னமுமேஆறானோ ரிடத்திருக்க
யேகிசெவ்வாய்கூடியிருக்கப் பார்க்கவந்த
அன்னியமாம்வீடுபகை யாயிருக்க
அனுதினமுங்கோள்சொல்லிக் குடிகெடுப்பான்
நன்னுமந்தவீடுபகை யில்லாவிட்டால்
நவிலுவனேசாதகன் குணமாய்க்கோள்கள்
என்னவினியுயிர்க்கிரண்டோன் ராசிக்கிரண்டோனும்
யேகியோரிடத்திருக்க வவருடனேயையா.

இ-ள். ஆறாமிடத்தோன் ஒரு இராசியிலிருக்க அவருடன் செவ்வாய் கூடப்பார்க்க அவர்கள் நின்ற வீடு பகைவீடாக விருக்கச் சாதகமானவன் அனுதினமும் கோட்கள்சொல்லிக் குடியைக் கெடுப்பான். அந்தவீடு பகையில்லாவிட்டால் சொல்குவன் சாதாரணமாகக் கோட்கள் உயிர்க்கு 2-ஆமிடத்தோனும் இராசிக்கு 2-ஆமிடத்தோனும் கூடி ஒரு இராசியிலிருக்க அவருடன் கேளும் எ-று. 122

ஐயாகேளிராகுகே துவுமிருக்க
அல்லதுபார்த்திடயெமகண் டனுமேகூட
மெய்யாகேள்விகடகவி வேஷதாரி
வீண்வாய்ப்பிரசிங்கியெனப் பேர்கொள்வான்பார்
பொய்யாதநெறியாளன் சொல்லுகைக்குப்
புகழுடனேவுபயகிர கங்கள்கேளு
நய்யாதநாயிற்றுக்கிழமை வுதித்தயிருபத்து
நல்லரெண்டரைநாழி கைக்குமேலே.

இ-ள். மேற்கண்ட கோட்களுடன் இராகு கேதுகள் கூடியிருக்க அல்லது பார்க்க எமகண்டன்கூடச் சாதகன் விகடகவி பாடுவன். வேஷதாரியாகி வீண்பிரசங்கியெனப் பேரானது கொள்வன். பொய் சொல்லாத நெறியுடையவன், சொல்லுதற்கு உபய கிரகங்கள் கேளும். ஞாயிற்றுக்கிழமை யுதித்த 22½-நாழிகைக்குமேல் எ-று. 123

## குளிகாதிகள் சாரம்

மேலேமூன்றேமுக்காலாக யிருபத்தியாறு
மேலுங்கால்நாழியி லெந்தலக்கினமோ
சீலமொடுவதில்குளிக னிருப்பானையா
தினந்தினஞ்செல்தேதிக்கு லக்கினத்தில்சென்ற

காலநாழிகைபோக மற்றநாழி
  கண்டுதையமுதலாக வெண்ணிக்கொண்டு
சாலயிருபத்தாறுநாழிகை யளவிலெந்தத்
  தகுதிலக்கனம்வருதோ அந்தலக்கினத்தில்.

இ-ள். மேற்கண்ட நாழிகையின்மேல் 3¾-ஆக இருபத்தியாறே கால் நாழிகையில் எந்த லக்கினமோ அந்த லக்கினத்தில் குளிகனிருப்பான். தினம்தினம் செல்லுகின்ற தேதிக்கு இலக்கினத்தில் சென்ற கால்நாழிகைபோக மற்ற நாழிகையைக்கண்டு உதையம் முதலாக எண்ணிக்கொண்டு இருபத்தாறுநாழிகையளவில் எந்தலக்கினம் வருதோ அந்த லக்கினத்தில் எ-று. 124

அந்தலக்கினத்திலே குளிகனிருப்பான்பார்
  அந்தலக்கினத்தேழா மிடலக்கினத்தில்
விந்தையுடன்குளிக னிருப்பான்கேள்
  இன்னமவன்விளங்குமந்தஆதிவா ரத்தில்தானே
சிந்தையுறயுதித்தபதி னைந்துநாழிகையின்மேல்
  செப்புவேன்பதினெட்டு மூன்றேமுக்கால்
வந்தநாழிகையளவி லெந்தலக்கினமோ
  வகுத்துப்பாரதிலேயெம கண்டனிருப்பானே.

இ-ள். மேற்கண்ட லக்கினத்தில் குளிகனிருப்பான். அந்த லக்கினத்திற்கு 7-ஆமிட லக்கினத்தில் குளிகனிருப்பான். இன்னமும் அவன் விளங்கிய ஆதிவாரத்தில் உதையமாகி 15-நாழிகையின்மேல் 18-ம் 3¾-லும் வந்த நாழிகையளவில் எந்தலக்கினம் ஓட்டுகின்றதோ அதை வகுத்துப்பார்க்க அதில் எமகண்டனிருப்பான் எ-று. 125

இருப்பானேமுன்சொன்ன வகையைப்போலே
  யென்மகனேதேதிபார்த்துச் சொல்லுநீயே
வெருப்பானேநாயருதித்த பதினோர்கால்நாழி
  மேல்மூன்றேமுக்காலாகப் பதினைந்துக்குள்
விரிப்பானேன்வரும் லக்கினத்தில்பாரு
  விடத்திருப்பானதிலந்தம் பிரகாரந்தான்
மருப்பான நாயருக்குதித்து
  வரும்யிருபத்தாறேகால் நாழிகையதின்மேல்.

இ-ள். இருப்பதற்கு முன்சொன்ன வகையைப்போல் தேதிகளைப் பார்த்து சொல்கவேண்டும். ஞாயிற்றுக்கிழமையுதித்த 11¼-நாழிகைக்குமேல் 3¼-ஆகப் பதினைந்துக்குள் வரும் இலக்கனத்தைப் பார்க்க அதில் பிரகாரன் வீற்றிருப்பான். ஞாயறுக்கு உதித்துவரும் 26¼-நாழிகைக்குமேலும் கேட்பாயாகவும் எ-று. 126

மேலென்னமூன்றே முக்காலாகமுப்பதுநாழிகையில்
 மேவிவரும்லக்கினத்தில் காலனுதிப்பான்காண்
மாலென்னயிதற்கெல்லா மவரவரிருக்குமா
 லக்கினத்துக்கேற்ற லக்கினமேவருதோ
ஆலென்னவந்தலக்கினத்தி லுறுவினிலே
 அப்பனேகுளிகனைப்போ லனைவருமிருப்பார்
காலென்னஆகயேழு வாரத்துக்கும்
 கண்டுகொள்ளிவர்களிருப் பிடத்தைத்தானே.

இ-ள். மேற்கண்டநாழிகை 3¾-ஆக 30-நாழிகையில்வரும் லக்கினத்தில் காலன் உதையமாக விருப்பான். இவைகளுக்கெல்லாம் அவரவர்களிருக்கும் இலக்கினத்திற்கேற்ற லக்கினம் எதுவருகின்றதோ அந்த லக்கினத்தில் இரவில் குளிகனைப்போல் அனைவருமிருப்பார்கள். ஏழுவாரத்திற்கும் கண்டுகொள்வாய் இவர்கள் இருப்பிடத்தை எ-று.

தானென்றமேஷமுதல் மீனமீறாய்
 தான்சென்றநாழிகையும் பார்த்துக்கொள்ளு
மானென்றவந்தந்த மாதத்துக்கு
 மைந்தனேவிசேஷமாய் சித்திரைக்குயென்றும்
கோனென்றுகூட்டவே தேவையில்லை
 கூறும்வைகாசிமுதல் யெத்தனையாந்தேதி
ஆனென்றுவைக்கவேணுமோ வந்தத்தேதி
 அமர்த்திக்கீழேசென்ற மாதத்தைக்கூட்டே.

இ-ள். மேஷவிராசி முதலாக மீனம் வரைக்கும் சென்றநாழிகையைப் பார்த்துக்கொண்டு அந்தந்த மாதத்திற்கு விசேஷமாக சித்திரைக்கு ஒன்றும் கூட்டவேண்டியதில்லை சொல்லும்படியாகிய வைகாசி முதல் எத்தனையாந்தேதியோ அந்தத் தேதியைவைத்துக் கீழ்சென்ற மாதத்தைக் கூட்டுவாய் எ-று. 128

## தூமாதி கிரகசாரம்

கூட்டியதுவுடனேயும் நாலுகூட்டி
 குணமாகக்கீழ்தேதி பதின்மூன்றுங்கூட்டிமேலே
பேட்டியெத்தனை போகக்கீழே
 பிறந்துவந்தராசியினில் தூமனிருந்திடுவான்
ஒட்டியந்ததேதியிலே முப்பதானால்
 ஓகோகோராசி பார்த்துச்சொல்லு
ஆட்டியெத்தனைராசி கண்டதுவோவதனை
 அப்பனேகழித்துநின்ற ராசிதனையெத்தி.

இ-ள். மேற்கண்டபடிகூட்டி அத்துடன் நாலுங்கூட்டி கீழ்தேதி பதின்மூன்றுங்கூட்டி மேலும் எத்தனை யிராசிபோகக் கீழும் பிறந்த இராசியினில் தூமனிருப்பான். ஒட்டியவதில் 30-ஆகில் இராசியை

எத்திப்பார்த்துச் சொல்லவும். எத்தனை ராசிகண்டதோ அதனைக் கழித்து நின்றயிராசி அதனையேத்திக்கேளும் எ-று. 129

ஏத்தியெத்தனைகண்டதோ அதிலோர்ராசி
யெடுக்கிலதுமுப்பதா யிருக்குங்கீழே
போத்திஎத்தனைதேதி யிருந்ததோவந்ததேதி
புகழுடனேமுப்பதிலே தள்ளிப்போட்டு
மாத்திநின்றதேதியை வைக்கமேலே
வகையுடனேயெத்தனைராசி போச்சோவதைப்
பார்த்துநீக்கிகீழெத்தெனை தேதியிருந்ததுவோ
பகர்ந்தராசியினில் பாகனிருப்பானே.

இ-ள். மேற்சொன்னபடி ஏத்தியதில் எத்தனைகண்டதோ அதில் ஒரு இராசியெடுக்க அது 30-ஆகவிருக்கும் கீழ் எத்தனைத் தேதியிருந்ததோ அந்த தேதியை 30-ல் தள்ளிப்போட்டும் மாத்திநின்ற தேதியைவைக்க மேல் எத்தனை இராசிப்போச்சுதோ அதைப் பார்த்து நீக்கிக் கீழ் எத்தனை தேதியிருந்ததோ அந்த இராசியில் பாகனிருப்பான் எ-று. 130

இருப்பானேமேல்ராசி யோடேகூட
எத்தனைராசிகண்டதோ வதைநீக்கிவிட்டு
பொருப்பாகக்கீழ்நின்ற ராசிசரபனிருப்பான்
புகழ்கீழ்த்தேதியினிலே பதினேழுகூட
வெருப்பானேமுப்பது கண்டாலோர்ராசியேத்தி
வீட்டுக்கீழேநின்றராசியில் சசியிருப்பான்
மருப்பானேனிப்படி யுபக்கிரகங்கள்தனையெண்ண
மாசத்துக்குமிந்தப்படி வருகுங்காணே.

இ-ள். இருப்பான்மேல் ராசியினுடன்கூட எத்தனை ராசிகண்டதோ அதை நீக்கிவிட்டு கீழ்நின்ற ராசியில் சரபனிருப்பான். கீழ் தேதியில் 17-ங்கூட்டி 30-காணில் இராசி ஏத்திவிட்டு கீழேநின்ற இராசியில் சசியிருப்பான். இப்படியாக உபயக்கிரகங்கள் தன்னை எண்ண மாதத்திற்கும் இந்தப்படியாக வருகவும் எ-று. 131

காணப்பாஆண்டொன்றுக்கு முன்னூற்றறுபத்தைந்து
கருதியநாளுக்குமாதம் பனிரெண்டுக்கும்
தோணப்பாவந்தந்தத் தகுதியிலேயெண்ணி
சொல்லியிந்தப்படியேதா னிருப்பார்களேயா
வீணப்பாயெண்ணுதே யுபக்கிரகங்கள்
விபரம்வெளியாகயவரை யின்னுமெனக்காட்டக்கேளு
ஆணப்பாசனிதன்மகன் குளிகனுக்கும்
அப்பனேவியாழன்மைந்தன் பருதியெமகண்டனுமே.

இ-ள். வருஷம் ஒன்றுக்கு 365-நாளுக்கு மாதம் பனிரெண்டிற்கும், அந்தந்தத் தகுதிலெண்ணிப் பார்த்துச்சொல்ல, இந்தப்படியாக

யிருப்பார். வீணுகை எண்ணுமைற்படிக்கு உபயக்கிரகங்களின் விபர மானது வெளியாக அவரை இன்னுரெனக் காட்டக் கேளும். சனியி னுடைய மகன் குளிகனுகும். வியாழனுடையமகன் பருதியெமகண்ட னுகும் எ-று. 132

எமகண்டன்புதன்மைந்தன் பாகன்பிரகாரன்
என்னசொல்வேனிராகுமகன் காலனுகும்
நிமையில்மடிதூமன்செவ்வாய் மைந்தனுகும்
நிலையாகுஞ்சுரர்குருமைந்தன் சாயனுகும்
அமையுஞ்சசியேத்து மதன்பார்க்கன்மூவர்
அனல்கதிரோன்மைந்தரென வறிவாய்நீயே
தமக்குநிகரில்லாத வேதகனப்பா
சந்திரனுடமகனெனவே சாற்றுவாரே.

இ-ள். புதன் மைந்தன் பாகன் பிரகாரன் இராகுவினுடைய மகன் காலனுகும். தூமன் செவ்வாயின் மைந்தனுகும். சுக்கிர னுடைய மைந்தன் சாயனுகும், சசி ஏத்துமதன் பார்க்கன் இவர்கள் மூவரும் சூரியனுடைய மைந்தர்களாகும், வேதகன் சந்திரனுடைய மைந்தனுகுமெனச் சாற்றுவர் எ-று. 133

## சயனராகுபலன்

சாத்தவேமுந்திசொன்ன நிரியாணங்கேள்
தான்மகரராசிமுதல் ரெண்டரைநாழிவீதம்
கூத்தவேசயனராகு விருப்பானையா
குறிசொல்லக்கேள் மகரந்தனிலுதித்து
ஏத்தவேயிரண்டரைநாழி கண்களிலேயிருப்பான்
யியல்குடம்ரெண்டரைநாழி வாக்கிலேயிருப்பான்
மாத்தவேமீனத்தில் ரெண்டரைநாழியளவும்
வந்திருப்பான்திருமுகத்தில் வணங்கிக்கேளே.

இ-ள். சாற்றும்படியாக முன்சொன்ன நிரியாணங் கேட்பாயாக. தான் இராசிமுதல் இரண்டரை நாழிகையாகும் வீதம் சயனவிராகு யிருப்பான் குறியாகச் சொல்லக்கேளும். மகரவிராசியிலுதித்து இரண்டரைநாழி கண்களிலிருப்பான். கும்பம் இரண்டரைநாழி வாக்கிலிருப்பான். மீனத்தில் இரண்டரை நாழியளவும் முகத்தினிட மாக விருப்பான் கேளும் எ-று. 134

வணங்கியேமேஷத்தி லிரண்டரைநாழிகையே
வயற்றிருப்பன்ரிஷபத்தில் ரெண்டரைநாழிகையே
இணங்கியேநாபியி லிருப்பான்மிதுனத்தில்
யிரண்டரைநாழிகையில் வாலினிலிருப்பான்
மணங்கியேமற்றவாறு ராசிதனைக்கேளு
வாராகமுன்போலே கண்டுகொள்வாய்

அணங்கியேயிவ்வித நாற்சாமத்துக்கும்
அப்பனேயிருப்பார்கள் சென்றநாழிகைக்கே.

இ-ள். மேஷத்தில் இரண்டரைநாழிகை வயற்றினிடமாக விருப்பான். ரிஷபத்தில் இரண்டரைநாழிகை நாபியிலிருப்பான். மீனத்தில் இரண்டரைநாழிகை வாலினிலிருப்பான். மற்றய ஆறுராசிகளைக் கேளும். அதனை முன்போலாகக் கண்டுகொள்வாய். இவ்விதமாகநான்கு சாமத்திற்கும் இருப்பார்கள் சென்ற நாழிகையைக் கேளும் எ-று.135

நாழிகைராத்திரிக்கும் பகலுக்குமுதையாதி
ராசிக்கிரண்டரை நாழிகையின்விழுக்காடு
தேதியிலேகண்டுதெளி மூன்றுநாழிக்கும்
தெனமானயேழரை நாழிகையின்விழுக்காடு
மாழியாறுராசிபதி ஐந்துநாழியளவாய்
மன்னிராசிபனிரெண்டு முப்பதுநாழிகையாய்
நீழிருக்குமிந்தப்படி யிரவும்பகலும்
நீயறிவாய்நிரியாண மதின்கிரமப்படியே.

இ-ள். நாழிகை இராத்திரிக்கும் பகலுக்கும் உதையாதி ராசிக்கு இரண்டரை நாழிகையின் விழுக்காடு ஆறுயிராசியாதிபதி ஐந்துநாழிகையளவாய் இராசி பனிரெண்டுக்கும் 30-நாழிகை யளவாயிருக்கும், இந்தப்படிக்கு இரவும்பகலும் நிரியாணம்கிரமப்படியறிவாய் எ-று.136

## நிரியாணமறிய

படியந்தசாதகனுக்கே ழூக்குடையவனும்
பாகனுடனேயோனிக் கொடியகரும்பாம்பும்
முடியந்தசெனனுதி யெத்தனையாம்வயதில்
முடிகிவருகின்றவனே அக்காலமறிந்து
நொடியந்ததிசையிலவன் பொசிப்பவன்மாதத்தில்
நோக்குமவன்வாரந்தி லவன்நட்சத்திரத்தில்
மடியாதசாதகனுக் கப்போதுமரணம்
மைந்தனேயமரபட்ச முயிர்க்கொன்பதோனுடனே.

இ-ள். இந்தப்படியாகச் சாதகத்திற்கு 7-க்குடையோனும் பாகனுடன் யோனி கரும்பாம்பும், ஜெனனுதிகாலம் எத்தனையாவது வயதில் வருகின்றனனே, அக்காலமறிந்து அத்திசைப்பொசிப்பின் மாதத்தில் அவன் வாரத்தில் அவனுடைய நட்சத்திரத்தில் சாதகனுக்கு மரணஞ் சம்பவிக்கும், அமரபட்சத்தில் உயிர்க்கு 9-ஆமிடத்தோனுடனே கேளும் எ-று 137

ஒன்பதோனுடனே வேந்தனுமேகூடி
உருவிகன்ராகுவுங் கூடிலவன்றிசையில்
முன்புசொன்னபடியே பிதாவுக்குமரணமதாம்
முறையுடனேராசிக்கு நாலோனேடே
வம்புடனேபோதகனுங் கூடிவாலினிலே
வந்தராகுவுங்கூடி லவன்றிசையிலேயா





துன்பமுடன்மாதாவுக்கு மரணமாகுஞ்
சொல்லுயிர்க்குமூன்றுக் குடையவனோடே தூமன்.

இ-ள். மேற்சொன்ன 9-ஆமிடத்தோனுடனே வியாழன் கூடி இராகுவுங் கூடியிருக்க, அவன்றிசையில் முன்புசொன்னபடியே பிதாவினுக்கு மரணம் சம்பவிக்கும். இராசிக்கு 4-ஆமிடத்தோனோடே போதகனுங்கூடி வாலிலிருக்க இராகுவுங்கூட அவன்றிசையில் மாதாவினுக்கும் மரணஞ் சம்பவிக்கும். உயிர்க்கு மூன்றுக்குடையவனோடே தூமன் கேளும் எ-று. 138

தூமன்கூடினிலதற்கு மூன்றுமிடத்தோனுஞ்
சேர்ந்திடவேகூடில்சென னுதிவரும்போது
தீமனவன்றிசையில்சகோ தரர்க்குமரணமதாஞ்
செப்புமுயிர்தனக்குமூன் றோனுடனேவையா
வீமனெனுங்கேதுவும் பருதியனுங்கூடி
விளங்குஞ்செனனுதியப்போ வருகுதோஅந்தத்தருணம்
ஆமனைவியாளுக்கு அப்போதுமரணம்
அவர்களுடன்பின்னுஞ் சரபனுங்கூடிலேயா.

இ-ள். தூமன் கூடிநிற்க, அதற்கு 3-ஆமிடத்தோனும் கூடச்சேர்ந்திட ஜெனனுதி வரும்போது தூமனுடைய திசையில் சகோதரர்களுக்கு மரணம் சம்பவிக்கும், உயிர்க்கும் 3-ஆமிடத்திற் குடையோனுங் கேதுவுங்கூடி அவருடன் சூரியனுங் கூடுவானாகில் ஜெனனுதி எப்பவருகின்றதோ அந்தத்தருணம் மனையாளுக்கு மரணம் சம்பவிக்கும், அவர்களுடன் பின்னுஞ் சரபனுங் கூடில் கேளும் எ-று.139

கூடிலந்தமனைவியுடன் கூடப்பிறந்தோர்க்கு
குடிகேடுமரணம்வரு மல்லதுவர்க்கத்தில்
வாடிநிரியாணமே யின்னமோர்விந்தை
வளருயிருக்கொன்பதா மிடத்துக்குயிரோனும்
நாடிராசிக்குடையோனிரண்டு பேர்லக்கினத்துக்கே
நாலிலிருக்கவவன் சரபத்துக்கு
ஓடிவருமரணங்கெற்ப முடனேயையா
உயிர்க்குவைந்தாமிடத்தோனு மேழாமிடத்தோனும்.

இ-ள். மேற்சொன்னபடி கூடிநிற்கில் மனையாளுடன் கூடப்பிறந்தோர்க்கு மரணம் சம்பவிக்கும். அல்லது சுவர்க்கத்தில் நிரியாணம் வரும், இன்னுமோர் விந்தையைக் கேட்பாயாக. உயிர்க்கு 9-ஆமிடத்துக்கு உயிரோனும் இராசிக்குடையோன் இவர்களிரண்டுபேரும் இலக்கினத்துக்கு 4-ஆமிடத்திலிருக்க அவன் சரபத்துக்கு மரணமானது கெற்பமுடன் வருகும். உயிர்க்கு 5-ஆமிடத்தோனும் 7-ஆமிடத்தோனுங் கேளும் எ-று. 140

ஏழாமிடத்தோனும்நாபி ராகுவுமேகூடில்
என்னசொல்வேன்செனனுதி யவன்றிசையிலேயா

தாழ்வுடன் தாயாதி வர்க்கத்தினில்மரணம்
சாத்தராசிக்கொன்பதா மிடத்தோனுடையா
வாழுங்கண்ணிலிருக்கும் ராகுவுமேகூடில்
மைந்தனேயத்திசையில் குருவுக்குமரணம்
நீழும்லக்கினத்துக்கு எந்தராசினியிலே
நிலைக்கின்றுனேகுளிக னதற்கைந்தெட்டினிலே.

இ-ள். மேற்கண்டபடி 7-ஆமிடத்தோனும் நாபி இராகுவுங் கூடிடில் ஜெனனுதி யவன்றிசையில் தாயாதிவர்க்கத்தில் மரணம் சம்பவிக்கும் இராசிக்கு 9-ஆமிடத்தோனேடு கண்ணிலிருக்கும் இராகுகூடில் அத்திசையில் குருவிற்கு மரணஞ் சம்பவிக்கும். இலக்கினத்திற்கு எந்த இராசினியில் நிலைத்திருக்கின்றுனே குளிகன் அதற்கு 9-ஆயில் கேளும் எ-று. 141

எட்டினிலேஒன்பதிலே சனியும்வருங்காலம்
என்னசொல்வேன்மாதாபிதா சாதகன்மற்றவர்க்கு
தட்டினேனிதற்குமன்னிய சுற்றத்தார்க்குங்கேளு
தலபேதந்தான்னிய பேதமாகும்
எட்டிலேராச' கலகமப்பா
நிலைக்குமிதுமுதலானதெல்லாம் பார்த்துரைப்பாய்
மட்டுமொருராசியிலிரண் டரையாண்டளவும்
வந்திருப்பான்சனியெனவே யின்னங்கேளே.

இ-ள். எட்டாமிடத்தினும் 9-ஆமிடத்தினும் சனியன் வருங்காலம் என்னென்று சொல்குவோம். மாதா பிதா சாதகன் மற்றவர்களும் அன்னிய சுற்றத்தார்களுக்கும் கேட்பாயாக. தலபேதமும் தனதான்னியச் சேதமுமாகும். அரசர்களால் கலகம் நேரிடும். நிலைக்கும்படியாக இதுமுதலானதும் பார்த்து உரை செய்குவாய். ஒரு இராசியில் இரண்டரைவருஷம் சனி வந்திருப்பான். இன்னமுங் கேட்பாயாகவும் எ-று. 142

இன்னங்கேளதையறிந்து வுயிர்க்குயெமகண்டன்
எந்தராசியிலிருக்கிறுனே வதற்கொன்பதிலே
யின்னங்கேள்வியாழன் வருங்காலம்
புத்திரற்குசாமான்னிய துன்பமாகும்
அன்னியமல்லவியாழ மகன்யெமகண்டந்தானும்
அந்தரெண்டரையாண்டுக்கு ளோராண்டிருப்பன்
என்னுங்கேளிதற்குள்ளே உயிர்க்கந்தப்பிரகாரன்
யெழுத்துவந்தராசியி லிருக்கின்றனனேவந்த.

இ-ள். இன்னமுங்கேளும். உயிர்க்கு எமகண்டன் எந்தராசியிலிருக்கின்றுனே அதற்கு 9-ஆமிடத்தில் வியாழன் வருங்காலம் புத்திரர்களுக்குச் சாமான்னிய துன்பமானது வருகும். வியாழனுடைய மகன் எமகண்டன் 2½-வருடத்துக்குள் ஒருவருஷமிருப்பான். இதற்குள்ளே உயிர்க்குப் பிரகாரன் எந்தயிராசியி லிருக்கின்றுனே அந்த

அந்தராசிக்குவைந்து வொன்பதிலேசூரியன்
அணுகுங்காலத்தில் பிதாவுக்குமரணமதாம்
சிந்தையுறவவனிருப்ப தொருமாதமாகும்
தெரிந்திந்தத்திங்கட்கு ளுயிர்க்குக்காலன்
எந்தவிடமிருக்கிறானோ வதற்கொன்பதிலே
யெழிற்சோமன்வருங்காலம் நிரியாணமாகும்
சந்திரனோர்ராசியி லிரண்டேகால்நாளிருப்பன்
சாத்தவேகுளிகனுக்கு யிரண்டரையாண்டிருப்பான்.

இ-ள். மேற்சொன்ன அந்த இராசிக்கு 5-6-ல் சூரியன் வருங் காலம் பிதாவிற்கு மரணம் வாய்க்கும். அவன் இருப்பது ராசிக்கு ஒரு மாதமாகும். சந்திரனுக்கும் உயிர்க்கும் காலன் எந்த இராசியிலிருக்கின்றானோ அதற்கு 9-ஆமிடத்தில் சந்திரன் வருங்காலம் நிரியாண மாகும். சந்திரன் ஒரு ராசியில் 2¼-நாளிருப்பான். குளிகனுக்கு இரண்டரைவருட மிருப்பான் எ-று. 144

இருப்பானெமகண்டனுக்கு வோர்வருடமாகும்
இதற்குள்ளேகாலனுக் கிரண்டேகால்நாளாம்
குறிப்பறிந்து இவ்விதமென்னைப்போல
கூறினவரில்லையையா ராமதேவர்பத்தில்
நெறிப்புடனேசொன்னதுபத்துங் கண்டுதெளிநீயே
நீனிலத்திலுன்னைவெல்லப் போகாதையா
பொருப்பின்மேலிட்டவிளக் காகுமிதுவையா
புகல்வதென்னபூர்வபலன் குறிக்கக்கேளே.

இ-ள். எமகண்டனுக்கு ஒருவருடமாகும். காலனுக்கு இரண்டே கால் நாளாகும். குறிப்பானது அறிந்த இவ்விதமாகும் என்னைப் போல் கூறினவர்கள் யாருமில்லை. ஆகிலும் இராமதேவர் பத்தில் சொன்னதையுங் கண்டு தெளிகுவாய். நீயும் இந்த உலகத்தில் உன்னை வெல்லப்போகாது. கிரியின்மேலிட்ட தீபம்போலாகும். இந்த நூல் சொல்வதென்னவென்று பூர்வபலனை குறிக்கக்கேளும் எ-று. 145

## பூர்வபலன்

குறிகேளாயுயிர்மூன்றி லிரண்டிலேழில்
கூறுமினேதூமநின்று லவன்திசையில்பொசிப்பில்
மறிகேளாய்சகோதரர்க்குத் தாபசுரசிலந்தி
மைந்தனேரணமுங்கொண்டு வுடனேதீரும்
நெறிகேளாயுயிர்க்குநாலா மிடத்துக்கேழில்
நீகேளாபல்லது ரெண்டாமிடத்தில்
விறிகேளாபாகனிருந் தாக்காலேயா
வேலிவன்றிசையி லவன்பொசிப்பில்.

இ-ள். குறியானதை கேட்பாயாக, உயிர்க்கு 3-2-7-ல் தூமன் நிற்கில் அவனுடைய திசைபொசிப்பில் சாதகனுடைய சகோதரர்

களுக்கு தாபசுரம் சிலந்தி இரணம் இவைகள் கண்டு உடனே தீரும். உயிர்களுக்கு 4-ஆமிடத்துக்கு 7-ல் அல்லது இரண்டாமிடத்தில் பாகனிருக்க அவன் றிசைப்பொசிப்பில் கேளும் எ-று. 146

பொசிப்பினிலேதாய்வர்க்கந் தாயோடேகூடே
பிறந்தவர்க்குவாதசுரம் வயிற்றுவலிகுன்மம்
முசிப்பிலேகாணுமையா வுயிருக்கொன்பதுக்கு
முடிகியேயேழில்ரெண்டில் பருதியிருந்தாக்கால்
வசிப்பிலேபிதாவுடனே கூடப்பிறந்தோர்க்கு
வரும்பயித்தியதலைவலியும் சுரமுமிதுமுதலாம்
நிசிப்பிலேகாணுமின்ன முயிர்க்கேழாமதற்கு
நிலைத்தேதழில்ரெண்டினிலே சரபனிருந்தாக்கால்.

இ-ள். மேற்சொன்னவன் றிசைப்பொசிப்பில் தாய்வர்க்கமும் தாயாரோடேகூடப் பிறந்தவர்களுக்கும் வாதசுரம் வயிற்றுவலி குன்மம் இவைகள்காணும். உயிர்க்கு 9-ஆமிடத்திற்கு 7-2-ல் சூரியனிருக்க பிதாவுடன் கூடப்பிறந்தோர்க்கும் பயித்தியம் தலைவலி சுரம் இது முதலானதும் காணும். உயிர்க்கு 7-ஆமிடத்திற்கு 7-2-ல் சரபனிருக்கக்கேளும் எ-று. 147

இருந்தாக்கால் பெண்சாதி கூடப்பிறந்தோர்க்கு
யென்னசொல்வேன்வயறுகழிச்சல் கடுப்புவந்துதீரும்
இருந்தாக்காலுயிர்க்குரெண்டா மிடமேழாமிடத்தில்
மேவிசசியிருந்தாலவன் றிசையிலவன்பொசிப்பில்
சரிந்தாக்கால்சாதகத்தோன் முகத்தினிலேயீன
சாதிக்கள்ளனுல்வாளின் கண்டம்வந்துதீரும்
பருந்தாக்காறி லேழில்ரெண்டில்
பாகனிருந்தாலவன் றிசையிலவன்பொசிப்பில்.

இ-ள். மேற்சொன்னபடியிருக்க பெண்சாதியின் கூடப்பிறந்தோர்க்கு வயறுகழிச்சல் கடுப்பும் வந்து தீரும், உயிர்க்கு 2-ஆமிடம் 7-ஆமிடத்தில் சந்திரனிருக்க இவன்றிசையிலும் பொசிப்பிலும் சாதகனுடைய முகத்தில் ஈனமாகும். கள்ளர்களின் வாளினுல் கண்டமானது வந்துதீரும். உயிர்க்கு 6-7-2-ல் பாகனிருக்க அவன் திசைப் பொசிப்பில் கேட்பாயாகவும் எ-று. 148

அவனுலேதாயாதி சனங்களுக்கும்
அப்பனேதுவேஷங்களொடு வெட்டுகுத்துசூனியம்
வவனுலேவஞ்சனைகள் நடக்குமையா
பகரவுயிர்நாலினிலே குளிகனுவதுகேள்
உவமானகேதுவாவது மிருந்தால்
ஓகோபிறந்தவீடுவிட்டு அசல்வீட்டில்
நலமாகவுயர்ந்த வுப்பரிகைவீட்டிலேறி
நல்லபாக்கியவானுகவாழ்வனவன்றிசையில்.

இ-ள். மேற்சொன்னபடியாகச் சாதகனுடைய தாயாதி சனங்களுக்கும் துவேஷங்களோடு வெட்டுகுத்தும் சூன்னியமும் வஞ்சனையும் நடக்கும், உயிர்க்கு4-ஆமிடத்தினும் குளிகனாவது கேதுவாவது யிருக்கில் தான் பிறந்த வீடுவிட்டு அசல்வீட்டில் உயர்ந்த உப்பரிகைமீதேறி நன்மையாகப் பாக்கியமுடையவனாக வாழ்குவான் அவன்றிசையில்.

திசையிலவன்பொசிப்பில்வரும் பலனைக்கேளு
செங்கதிரோனுக்குக்கிழக்கே பலனதாகும்
விசையுடனேபுகர்க்கு அக்கினிமூலைபலமாம்
வேதாந்தசந்திரனுக்கு வாய்வுமூலைபலமாம்
பிசகிலாபுதனுக்கு வடக்கேபலனாகும்
பிரபலமுள்ளகுருவுக் கீசான்னியபலமாம்
அசடில்லாயிவ்விதமாக அவரவர்கள்கொடுக்கும்
அறியதோர்பலாபலன்க ளறிந்துசொல்லே.

இ-ள். மேற்சொன்னவன் திசையிலும் பொசிப்பிலும் வரும் பலனைக் கேளும். சூரியனுக்கு கிழக்குப்பலனாகும், சுக்கிரனுக்கு அக்கினிமூலையிற் பலனாகும், சந்திரனுக்கு வாய்வுமூலையிற்பலனாகும், புதனுக்கு வடக்கில்பலனாகும், வியாழனுக்கு ஈசானியமூலையில் பலனாகும், இவ்விதமாக அவரவர்கள் கொடுக்கும் பலாபலன்களை அறிந்து சொல்வாயாகவும் எ-று. 150

சொல்லவென்றலெளிதாச்சோ வவரவர்சாதனைக்குச்
செனனதிகாலமுமவ் வேளையோடுராசிகளும்
நல்லதொருபாகையுங் கிரகங்கள்வீற்றிருந்த
நவில்பாகமாட்சிவுச்ச பகைநீச்சனுடனே
வெல்லுதிசாசக்கரமும் பொசிப்புமுபக்கிரகம்
விளங்குலாபப்பலன் சுபக்கிரகபலாபலனும்
கொல்லும்பாபக்கிரகபலங் களுமேபார்த்து
குறிப்புடனேநன்ற யாராய்ந்துசொல்லே.

இ-ள். சொல்லவென்றால் எளிதாச்சென்று எண்ணவேண்டாம். அவரவர்களுடைய சாதனைக்குச் செனனதிகாலமும் அவ்வேளையோடு இராசிகளும் ஒருபாகையிற் கிரகங்கள் வீற்றிருந்த பாகம் ஆட்சி உச்சம் பகை நீசமிவைகளுடன் திசாசக்கரமும் பொசிப்பும் உபக்கிரகமும் இலாபப்பலனும் சுபக்கிரகபலாபலன் பாபக்கிரகப்பலனும் பார்த்துக் குறிப்புடன் நன்றாக ஆராய்ந்து சொல்லவும் எ-று. 151

ஆராய்ந்துயிவ்விதமா யாதித்தன்முதலாய்
அப்பனேநவக்கிரகங்களையுங் குளிகனையுஞ்
சீராய்ந்துவுபக்கிரகங் களையும்பார்த்து
திரமுடனேகிரகஸ்திரஞ் செவ்வாயாகில்
பேராய்ந்தசோதிடவல் லவனீயாகும்
பெருமையுடனாராய்ந்து சொல்லச்சோம்பிடுதல்

வீராய்ந்தவுன்சொல் வீணாகப்போகும்
விளம்புவேன்கிரகபலா பலனைக்கேளே.

இ-ள். மேற்சொன்னபடி, ஆராய்ந்து இவ்விதமாக சூரியன் முதலாக ஒன்பது கிரகங்களையும் குளிகனுடன் உபயக்கிரகங்களையும் பார்த்து கிரக ஸ்திரஞ்செய்வாயாகில் பேர்பெற்ற சோதிடவல்லவன் நீயாகும். ஆராய்ந்து சொல்லச் சோம்பல்படில் உன்னுடைய சொல்லானது வீணாகப்போகும். சொல்குவேன் கிரகப்பலாபலனைக் கேளும் எ-று. ()

## கிரகபலாபலன்

கேளய்யாலக்கினத்தில் ராகுநிற்கில்
கெடிதிதுர்க்குணவானாய் சர்ப்பப்பிரியோனாய்
நீளய்யாமெயசமானாய் திரவியபலாபலனுமாய்
நீளுடலிலிவ்வியாதிவந்தால் தீராதவனுமாய்
கேளய்யாஅற்பாயு சுள்ளோனையா
கொடியதொருகேதுநின்றால் மனக்கிலேசனுமாய்
ஆளய்யாயேழையாய்க் கெருவிவைராக்கிய
அசடனுமாயிருப்பானையா அப்புறமேகேளே.

இ-ள். இலக்கினத்தில் இராகுநிற்கச் சாதகமானவன் கெடுதியுடையவனாய் துர்க்குணவானாய் சர்ப்பங்களின்மீது பிரியமுடையவனாய் எசமானாய் திரவியலாபமுடையவனாய் தேகத்தில் வியாதியானது தோன்றில் தீராதவனுமாய் அற்பாயுசுவானாயிருப்பன். கேது நிற்பானாகில் மனக்கிலேசனுமாய் ஏழையுமாகவிருந்து கெருவியாகியும் வயிராக்யமுடையவனாகியும் அசடனாகவு மிருப்பன். அப்புறங் கேளும்.

அப்புறமேரெண்டினிலே ராகுநின்றால்
அரியதிரவியவானாய் வாய்கொன்னையுமாய்
மெய்ப்பவேகூனுவுள்ளோ னாயிருப்பான்
மேலானகேதுநின்றால் பெலவானுமாகி
சொற்பெறவேபுத்தியுடை யோனுமாகி
சொல்வாய்ச்சாலகனுமாய் கீர்த்திவானாய்
நற்படியேகூனனுமாய் சூரனாய்ப்பின்செல்வம்
நாடுமவனாகவே வீற்றிருப்பான்மூன்றினிலே.

இ-ள். இலக்கனத்திற்கு 2-ஆமிடத்தில் இராகுவிருக்கச் சாதகமானவன் திரவியவானாயும் வாய்கொன்னையாயும் கூனனுமாகவிருப்பான். 2-ஆமிடத்தில் கேதுநிற்பானாகில் பெலவனாகியும் புத்தியுடையவனாய் வாய்ச்சாலகனுமாய் கீர்த்திமானாய் கூனனுமாகியும் சூரனாகவிருப்பான். பின்னாகச் செல்வமானது பெருகும் மகிட்சியாகவிருப்பான் மூன்றாமிடத்திற்கேளும் எ-று. 154

மூன்றினிலேராகுநிற்கில் தீர்க்காயுசுள்ளவனாய்
மூர்க்கமிகுகோபியுமாய் ஸ்திரீவொழுக்கமாய்

ஆன்றினமாய்த்தன்னைப் புகழ்ப்போனும்
அப்பனே தனவானாய் கீர்த்தியில்லாதோனாய்
ஈன்றினிலேகேதுநின்றால் சகோதரில்லானாய்
இணையிலாபராக்கிரம முன்னோனவனே
தோன்றினிலேசந்திரனிட பலத்தைக்கேளு
சொல்லுவேனன்றாகச் சொல்லுவேனே.

இ-ள். லக்கினத்திற்கு 3-ஆமிடத்தில் இராகுநிற்கச் சாதகமானவன் தீர்க்காயுசுள்ளவனாய் மூர்க்கமுள்ளகெருவியுமாயும் ஸ்திரீ ஒழுக்கனுமாய் தன்னைத்தானே புகழ்ந்துகொள்வோனுமாய் தனவானுமாகவிருந்து கீர்த்தியில்லாதவனுமாக யிருப்பான். 3-மிடத்தில் கேது நிற்கில் சகோதரர்கள் இல்லாதவனுமாய் பராக்கிரமசாலியாய் முன்னோனாக விருப்பான். சந்திரனுடைய பலத்தைக் கேளும் சொல்குவேன் நன்றாகவும் எ-று. 155

சொல்லுவேன்சந்திரன் மேடத்தில்நிற்க
சுகமாகபிறந்தவர்க்கு வட்டமிட்டசெம்புபோலே
வெல்லுவேன்சிவந்தவட்ட மிட்டகண்ணோனாய்
விளங்கவுடன்திரவியங்களிலே பிரியவானாய்
மல்லுவேசத்துவுளன் கையுஞ்சினத்தாப்போலே
மைந்தனேபிரிகையும் பிரயோசனமன்றியிலே
அல்லவேஓடியாடித் திரிதலுச்சந்தலையில்
அப்பனேவிரணவானா யபிமானியாயும்
நல்லவேல்போல்கையில் ரேகையுள்ளோன்
நவநாயகனுமாய்ரிஷபத்தில் நிற்கில்கேளே.

இ-ள். சந்திரன் மேஷவிராசியி லிருக்கச் சாதகமானவனுக்கு வட்டமிட்ட செம்புபோல் சிவந்தவட்டமிட்ட கண்ணோனாய் திரவியங்களின்மீது பிரியோனாய் சத்துள்ளவனாகியும் கைச்சினத்தாப்போல் பிரிகையும் பிரயோசனமன்றியும் ஓடியாடியும் திரிகுவன். உச்சந்தலையில் விரணமுடையவனாகியும் அபிமானியாயும் வேல்போல் ரேகையானது கையில் உள்ளவனுமாகும். நவநாயகனுமாய் ரிஷபத்தில் நிற்கக் கேளும் எ-று. 156

நிற்கவேசவுந்தரியோன் மார்புபிடரிதானும்
நீண்டிருக்கும்பிள்ளை யுடன்செவிடு
யெக்கவேமைந்தரொடு வேறுபடுதலுமாம்
எப்பாக்கியமிருந்திடினும் ஸ்திரீகளினாலவமே
மிக்கவேதனதாயு சுள்ளுமிதுவாம்
மிதுனத்திலேநிற்கில் ஸ்திரீகளின்மேலிச்சை
தக்கவேபோகத்தில் சமர்த்தனாகவுமே
சலசமலர்கண்கழுத்துத் திரண்டிருக்கையுமாம்.

இ-ள். மேற்கூறியவண்ணம் ரிஷபத்தில் நிற்கச் சாதகமானவன் சவுந்திரியவானாகவிருப்பன். மார்பும் பிடரியும் நீண்டிருக்கும். காது

செவிடாகும். மைந்தர்களுடன்வேறுபடுவன். எவ்வளவுபாக்கியமிருந்த போதினும் ஸ்திரீகளினால் அவமாகப்போகும். ஆயுசு தீர்க்கமுண்டாம். மிதுனத்தில் நிற்கில் ஸ்திரீகளின்மீது இச்சையுடையவனாக விருப் பன். போகத்தில் சமர்த்தனாகும். கண்கழுந்து திரண்டிருக்கும் எ-று.

ஆமப்பாவெகுசாஸ்திர மறிந்தநிபுணனுமாய்
அரியதேசாந்திரமேபோய்த் திரிபவனுமாய்
ஓமப்பாகழன்றதலை மயிரையுடையவனாய்
உகந்தபுத்திரவானாசை கரிக்கைசுபவானுமாய்
தாமப்பாபிறகருத் தறிதலுஞ்சூது
தஸ்காரவழக்குரைக்க வல்லவனுமாயும்
நேமப்பாவழகியவங்க முள்ளவனுமாயும்
நீள்கூத்துபாட்டு வறிந்திருக்கையுமவைகளிலே.

இ-ள். வேணசாஸ்திரமறிந்த நிபுணனுமாய் தேசாந்திரங்கள் போய்த்திரிவான். கழன்ற தலையும் மயிருடையவனுமாக விருப்பான். புத்திரர்கள்மீதுஆசையும் சுபவானுமாகவிருப்பான். பிறருடைய கருத் தையும் சூதையும் அறிந்துவழக்குரைக்க வல்லவனாகயிருப்பான். அழ குடைய அங்கமுடையவனுமாய் கூத்துப்பாட்டு அறிந்தவனுமாகும்.

அவைகளிலேயிச்சையாயு முயர்ந்தநாசியோனாம்
அப்பனேகடகத்தில் நிற்கில்கேளு
தவறிலாவிளங்குழந்தை நடையுடையவனாய்
சாத்தவுயர்மருங்கினையே தான்படைத்தவனுமாய்ச்
சுவையானதன்மனைவி கேளிக்கையோனாய்
சொல்லநல்லபந்துக்க ளுடையசம்பத்தோனாய்
தவமானதேவபத்தி சிலமந்திரநெறியும்
தானெங்கேயிருந்தாலும் பெரியதோர்வீடோனாய்.

இ-ள். மேற்கூறிய கூத்துப்பாட்டுகளில் இச்சை யுடையவனு மாய் உயர்ந்த நாசியோனாகும். கடகத்தில் நிற்கச் சாதகமானவன் இளம்வயதுள்ள குழந்தைகள்போல் நடையுள்ளவன். மருங்கினைப் படைத்தவனுமாய் மனைவியுடன்கேளிக்கைவானாகவும்பந்துக்களுடைய சம்பத்துள்ளவனாகவும் தேவபக்தியும் சிலமந்திரநெறியும் படைத்துத் தான் எங்கேயிருந்தபோதினும் பெரியதோர் வீடோனாகும் எ-று. ()

வீடன்றிஆவதவன் திரவியனுமாய்
விளங்கக்குறிதாயன்பா யிருக்குங்கருத்தோனாய்
காடன்றியினிதாங்கொன்றை வசமாயிருக்கையுஞ்சீர்
கடினவசனத்துக்கு வாராதிருப்பவனாய்
பாடன்றிநீரிலத்தந்த வானங்கள்தானிலும்
பலகாலும்விளையாடும் பண்புயெப்போதானாய்
மேடன்றிசிங்கத்தில் நிற்கிலையா
மேன்மையிலாப்பெருங்கொடுமை யுடையவனுமாகி.

இ-ள். மேற்கூறியவண்ணம் வீடுடன் திரவியவானுமாயும் விளங்கும் குறியன்புள்ள கருத்தோனாய் இனிதாகிய கொன்றை வாசமாகயிருக்குஞ் சீருடையவன். கடினமாகிய வசனத்துக்கு வாராதிருப்பவனுமாய் நீரிலும் வானத்திலும் விளையாடப் பிரியமுள்ளவனுயுமிருப்பன். சிங்கத்தில் நிற்கச் சாதகமானவன் மேன்மையில்லாதவன் கொடுமையுடையவனுமாகியும் எ-று. 160

ஆகியமாங்கிஷத்தில் பிரியவானுமாய்
 ஆரண்ணியந்தனிலிருக்கை கோபிக்கிலேயா
வேகியேகடைக்கண்ணால் பார்த்திடுதலல்லால்
 வேறேதொழிலும்பசியும் மோகமிக்க
சோதியேயுதிரவியாதியும் பலநோவுகளும்
 சுகமில்லாமனதுக்கு மந்தபுத்தியோனாய்
ஏகியேகெர்வியுமாய் மாதர்களுக்கிதமாய்
 இணங்கிப்பிரியாவாசை யாவானப்பா.

இ-ள். மாங்கிசத்தில் பிரியமுடையவனாகியும் ஆரண்ணியத்திலிருக்கையும் கோபிக்கிலேயும் கடைக்கண்ணால் பார்ப்பதல்லால் வேறு தொழிலிலும் பசியும் மோகமும் மிக்கவனாய் உதிரவியாதி யுடையவனாய் பலவிதமான நோயும் சுகமில்லாதவனாயும் மந்தபுத்தி யுடையோனாகியும் கெருவியுமாய் மாதர்களுக்கிதமாய் இணங்கிப் பிரியாத ஆசையுடையவனாக விருப்பான். 161

அப்பாகேள்கன்னியிலே நிற்கிலேயா
 அழகியசிங்காரமிகு வடிவனாகும்
மெய்யப்பாகேள்நல்லநடை மேடையோனாய்
 மேவுந்தந்தைதாய் ஸ்திரீகளுடையவனாய்
இப்பால்கேள்பூசிதனும் தேசாந்திரம்போபவனுமா
 மினியவசனங்களோடு ஸ்திரீபிரசைகளுடைய
தப்பாய்கேள்பலாபலமும் ஸ்திரீவார்த்தைசொல்வோன்
 சத்தியவாக்குள்ளனுமாம் தர்மவானாய்.

இ-ள். கன்னியாவிராசியில் நிற்கச் சாதகமானவன் அழகுடைய சிங்காரவடிவனாக விருப்பன், நன்னடக்கையுடைய மேடையோனாகவும் தந்தைதாய் ஸ்திரீகளும் உடையவனாகியும் பூசிதனாய்த் தேசாந்திரம் போபவனாய் இனியவார்த்தையுடன் ஸ்திரீ பிரசைகளுடையவனாகப் பலாபலமும் ஸ்திரீகளின் வார்த்தை சொல்வோனாகியும் சத்தியவாக்குடைய தருமவானும் எ-று. 162

தர்மவான்துலாத்தில்நிற்கில் மறையோரோடு
 சாதுசனங்களையும்சற் குணங்களையும்பூசிக்க
மர்மமாம்வித்தைபுத்தி யுணர்வோனையா
 மாதர்களைசெயிக்கவித்தை கற்பனையுமுண்டு
கர்மமாய்நினைவில்லா னுயர்ந்தமுக்குடையோன்
 காத்திரமுள்ளோனந்தமுளா னீனவங்கிஷத்தோன்

இம்மையிலும்மறுமையிலும் பிராமணர்பந்துக்க
ளிவர்களுக்குப்பொருளளிப்போன் குணவானுமே.

இ-ள். துலாவிராசியில் நிற்கச் சாதகமானவன் மறையோர்களோடும் சாதுசனங்களையும் சற்குணமுடைய இவர்களைப் பூசிப்பன். மர்மமுள்ள வித்தையும் புத்தியும் உணர்குவன், மாதர்களைச்செயிக்க வித்தைகள் கற்பனையுமுண்டு, நினைவானதுயில்லான், உயர்ந்தமூக்குடையவன் காத்திரமும் அந்தமுமுள்ள ஈனவங்கிசத்தோனாகும். இம்மையினும் மறுமையிலும் பிராமணர்களுக்கும் பந்துக்களுக்கும் பொருளானது அளிக்கும் குணனாகும் எ-று. 16

குணமானவிருச்சிகத்தில் நிற்கிலப்பா
குறியில்பெருமுழிகளுள்ளோன் பெரியமார்புள்ளோன்
நிணமானவுருண்டமணி முழந்தாளோடு
நெடுங்கொடியசேஷ்டையும் மீன்போல்வச்சிரம்போலும்
அணகானபட்சிபோலுங் கைரேகையுடையோன்
அஞ்ஞானபாவத்தொழில் செய்பவனுமாய்
கணமானதனுசில்நிற்கில் நீண்டயாக்கையோனாய்
கருதவதரத்துடையோன் பிதாவுக்குவாதம்.

இ-ள். விருச்சிகராசியில் நிற்கில் சாதகமானவன் பெருத்த முழிகளுள்ளவன், அகண்ட மார்புடையவன், உருண்டமணியும் முழந்தாளோடு நெடுமையாகிய சேஷ்டையும், மீன்போலும் வச்சிரம்போலும் பட்சிபோலும் கையில் ரேகையுடையோன், அஞ்ஞானமாகிய பாவத்தொழில்செய்குவன். தனுசுவிராசியில் நிற்கச் சாதகமானவன் நீண்ட ஆக்கையோனாகும்.. கருதும் அதரத்துடையோன் பிதாவிற்குவாதம்.

வாதமேதகிவித்தை பாடுகையும்யெல்லா
வார்த்தைசொல்லவல்லவனா மெப்போதைக்கும்
பேதியாதொருகாரியமே செய்வனுமாய்
பேனுஞ்சிற்பக்கருமங்கள் செய்யும்நெறியோனும்
நீதியிலாஅற்பமதியோரைத் திருத்திடவும்
நிலையாந்தன்னாலிலக்கினஞ் செய்வகையும்
ஓதுமதிபலவானும் காரியங்கள்தன்னை
நினைத்தபடியன்றிமற்றோர்விதம் போகவிடுகான்.

இ-ள். வாதமேதகி, வித்தையுடையவன், கவிபாடுவான், யாதொரு வார்த்தையும் சொல்லவல்லவனாகுவன், எப்போதைக்கும் பேதியாமற்படிக்கு ஒருகாரியஞ்செய்பவனுமாயும் சிற்பவேலைசெய்யும் நெறியுள்ளவனாய் அற்பபுத்தி யுடையோரைத் திருத்துவோனுமாய் நிலையாகிய யிலக்கினஞ்செய்ய தன்னால் வல்லமையும் பலவானுமாகக் காரியங்கள் தன்னை நினைத்தபடியன்றி வேறோர்விதம் போகவிடானாகும் எ-று. 0

போகவிடான்மகரமதிலே நிற்கில்
புத்திரரொடுமனைவியோடு விளையாடுகையுமாகும்

ஆகவிடான்தான்செய்த தர்மந்தானும்
அரைக்குக்கீழ்மாய்கையு மழகுகண்கள்
வாகுலாகியநெருங்கின படையும்வார்த்தை
வசனத்தில்சொன்னபடி கிரகிக்கின்றதுவும்
பாகதுபோல்கிளிமொழியாள் வசனத்தில்மிக்க
பண்போடுசரீரசம்பத் துடையோனாகவும்.

இ - ள். மகரவிராசியிலிருக்கச் சாதகமானவன் புத்திரரோடும் மனையாளோடும் விளையாடுகையுடையோன் தான்செய்த தருமம் தன்னைவிடான், அரைக்குக்கீழும் கையும் அழகுள்ளவன். நெருங்கின படையும் வார்த்தையும் வசனித்தபடி கிரகிக்கவல்லவன், பாகுபோல் ருசிக்கும்படியாயும் கிளியைப்போன்ற மொழியுடையவன் சரீரசம்பத் துடையவனாகும் எ-று. 166

உடையன்னயெக்காரியத் துக்குஞ்சோம்பன்
உலகத்தேயெத்தோடு கொண்டாடித்திரிவன்
திடமானநிலையுடையோன் கும்பநிற்கில்
திறமென்னகழுத்துநீண்டு புடைத்தேநிற்கும்
நிடமென்னநீண்டமயிர் பெருத்தகாலடி
நெடுகபெருத்தகுரங்கு சகுனம்பெருமுகமும்
படமானஸ்திரீகள் பாதத்தின்மீது
பார்த்தவஸ்தங்களிலி லபேட்சைகளுடையவனும்.

இ-ள். சம்பத்துடையவனாகி எக்காரியத்துக்கும் சோம்பலாகு வன். பூமியின்மீது எத்தாகப்பேசிக்கொண்டு ஆடித்திரிகுவன், திடம் பொருந்திய நிலையுடையவனாகும். கும்பவிராசியிலிருக்கச் சாதகமான வனுக்கு கழுத்தானது நீண்டு புடைத்திருக்கும். மயிரானது நீண்டும் பெருத்த காலடியுமாகும். பெருத்த மூக்குடையவன். ஸ்திரீகளுடைய பாதத்தின்மீதும் அஸ்தங்களின்மீதும் இச்சையுடையவனாகும் எ-று.

சுனையென்னபூசனைவிருத்தி லச்சையுடையவனும்
கருதியபோதெப்போதும் நடக்கப்பிரியன்காண்
தலையென்னமீனம்நின்றால் சிலசாஸ்திரங்கள்
தானறிதல்ஸ்திரீகளிடம் பிரியமுள்ளவனும்
அளவென்னகாத்திரமு முயர்ந்தமூக்கும்
அப்பனேபெருத்தலையோ னாகுமிக்க
கிளையென்னசத்துருக்கள்தனைச் செயிக்கவல்லோன்
கேள்மகனேபோகியவன் பண்டிதனுமாமே.

இ-ள். பூசனைவிருத்தியில் லச்சையுடையவனாகியும், கருதிய நாளும் நடக்கப் பிரியமுடையோனாகும். மீனவிராசியில் நிற்கச் சாதக மானவன் சில சாஸ்திரங்கள்தான் அறிகுவன் ஸ்திரீகளிடத்தில் பிரிய முள்ளவனாகும். காத்திரமும் உயர்ந்த மூக்குடையவன். பெருத்த தலையோனாகும், சத்துருக்களைச் செயிக்க வல்லமையுடையவன், போக வான் பண்டிதனாகும் எ-று. 168

ஆமப்பாஆதித்தன் பலனைக்கேளு
அப்பனேமேஷத்தில் ஆதித்தனின்றால்
நாமப்பாசொல்லுகிறோம் சாலப்பிரசித்தன்
நானிலத்தில்சத்துரு கிரகமாயிருப்பான்
ஓமப்பாரிஷபத்தில் நிற்கில்கேளு
உயர்சுகந்ததிரவிய வியாபாரனாகும்
தாமப்பாஸ்திரீயாசை பட்டுமன்றித்
தான்சிலுப்பிவெட்டெனச் சொல்லுடையோனாவான்.

இ-ள். சூரியனுடைய பலனைக் கேட்பாயாக. மேஷவிராசியில் சூரியனிருக்கச் சாதகமானவன் சாலபிரசித்தனாகும். பூமியின்மீது சத்துருவின் கிரகத்திலிருப்பன், ரிஷபத்தில் சூரியன் நிற்கில் சுகந்த திரவிய வியாபாரஞ் செய்குவன், ஸ்திரீகளின்மேல் ஆசையானது பட்டு அன்றியும் தான் சிலுப்பி வெட்டெனச் சொல்லுடையோனாக விருப்பன் எ-று. 169

ஆவானேவாத்தியங்கள் பாட்டுக்கேழ்க்க
அப்பனேபிரியமுள்ளோன் மிதுனத்தில்நிற்கில்
போவானேவித்துவா னாகிமேலும்
பெரியசோதிட சாஸ்திரவானாகியப்பா
மேவானேஅர்த்தமுடை யோனுமாவான்
மேன்மையுடன்கடகநின்றால் கொடியனெனலாகும்
தாவானேன்றிரவியயீனன் பிறர்காரியஞ்செய்வன்
தங்கவேயெப்போதுங் கிலேசனாமே.

இ-ள். மேற்படிபலன் ஆகுவன் வாத்தியங்கள் பாட்டுகள் கேட்கப் பிரியமுள்ளவன். மிதுனவிராசியில் சூரியனிருக்க சாதகமானவன் வித்துவானாகி மேலும் பெருத்த சோதிடசாத்திரவானாகி அர்த்தங்கள் சொல்லுவோனுமாயிருப்பன், அர்த்தமுடையோனுமாவான். கடக விராசியி லிருக்கச் சாதகமானவன் கொடுமையாளனாகும், திரவியயீனமுடையவன், பிறருடைய காரியங்கள் செய்குவன், எப்போதுங் கிலேசியாகவிருப்பன் எ-று. 170

ஆமப்பாசிங்கமென்றால் கொடியமலைகளினும்
அப்பனேவயசுநிறைகளினி லிச்சையுண்டாய்
ஓமப்பாவறிவுடையோன் கன்னியானால்
உகமையுடசித்திரங்க ளெழுதுவானே
தாமப்பாசோதிடஞ்சொல் லிடுவான்றிரேகம்
சாத்திரவடிவாகயிருக்குங் கோலென்னில்
நேமப்பாசுரர்சேர்வை செய்தும்வழிநடந்தும்
நெறிதூதுவியாபாரஞ் செய்துங்கீழ்பட்ட.

இ-ள். சிங்கவிராசியில் நிற்கச் சாதகமானவன் கொடிய மலைகளிலும் வயசு நிறைகளிலும் இச்சையுடையவன் அறிவுடையவனாகும். கன்னியாவிராசியில் நிற்கச் சாதகமானவன் உகமையுடன் சித்திரங்கள்

எழுதுவன் சோதிடஞ்சொல்குவான் தேகமானது வடிவாகயிருக்கும். துலாவிராசியிலிருக்கச்சாதகமானவன் சுரர்களுடையசேர்வைசெய்தும் வழியானது நடந்து நெறியாக தூதுவியாபாரஞ்செய்தும் கீழ்பட்டும்.

கீழ்பட்டசாதியோ டிணங்கியிருப்பான்காண்
கெட்டிவிருச்சிகமென்றால் கேளாயடாமகனே
வாழிட்டவர்ச்சிகப்பட்ட தனத்தோடு
மகத்தானசாத்திரங்கள் முடிபிறப்பத்திருப்பான்
பாழ்விட்டதனுசென்றால் கவிவாணன்றனே
பலகாலுங்கொண்டாடுந் தனவானுக
வேழ்தொட்டக்கொடியனய் வயித்தியவித்தையடைந்து
விளங்குமிக்கிருஷியி லிச்சையானேமையா.

இ-ள். மேற்கூறியபடி கீழ்ப்பட்ட சாதியோடு வணங்கியிருப் பன். விருச்சிகவிராசியில்நிற்கச் சாதகமானவன் வாழுடன் அர்ச்சிக்கப் பட்ட தனத்திைேடுயிருப்பன் மகத்தான சாத்திரங்கள் கற்றுணர் வன். தனுசுயிராசியில் நிற்கச் சாதகமானவன் கவிவாணனுகுவன் பலகாலும் கொண்டாடும்படியாகத் தனவானுகுவன் அழகுபொருந்திய கொடியோனுகியும் வயித்தியவித்தைகள் கற்றும் கிருஷியில் இச்சை யுடையவனுகும் எ-று. 172

அய்யாகேள்மகரமென்றால் நீச்சனுகி
அசடுசிறுபணியாகி குடிலனுகி
மெய்யாகேள்தனயீன னயிருப்பான்
மேலானகும்பமென்றால் மெய்வாசகனுமாய்
பொய்யாகேளுச்சாகமும் பத்தயீனனுமாய்
பூவையர்கள்பலரின்மே லிச்சையோனையா
செய்யாகேள்மீனமென்றால் சிலயாத்திரைபலமும்
சிகப்பானசங்குமுத்து வுள்பட்டவஸ்தே.

இ-ள். மகரவிராசியிலிருக்கச் சாதகமானவன் நீச்சராகி அசடு செய்வோனுய் சிறுபணியுடைய குடிலனுகியும் தனயீனனுக விருப் பான். கும்பவிராசியிலிருக்கச் சாகமானவன் பொய்சொல்லாத வாச கனுமாய் உச்சாகமும் பத்தயீனமும் மாதர்கள் பலரின்மீது யிச்சை யுடையவனுமா யிருப்பன். மீனராசியிலிருக்கச் சாதகமானவன் யாத் திரை யோகபலமுடையவன் சங்கு முத்து உள்பட்ட வஸ்துவும் எ-று.

வஸ்துகொண்டுவிற்பன் ஸ்திரீகளினுலேவையா
மகிழவாதரிப்புண்டுவாழ்வான் செவ்வாய்பலன்கேள்
சுத்தமாய்மேஷம் விருச்சிகத்தில்செவ்வாய்
சேர்ந்திருக்கராசாவால் பூசிக்கப்படுவன்
மெத்தவோபிரயோசனமேயன்றி தனித்திருப்பன்
மேவுஞ்சேனதிபதியும் வணிகனுமாய்க்களவு
உத்தவிஷபோகி யாயிருப்பன்
உகந்தரிஷபத்தில் துலாத்தினிலேநிற்க.

இ-ள். மேற்கண்ட வஸ்துக்கள் விற்பனை செய்குவன். ஸ்திரீகளினால் ஆதரிப்புண்டாகி வாழ்குவன். செவ்வாயின்பலன் கேட்பாயாக. மேஷவிருச்சிகந்தில் செவ்வாய் நிற்கச் சாதகமானவன் அரசர்களால் பூசிக்கப்படுவன். பிரயோசனமன்றித் தனித்திருப்பான். சேனாதிபதியாகியும் வணிகனாய் களவுசெய்குவன். விஷபோகியாக விருப்பன். ரிஷப துலாத்தில் செவ்வாய் நிற்கச் சாதகமானவன் எ-று. 174

நிற்கஸ்திரீகளைத்துதித்துப் பொதுகலகனுமாம்
நிலையில்லாபரதாரங்களை விரும்பியாசை
மெய்க்குள்ளேகொண்டு குரளிமந்திரத்தை
வேஷதாரியாயெவர்க்கும் பயங்கரனாய்வாழ்வன்
புக்கவேமிதுனம்கன்னியி லிருந்தாலையா
பொறுமையுடையவனாகும் புத்திரசம்பத்தோனும்
மிக்கவேபெற்று கிருதனாகி
மிகுந்தகெர்விதனாகி பாட்டுங்கூத்துங்கற்பன்.

இ-ள். மேற்சொன்ன சாதகன் ஸ்திரீகளைத்துதித்தும் பொதுகலகனுமாக விருப்பன். நிலையில்லாத பரதாரங்களை விரும்பி ஆசைகொள்குவன். மெய்க்குள்ளே குரளிமந்திரத்தை பலதுங்காட்டி வேஷதாரியாகி எவர்களும் பயங்கரமாக வாழ்குவன். மிதுனங்கன்னி இவைகளில் செவ்வாய்நிற்கச் சாதகமானவன் பொறுமை யுடையோனாகும் புத்திரசம்பத்துடையவன் மிகவும் பெற்றுய்து கிருதனாகி கெர்வமுடையோனாய் பாட்டுங்கூத்துங் கற்பன் எ-று. 175

கூத்துடனேபோரினுக்கும் சாலபலவானாய்
கொண்டுபயமன்றியெல்லாம் விரும்புதலையுடையோன்
சாத்தகடகமேநின்றால் ரத்தமுள்ளோனாகித்
தனகடலிலோடியும் புத்திரனுள்ளோனாய்
எத்துதலில்லாதபொல் லாதவனாய்கள்ளன்
எனசீவிக்குஞ்சிங்கத்தில் திரவியயீனனுமாய்
ஆத்துதலில்லாகிலேசம் பொருந்திடவல்லவனாய்
அருங்காட்டில்பயமின்றித் திரிவான்புத்திரன்.

இ-ள். மேற்கண்டபடி பாட்டு கூத்துகளாடுவன் போர்செய்ய வல்லவனாகவிருப்பன் யாதொருகாரியஞ் செய்கவும் பயமன்றி விரும்புதலை யுடையவனாகும். கடகவிராசியில் செவ்வாய்நிற்கச் சாதகமானவன் இரத்தமுடையவன், கடலின்மேற் சென்றும் திரவியந்தேடுவன், புத்திரர் உடையவன், பொல்லாதவனாகியும் கள்ளனாகவுமிருந்து சீவிப்பான். சிங்கவிராசியில் செவ்வாய்நிற்கச் சாதகமானவன் திரவிய யீனமுடையவன் ஆத்துதலில்லாத கிலேசமுடையவன் பொருந்திட வல்லவன் காட்டினிடமாகப் பயமின்றி பயணமாகத்திரிகுவன் எ-று. 176

அரறப்புத்திரன்தனுசோடு மீனத்தென்றால்
அரசனுமந்திரியெனப்போ ருடையோனாகி

விளம்பெறவேபயகீனன் பிரசைமிகுதியுள்ளோன்
மிகுகும்பம்துக்கிதன் திரவியயீனனுமாய்
சொரபானுமாபோசனமன்றி நடந்துதிரிந்தலேவான்
சோம்பிபொய்சொல்லுவன் மகரமென்றில்
நரபுகழ்த்துவானப் பிரகாசமதேயுடையோ
னரசனுல்ராசஸ்திரீயால் நன்மையுடைத்தோனும்.

இ-ள். தனுசுவிராசியோடு மீனவிராசியினுமிருக்கச் சாதகமானவன் அரசனெனவும் மந்திரியெனவும் பெயருடையோனுகியும் பயகீனனுமாய்ப் பிரஜைகள் மிகுதியாக உள்ளவன். கும்பவிராசியில் நிற்கச் சாதகமானவன் துக்கமுடையவன் திரவியயீனன் சொரபானம் போசனமின்றி நடந்தலேந்து திரிகுவன் சோம்பன் பொய்சொல்குவன். மகரவிராசியில் நிற்கச் சாதகமானவன் புகழில்லாதவன் அத்துவானன் காசரோகமுடையவன் ராஜர்களாலும் இராஜஸ்திரீகளினுலும் நன்மையுடைத்தோனுகி வாழ்குவானென்பர் எ-று. 177

நன்மையாம்புதன்பலத்தைச் சொல்லக்கேளு
நன்மேஷம்விருச்சிகத்தில் புதனேநிற்கில்
துன்மையாம்சூதுபோர் செய்யவல்லோனையா
சொற்பிரகாரம்பொசிப்பனவற் றின்சரத்துடையோன்
கன்மமாம்சொர்னதிரவிய யீனன்பொல்லாக்
காரிழைபோனயிடமாய்கொல்லும் பாவியாகுவனே
யின்மையாம்ரிஷபமொடு துலாத்தில்நின்றால்
எல்லார்க்குங்குருவாவன் பிரசையுடையோனே.

இ-ள். புதனுடைய பலத்தைச் சொல்லக் கேட்பாயாகவும். மேஷ விருச்சிகத்தில் புதன்நிற்கச் சாதகமானவன் துன்மையுடைய சூதும் போர்செய்யவும் வல்லமையுடையவன். சொற்பிரகாரம் பொசிப்பன் சரத்துடையவனுகும், தொழிலும் சொர்னமும் திரவியமும் ஈனமுடையவன், போதவன், மனையாளைக் கொல்லுவன். ரிஷபதுலாத்தில் புதன் நிற்கச் சாதகமானவன் யாவருக்குங் குருவாகுவன் பிரசையுடையோனுகும் எ-று. 178

குருவாவனிரையதார முடையோனையா
குணவான்றனக்கிச்சை யானபலாபலமும்
திருவாதிநன்மைகளுக் குருவிசுவாசத்தோன்
செப்பியதோர்மிதுனமெனில் விவகாரசீவனனும்
தருநிகர்சாஸ்திரங்கொண்டு விவகரிக்கவல்லோன்
தரணியில்சிற்பகருமங்க ளுக்குவல்லோனையா
மருவியெல்லார்க்கும்பிரியஞ் சொல்லவல்லோன்மேலு
மாகாளியிச்சையுண்டானேன் கடகமதில்நின்றால்.

இ-ள். நிரை தாரமுடையவன் குணவான் தனக்கு இச்சையான பலாபலமும் நன்மையும் உடைய குரு விசுவாசமுடையவன். மிதுன விராசியில் நிற்கச் சாதகமானவன் விவகாரத்தினுல் சீவனஞ் செய்கு

வன், சாஸ்திரங்களைக்கொண்டும் விவகரிக்க வல்லவனாகும். பூமியின் மீது சிற்பத்தொழில்களுக்கு வல்லவனாகும், யாவர்க்கும் பிரியமுடைய வசனஞ் சொல்லும் வல்லோன். மாகாரியின் இச்சையுடையோன். கடகத்தில் நிற்கக் கேளும் எ-று. 179

கடகமென்றாலேநீரிழிவும்மற்றும் பலவியாதி
காசினியிலெல்லாஜெனங்களுக்கு வுறவோனாகும்
விகடசிங்கமென்னுமங்கை யிவர்களபகரித்தும்
விரகபிரதாபயீனன் பிரயோசனமேயன்றி
தடமைதனிற் திருக்கையற்றி வில்லான்மிக்க
சாந்துளபந்திலிச்சை யோனாம்கன்னில்
திடமுடையோனறிவுடையோன் கொடுமையுடையோனாக
தீர்க்கசுகந்தமுடையவனும் துலாமெனிலோகேளே.

இ-ள். மேற்கண்ட விராசியிலிருக்கச் சாதகமானவனுக்கு நீரிழிவு மற்றும் பலவிதமானவியாதியும் சம்பவிக்கும். பூமியின்மீது சகலசனங்களுக்கும் உறவோனாகுவன். சிங்கவிராசியிலிருக்கச் சாதகமானவன் மங்கையர்கள் மீது இச்சையும் கருத்துமுள்ள விரகபிரதாபவீனன் பிரயோசனமன்றி காரியங்கள்செய்யும் அறிவில்லாதவன் சாந்துளப மீது இச்சையுடையவனாகும். கன்னியா விராசியிலிருக்கச் சாதகமானவன் திடமுடையோன் அறிவுடையோன் கொடுமையுமுடையோனாகியும் சுகந்தமுடையவனாகும். துலாவிராசியில் நிற்கக்கேளும் எ-று. ()

கேளய்யாசுகந்ததிரவியங் கூட்டவல்லோன்
கெடியில்லாப்பயவீனன் மகரங்கும்பமென்னில்
நீளய்யாராஜர்களாலே கொண்டாடிடுவோன்
நிலத்தியவானாகும்மெய் வாசகனுமாம்
ஆளய்யாகுருபலத்தைச் சொல்லக்கேளு
அய்யனேமேடம் விருச்சிகத்தில்நின்றால்
வேளெய்யாசேனைதலை வனுமாய்நிற்க
வெற்றியுடனிறைந்தவதிகார முடையோனே.

இ-ள். மேற்கண்ட இராசியிலிருக்கச் சாதகமானவன் சுகந்த திரவியங்கள் கூட்ட வல்லோனாகும். பயமுடைய ஈனன் மகரம் கும்பம் இவைகளில் நிற்கச் சாதகமானவன் அரசர்களால் புகழப்படுவோனாகும். நிலைமையுடைய மெய்வாசகனுமாகும். குருவினுடைய பலத்தைச் சொல்லக் கேட்பாயாகவும். மேஷவிருச்சிகத்தில் குருநிற்கச் சாதகமானவன் சேனாதிபதிக்குத் தலைவனாகின்று வெற்றியானது புரிந்து அதிகாரமுடையவனாக விருப்பான் எ-று. 181

அதிகாரன்மைந்தருடையோன் தாதா
அரியபந்துக்களுடையவ னழகோனாகும்
விதிகாரரிஷபாந்துலாம் நல்லவடிவோனல்ல
மெய்யன்பிரசைகளுடையோனல் தாரமுடையோன்

துதிகாரன்மாமிதுனங் கன்னியென்னில்
சொல்லா நபந்துஜெனன ஸ்திரீசுகியனுமாம்
நிதிகாரகடகமெனில் ஆதீனமுடையோன்
நிலைநல்லஸ்திரீயுடையோன் சுகியானுமே.

இ-ள். அதிகாரன் மைந்தருடையோன் தாதாவாகும். பந்துக்களுடையவன் அழகுள்ளவனாகும். ரிஷபம் துலாம் இவைகளில் நிற்கச் சாதகமானவன் வடிவுடையவன், நல்லமெய்யன், பிரசைகளுடையவன், நன்மையாகிய தாரமுடையவன். மிதுனங் கன்னி இவைகளிலிருக்கச் சாதகமானவனைச் சொல்லொண்ணாத பந்துசனமுடையவன், ஸ்திரீ சுகியன். கடகவிராசியிலிருக்கச் சாதகமானவன் ஆதீனமுடையவன், நிலைமையாகிய நல்ல ஸ்திரீயுடையோன் சுகியனாக விருப்பான் எ-று.

ஆகுமேசிங்கமெனி லிராசர்க்குச்சரியோன்
அரியசேனாதிபதிதன முடையோனையா
போகுமேவினைதனுசு வேதவேதாந்தம்
புகழ்வித்துவானாகுந் தேவபக்தியுடையோன்
யேகுமேதரித்திரங்கள் மெஞ்ஞானியாவான்
இயலில்லாமகரத்தில் நீச்சனெனலாகும்
சோகனுமற்பவித்தை யுடையோனாக
சுகமில்லான்தொல்கும்பமெனில் சொல்கடகபலனாமே.

இ-ள். சிங்கவிராசியிலிருக்கச் சாதகமானவன் அரசர்களுக்குச் சரிசமானமுடையவனாகும். சேனாதிபதியுடையோன் தனுசுவிராசியிலிருக்கச் சாதகமானவன் வேதவேதாந்தங்கள் யாவுமுணர்ந்த வித்துவானாகும், தேவதாபக்தியுடையோன், தரித்திரமானதுஒழியும், மெஞ்ஞானியாகுவன். மகரவிராசியிலிருக்கச் சாதகமானவன் ஈசுரனாகுமென்பர் சோகமுடையவன் அற்பவித்தையுள்ளவன் சுகமில்லாதவன். கும்பவிராசியிலிருக்கச் சாதகமானவனுக்குக் கடகவிராசிக்குச்சொன்ன பலனாகுமென்பர் எ-று. 183

பலனாகுஞ்சுக்கிரபலன் சொல்லக்கேளு
பண்புமேடங்தேளினி லிருக்கபலஸ்திரீகள்
அலமுடையோன்திரவியங்க ளழித்துதன்குடிக்கு
அப்பனேயிழிவானவகை செய்வான்கேளாய்
தலமானரிஷபந்துலாம் யுத்தியுடையவானும்
தனவானும்ராஜாக்க ளாலேபூசிப்போன்
குலமானபந்துகட்கு உதவியாளன்
கொற்றவனுமிதுனராச காரியமேசெய்து.

இ-ள். சுக்கிரனுடைய பலனைச் சொல்லக்கேட்பாயாகவும். மேஷவிருச்சிகத்தி லிருக்கச் சாதகமானவன் பல ஸ்திரீகளின்மேல் இச்சையுடையவன், திரவியங்கள் அழிந்து தன்னுடைய குடிக்கு இழிவானது செய்குவன். ரிஷபதுலாத்தில் சுக்கிரனிருக்கச் சாதகமானவன் பத்தி

யுடையவன், தனவான், அரசர்களால் பூசிக்கப்படுவன். தன்னுடைய பந்துக்களுக்கு உதவிபுரிகுவன், கொற்றவனைப்போல் வாழ்வுடையுவன். மிதுனவிராசியிலிருக்கச் சாதகமானவன் இராஜகாரியங்கள் செய்வன் எ-று. 184

செய்தரத்தனுகுவனும் சிற்பகருமவானும்
சீவிக்குக்கன்னி திரவியனும் ராசதுவாரத்தில்
மெய்யுரைத்தநினைந்ததை விருத்திதனைசெய்தலும்
மேலானமக்களுடன் நல்லமங்கையரைப்
பெய்துமே பொல்லாப்புக்காரனுகும்
பெருகடகமதுவென்னில் பேணிரண்டுஸ்திரீகளுண்டா
மவர்மேலிச்சைவயதளவும் பலவானும்விரகசோசியாவன்
மைந்தனேசிங்கமெனில் ஸ்திரீகளினுற்கொடுக்கும்.

இ-ள். அர்த்தமுடையவனுகும். சிற்பவேலையில் சீவனமுடையோனுகும். கன்னியாவிராசியிலிருக்கச் சாதகமானவன் திரவியவானுக விருப்பன. இராஜதுவாரத்தில் மெய்யானது உரைத்து நினைத்தகாரியங்களை விருத்தியாகச் செய்தலும் மேன்மையாகிய மக்களுடன் நல்ல மங்கையரையும்வைத்து வாழ்வதாலும் பொல்லாப்புக்காரனுகும். கடக விராசியிலிருக்கச் சாதகமானவனுக்கு தாரம் இரண்டாகும். அவர்களின்மீது இச்சையுடையவன், வயதளவும் பலவானுகியும் விரக சோசியாக விருப்பன். சிங்கவிராசியிலிருக்கச் சாதகமானவனுக்கு ஸ்திரீகளினு லுதவியுண்டாம் எ-று. 185

கொடுக்கின்றதிரவியனு நற்பெண்களுடையோன்
கூடும்பிரசைகளுடையோன் தனுசுமீனமெனில்
அடுக்கின்றவெவரையும் கொண்டாடச்செய்தும்
அறிந்ததிரவியமீன னுகிடுவன்முற்றும்
நடுக்கின்றசனிபலந்தைச் சொல்லக்கேளு
நாடிமேஷம்நண்டினிலே யிருக்கிலையா
கடுக்கின்றதாயெப்போதும் சிறைகடந்துமெத்த
கவலையொடுமாருட்டஞ் செய்துமொன்றினிலே.

இ-ள். மேற்கண்டபடி கொடுக்கப் பெருகுந் திரவியவானுகும். நன்மையாகிய பெண்களுடையோனுகும் பிரஜைகளுடையோன். தனுசு மீனம் இவைகளிலிருக்கச் சாதகமானவன் தன்னையடுத்தோர்கள் யாவரையும் கொண்டாடும்படிச்செய்தும் தனயீனனுக விருப்பன். முழுதும் சனியினுடைய பலனைக்கேட்பாயாகவும். கடகம் இவைகளில் சனி நிற்கச் சாதகமானவன் கடுக்கின்றதுபோ லெப்போதும் சிறையிலகப்பட்டுயிருந்து மெத்த கவலையோடு மாருட்டஞ்செய்தும் ஒன்றிலுங் கேளும் எ-று. 186

ஒன்றிலும்நிலையில்லா சீவிக்குமிதுனந்தான்
ஒருகாலும்லச்சையன்றி கருமங்கள்செய்வன்

மன்றினிலேபுத்திரருண்டு மாயதினாலே
மயங்குவான்ரிஷபமெனில் சொல்லக்கேளு
வன்றினிலேதிரவிய முடையோனுமாகி
வப்பனேஸ்திரீகளுடை யோனுமாவான்
கன்றினிலேதுலாமென்னில் தியாகியெனலாகும்
கதித்தபடையாலுஞ் சத்துருக்களாலும்.

இ-ள். மேற்கண்டபடி ஒன்றினுஞ் சீவனமில்லாதிருப்பன். மிதுனவிராசியிலிருக்கச் சாதகமானவன் எக்காலமும் லச்சையன்றி கருமங்களைச் செய்குவன். பூமியின்மீது புத்திரவிருத்தியாகவிருப்பான். மாய்கையினால் மயங்குவான். ரிஷபத்திலிருக்கச் சாதகமானவன் பூமியின்மீது திரவியமுடையோனுமாகியும் ஸ்திரீகளுடையோனுமாக விருப்பன். துலாவிராசியிலிருக்கச் சாதகமானவன் தியாகியாகப் படைவீரர்களாலும் சத்துருக்களாலுங் கேளும் எ-று. 187

சத்துருக்களாலும் பூசிக்கப்பட்டுத்
தன்கனவனாயிருப்பான் கடகமதிலென்றால்
மெத்தபலநோவுடையான் வர்ணசீர்மங்கெட்டு
வேசிதனைத்தாயன்றி பாரியன்றிகூடி
வித்துதவாதஅஞ்ஞானி யாயிருப்பான்
மேவிசிங்கமேயென்னில் சுகமெல்லானெவர்க்கும்
நித்தலுமேசெய்வன் தனுசுமீனமென்னில்
நீகேளாய்சுகந்தீர்க்கும் வார்த்தையில்நல்லவனே.

இ-ள். மேற்சொன்னபடி சத்துருக்களால் பூசிக்கப்பட்டு தனதான்னியமுடைய கனவானாகவிருப்பன். கடகவிராசியிலிருக்கச் சாதகமானவன் பலவிதமான நோய்களுடையவன் வர்ணசீர்மமானது கெட்டும் வேசியரைத் தாயன்றிப் பட்சமாகக்கூடி வித்துதவாத அஞ்ஞானியாகவிருப்பன். சிங்கவிராசியிலிருக்கச் சாதகமானவன் சுகமானது யாவர்களுக்கு மில்லாதவன் தொழில் புரிவோனாகும். தனுசு மீனம் இவைகளிலிருக்கச் சாதகமானவன் சுகமுடையவன் தீர்க்கமுடைய வார்த்தையுடைய நல்லவனாகும் எ-று. 188

நல்லபுத்திரருடையோன் ஸதிரீகளையும்தனத்தோனும்
நவிலுமகரங்கும்பமெனில் புரங்களொடுநீராம்
வல்லதற்கும்படைத்தனக்கும் தலைவனாகுவன்கேள்
வகையோடுசினங்கள்திரண் டிருக்குமைய
இல்லமொடுதனங்கள் திரண்டிருக்குமென்ப
னியல்புடையோனாகுமென்று சொல்வர்மேலும்
வில்லசிக்கென்றிருகையும்பெருக உண்ணவல்லோன்
விளங்கியயிவ்விதம்வாழ்வான் மேலின்னங்கேளே.

இ-ள். மேற்கண்டபடி நல்ல புத்திரருடையவன் ஸ்திரீகளுடையவன் தனவானாகும். மகரங்கும்பம் இவைகளிருக்கச் சாதகமானவன்

புரங்கள்நீர் இவைகட்டும் படைதனக்கும் தலைவனுகை யிருப்பன் கோபமானது திரண்டிருக்கும் இருகையும் பெருக உண்ணவல்லோன் யாவரும்புகழ இவ்விதமாக வாழ்குவான் இன்னமுங் கேட்பாயாக எ-று. 189

இன்னமென்ன ஒருவன் பிறந்திடும்போதுமைந்தா
யெழில்சந்திரனிவரைக்கூடி நிற்கவல்லதுகேள்
உன்னியேபிரமனின்று நோக்கிடினும்பலமாம்
ஓகோகோசந்திரனொரு ராசிகூடிநிற்கில்
மன்னவனேமேடத்தலை மீனங்காலாக
வகுத்தால்புருடனுக்கு யெந்தவுருப்பினிலே
துன்னவேஅஷ்டத்தின் மருவொன்றுசொல்ல
சுகமானகிரகநோக்கும் பலத்தைக்கேளே.

இ-ள். யாதாமொரு பிரசை ஜெனனகாலத்து இவரைச் சந்திரன் கூடிநிற்க அல்லது பிரமன் நின்றுபார்க்க பலமாகும், சந்திரன் ஒரு ராசியில் கூடிநிற்கில் மேஷவிராசி தலைபாகவும் மீனவிராசிக் காலாகவும் வகுத்துப்பார்க்கில் புருஷனுக்கு எந்தவுருப்பில் அஷ்டகத்தில் மரு வென்று சொல்லுதற்குக் கிரகம் நோக்கும்படியான பலத்தைக் கேளும் எ-று. 190

கேளய்யாபுதனுக்கி லாயிரங்குற்றந்தீரும்
கெடியானவெள்ளிநோக்கி பெலத்தைச்சொல்ல
ஆளய்யாபதினுயிரங் குற்றங்கள்தீர்க்கும்
அப்பனேகுருநோக்கி லருணனையேகண்ட
நீளய்யாஇருள்போல் நீங்கிவிடுஞ்சொன்னேன்
நினைக்கநூறுயிரங்குற்றம் நொடியில்விட்டோடுமே
வாளய்யாசித்தசுபம் நாநூறுபிழைதீர்க்கும்
நாடுஞ்சுபமுத்தமத்தால் பலவினையும்விடுமே.

இ-ள். புதன்பார்வையுண்டாகில் ஆயிரங்குற்றமானது தீரும், சுக்கிரன்பார்க்கில் பதினுயிரங்குற்றமானது தீரும். குருவினுடைய பார்வையுண்டாகில் சூரியனைக்கண்ட பனிபோல் குற்றங்களானது நூறுயிரமும் நொடிக்குள் தீர்ந்துவிடும், சுபக்கிரகங்கள் பார்க்கில் நாநூறு பிழைகள்தீரும். சுபம். உத்தமத்தால் பலவினையுந் தீர்ந்து விடும் எ-று. 191

விடுமையாயிவர்க்குறவு சொல்லக்கேளு
வேதாந்தியானுக்கால் கண்டுதெளிவான்காண்
தொடுமையாரவிக்குறவு பொன்னேயாகும்
சுகுணமிகுமதிதனக்கு குருவும்புதனுகும்
நெடுமையாசெவ்வாய்க்கு வுறவுகேளு
நிலையானபுதன்வெள்ளி நிலைக்கப்பாரு
முடுமையாபுதன்றனக்கு ஆதித்தனொழிய
யெல்லாருமுறவாகு மியம்பக்கேளே.

இ-ள். கிரகங்களுக்கு உறவானது கேளும். இதனை வேதாந்தி யாவானாகில் கண்டுதெளிகுவன். சூரியனுக்குறவு வியாழனுக்கும், சந்திரனுக்கு குருவும் புதனுமாகும். செவ்வாய்க்கு உறவு புதன் சுக்கிரனாகும், புதனுக்குச் சூரியனொழிய மற்ற கிரகங்கள் யாவும் உறவாகுஞ் சொல்லக் கேட்பாயாகவும் எ-று. 192

இயம்பவேகுருவுக்கு குஜனொருவனொழிய
எல்லாருமுறவாகு வசுரர்குருவுக்கே
நயங்கேளுசனிசெவ்வாய் புதன்வியாழம்
நாடுமெனக்கண்டுதெளி நவில்வேனின்ன
பயமென்னசனிகுருவு புதன்பொன்வெள்ளி
பண்பிவர்களல்லாது மற்றவர்கள்பகையாம்
அயமென்னயிவ்விதமே பார்த்துச்சொல்லு
அப்பனேஆட்சிவுச்ச மறையக்கேளே.

இ-ள். குருவினுக்கு செவ்வாய் ஒருவனொழிய மற்ற கிரகங்கள் யாவும் உறவாகும் சுக்கிரனுக்குச் சனி செவ்வாய் புதன் வியாழம் உறவாகும். சனிக்குறவு புதன் வியாழம் சுக்கிரனிவர்களாகும். இவர்களொழிய மற்றக்கிரகங்கள் பகையாகும். இவ்விதமாகப் பார்த்துச் சொல்கவும் ஆட்சியுச்சம் சொல்லக்கேளும் எ-று. 193

அறையமைந்தாஆதித்தனுக்கு ஆட்சிசிங்கம்
அப்பனேசந்திரனுக்குக் கடகமாகும்
நிறையவேசெவ்வாய்க்கு மேடம்விருச்சிகமாம்
நிலையானபுதனுக்கு கன்னிமிதுனமதாம்
உறையவேவியாழனுக்கு தனுசுமீனம்
உகந்ததொருவெள்ளிக்கு ரிஷபந்துலாமாகும்
தெரியவேசனிதனக்கு மகரகும்பமாகும்
செப்பினேனாட்சிதனை வுச்சங்கேளே.

இ-ள். சூரியனுக்கு ஆட்சி சிங்கவிராசியாகும். சந்திரனுக்கு ஆட்சி கடகமாகும். செவ்வாயினுக்கு ஆட்சி மேஷம் விருச்சிகமாகும். புதனுக்கு ஆட்சி கன்னியும் மிதுனமுமாகும், வியாழனுக்கு ஆட்சி தனுசு மீனமாகும், சுக்கிரனுக்கு ஆட்சி ரிஷபமும் துலாமுமாகும், சனிக்கு ஆட்சி மகரங்கும்பமாகும் சொன்னேம். ஆட்சிதன்னை உச்சத்தைக் கேட்பாயாகவும் எ-று. 194

உச்சமதுரவிதனக்கு மேடமாகும்
உகந்தசந்திரனுக்குச்சம் ரிஷபமேயாம்
மெச்சவேசெவ்வாய்க் குச்சமிதுனமாகும்
மேவிநின்றபுதனுக்குச்சங் கன்னியெனலாம்
பட்சமிகுகுருவுக்குச்சங் கடகமதாம்
பளிங்கனுக்குச்சமீனம் சனிக்குதுலாமாகும்
லெச்சையுங்கேதுராகு தனக்குமைந்தா
நிகழ்த்தவிருச்சிகமாகும் நீசங்கேளுமையா.

இ-ள். சூரியனுக்கு உச்சம் மேஷராசியாகும். சந்திரனுக்கு உச்சம் ரிஷபமாகும். செவ்வாய்க்கு உச்சம் மிதுனமாகும். புதனுக்கு கன்னி உச்சமாகும். வியாழனுக்கு உச்சம் கடகமாகும். சுக்கிரனுக்கு உச்சம் மீனமாகும். சனிக்கு உச்சம் துலாமாகும். கேது ராகு இவர்களுக்கு விருச்சிகராசியாகும். நிசங்கேளும் எ-று. 195

நிசமென்னவிதற்கேழாம் ராசியதுநீசமாகும்
நீகேளாயொன்றினு லெழுபத்துதையம்
வசமென்னவுதையமென்றும் நீர்கீழென்றும்
வசனிக்கப்பாடென்றும் உச்சியென்றும்
துசமென்னநானன நான்குகண்டத்தின்போகம்
சொல்புதன்வியாழமுத யத்தில்வலியோராம்
இகமென்னபுகர்மதியும் நீர்கீழ்வலியார்
யியல்பாம்புசனிபாட்டின் வலியரெனக்காணே.

இ-ள். உச்சத்திற்கு 7-வது ராசி நீசமாகும். 1-4-7-10-உதையம் இவற்றில் உதையமென்றும் நீர்கீழென்றும் பாடென்றும் உச்சியென்றும் நான்குகண்டத்தின்போகம். புதன் வியாழம் உதையத்தில் வலியராகும். சுக்கிரன் சந்திரன் இவர்கள் நீர்கீழ் வலியராகும். பாம்பும் சனியும் பாட்டில் வலியராகுவர். இவ்விதங்காணவேண்டும். ()

காணய்யாசனிரவி உச்சியினில்வலியார்
கனகபுதனுக்குச்செவ்வா வலிதுசெவ்வாய்க்கு
தோணய்யாசனிவலிது சனிக்குகுருவலிது
சொல்குருவுக்குபுகர்வலிது புகர்க்குமதிவலிது
ஊணய்யாமதிக்குரவி வலிதுரவிதனக்கு
யுதித்தொருபாம்பு வலிதெனவேநூலுரைக்கும்
வீணய்யாசொல்லவில்லை சூத்திரமும்பாரு
விளங்கவதில்யோகபலன் மற்றுமதிற்காணே.

இ-ள். செவ்வாய் சனி சூரியன் உச்சியில் வலியர் புதனுக்குச் செவ்வாய் வலிவாகும். செவ்வாயினுக்கு சனிவலிது. சனிக்கு குரு வலிது. குருவிற்குச் சுக்கிரன்வலிது. சுக்கிரனுக்கு சந்திரன்வலிது. சந்திரனுக்கு சூரியன்வலிது. சூரியனுக்கு பாம்புவலிது. ஆகுமென நூல் முறையிடும். வீணைச் சொன்னேனென்று எண்ணவேண்டாம், சூத்திரங்களைப்பாரும் விளங்கிய யோகபலனும் மற்றுமதிற் காண்பாயாகவும் எ-று. 197

## தனலாப பலன்

தனபாக்கியலாபமானோர் தாழ்வில்லாச்சுபரேசேர
மனைவியோக்கியமின்றிநல்ல மனைவியாட்சிவுச்சமாக
இனசவுக்கியமில்லாப்பாப ரிவரையேபாராரால்
வினைவுறுமாதேகேளாய் வேண்டியேபொருளுண்டாமே.



இ-ள். தனபாக்கியம் இலாபம் இந்த ஸ்தானங்களில் சுபக்கிரகங்க ளிருக்க மனையாள் யோக்கியமின்றி நல்லமனைவியாகும், ஆட்சி உச்ச மாகவிருக்க இனசவுக்கிய மில்லாதவனாகும். பாபர்கள் இவரைப்பாரா திருக்கப் பாக்கியமுண்டாகும் எ-று. 198

கன்மாதிமுன்பின்னோருங் கலந்துடன்றன்சேர்ச்
சென்மாதிதனத்தோன்கூடிற் சேர்த்துடனிலாபஞ்சேர
மண்மாதினுதித்தோனீலன் மனையீராறிரவிபாராப்
பெண்மானினனையமானே பெருந்தனத்தவனாய்வாழ்வன்.

இ-ள். கன்மஸ்தானாதிபதிக்கு முன்பின்னாக நின்றோரும் கூடி தனஸ்தானத்திலேறி நிற்க ஜென்மாதிபதியும் தனத்தோனுங்கூடி இலாபஸ்தானமேறி நிற்கச் சாதகமானவனுடைய மனையீராகும். சூரி யன் பாராதிருக்கப் பெருந்தனமுடையோனாக வாழ்குவானென்பர். ()

தனத்தவனிடத்தான்லாபன் றனியராவர்க்கேழ்பொன்னன்
சினத்துடனிலாபமானோர் சென்மாதிதனமேழாகக்
கனத்துடனிரவிபூமன் காரியுமரவநோக்கா
மனத்திடமாகநின்றான் மகமேருகிரிபோல்வாழ்வான்.

இ-ள். தனத்தான் தனத்தானதிநின்ற இராசியோன் இலா பேசன் இவர்கட்கு 7-9-க்குடையோரும் இலாபம் நின்றோர்களுமாக ஜென்மாதிபதி 2-7-ல் நிற்க சூரியன் செவ்வாய் சனி பாம்பு இவர்கள் பாராதிருக்க மனதிடமாக நிற்கச் சாதகமானவன் மகம்மேருகிரிக் கொப்பாக பூமியின்மீது வாழ்குவானென்பர் எ-று. 200

உத்தமனுதயனுங்கூடிச் சத்தமர்க்கேழில்நிற்க
நித்தமன்மனையோன்கூடிக் கொற்றவர்க்கேழேயாகில்
இத்துடன்சனிசேதீய ரிரவிபாம்பிவரைப்பாராய்
பெற்றவன்றவமேயென்னப் பெருமையாய்புவியில்வாழ்வன்.

இ-ள். சுபக்கிரகமும் உதையாதிபதியுங்கூடி சத்தமத்தோனுக்கு 7-ஆமிடத்தில் நிற்க மன்மனையோன்கூடி குருவிற்கு 7-ஆமிடத்தில் நிற்க இவர்களைச் சனி செவ்வாய் தீயோர்கள் சூரியன் பாம்பு பாரா திருக்க சாதகமானவன் பெருமையாக வாழ்குவன் எ-று. 201

சுபர்கோணகேந்திரர்கேள் சுற்றியேபாபரன்றி
அவர்கேந்திரகோணமானோ ரம்மனைச்சுபரேசேர
இவர்க்கரிகாரிதீயு மிருந்திடமீராறாகில்
எவறிதற்பிறப்பானாலு மேந்திழைதனமுண்டாமே.

இ-ள். சுபஸ்தானத்திலும் கோணகேந்திர மிவைகளில் பாபக் கிரகங்களன்றி கேந்திரகோணமானோர் அம்மனையில் சுபர்கள் சேர சனி செவ்வாய் இவர்கள் 12-ஆமிடத்திலிருக்க எவ்விதமான பிறப்பா கினும் தனமுண்டாகி வாழ்குவன் எ-று. 202

கனமதுபாக்கியலாபந் தலைவருமிருப்பிடத்து
மனமதுற்றைந்திலாறின் மந்தனுமாறிலேழாகி
இனமதுசுபர்நோக்கில்லா திருக்கினுமாதேகேளாய்
குணமதுதனமேநாசங் குறியிதுதப்பாதாமே.

இ-ள். பாக்கியம் இலாபம் இந்த ஸ்தானங்களுக்கு அதிபர்கள் நின்ற ஸ்தானத்திற்கு 5-6-ல் நிற்க, சனியும் 6-7-ஆமிடமாக விருக்க இவரைச் சுபக்கிரகங்கள் பாராதிருக்க சாதகனுக்கு தனநாசமாகும். ()

## தன நஷ்டம்

பத்தொருவேழிரண்டோன் பாஸ்கரனுடனேகூடி
மற்றொருவீராறெட்டோர் மனையதிற்கூடினாலும்
சத்துருவுடனேகூடிச் சனிக்குநால்சசியுமாகி
மித்துருபார்வையின்றேல் மிகுதியுந்தனமேநாசம்.

இ-ள். 10-7-2-க்குடையவர்கள் பாஸ்கரனுடன் கூடிநிற்க 12-6-8-க்குடையோர் மனையில் கூடிநிற்க சத்துருவுடன் கூடி சனிக்கு 4-ஆமிடத்தில் சந்திரன்நிற்கில் மித்துருகிரகம் பார்வை யில்லாதிருக்க சாதகனுக்கு தனநாசமாகும் எ-று. 204

அஞ்சுமூன்றெட்டிற்காரி யாரனுமிரவிநிற்க
நஞ்சுபொன்சுங்கன்புந்தி நலமதியிவரைப்பாராச்
செஞ்சுடர்க்கிரணன்பக்கல் சேர்ந்துடனுதையனின்றால்
மிஞ்சிடபாக்கியமில்லை மிகத்தரித்திரமேயுண்டு.

இ-ள். 5-3-8-ல் சனி செவ்வாய் சூரியன் இவர்கள் நிற்க வியாழன் வெள்ளி புதன் சந்திரன் இவர்கள் பாராதிருக்கச் சூரியன் கிரணனுடைய பக்கம் சேர்ந்து உதையத்திலிருக்க சாதகனுக்கு பாக்கியமில்லாமல் தரித்திரவானாகி எக்காலமு மிருப்பான் எ-று. 205

எட்டொடிரண்டிலாப மிரவியுங்காரியாரால்
மட்டிடோராறெட்டாகி மதிகுருசுங்கனிற்க
விட்டிடோரிரவிக்கேழி விடையுமேயுதையனின்றால்
இட்டொருநாளுறில்லா திவன்றனநாசமாமே.

இ-ள். 8-க்குடையோனும் 2-ஆமிடத்தோன் இலாபாதிபதி சூரியன் சனி செவ்வாய் இவர்கள் 6-8-லிருக்க அவருடன் சந்திரன் குரு சுக்கிரன் இவர்கள் நிற்க சூரியனுக்கும் 7-ஆமிடத்தில் உதையாதிபதியிருக்க சாதகமானவனுடைய தனம் யாவும் நாசமாகும் எ-று. 206

உதையமூன்றெட்டிற்பாப ரோங்கிடவிலாபமுன்பின்
பதியவேமுன்பின்பற்றிப் பாபரேநிற்கக்கூட
மதியுமேயீனமாகி மனமிடைந்திருக்காராகிற்
சிதையுமேதனமுநாசஞ் சீர்கேடனுகிவாழ்வன்.

இ-ள். உதையத்தினும் 3-8-ல் பாபர்களிருக்க இலாபஸ்தானத்திற்கு முன்பின்னும் பற்றிப் பாபர்களிருக்க கூட சந்திரன் ஈனனுகி மனமிடைந்திருக்காராகின் சாதகனுக்கு தனமானது சிதறிப்போய் நாசமடைந்தும் சீர்கேடனுக வாழ்குவன் எ-று. 207

தனத்தினுலிரவிநிற்கத் தரைமகன்றர்மமானுர்
செனித்தான்மந்தனுகச் சென்மாதிக்கொருநால்புந்தி
மனதிலரவனிற்க மந்தனுக்கொருநான்காகில்
இனத்தினுற்றனமேநாச மிருமூன்றிற்சுங்கனுனல்.

இ-ள். தனத்தானத்தினும் 4-ஆமிடத்தினும் சூரியனிருக்க செவ்வாய் தர்மஸ்தான மேறிநிற்க சென்மத்தில் சனிநிற்க சென்மாதிக்கு 6-புதனிருக்க மனதில் பாம்புநிற்க அல்லது சனிக்கு 4-ஆமிடத்திலிருக்க சாதகனுக்கு இனத்தினுல் தனமானது நாசமாகும். 6-ல் சுக்கிரனுகினும் தனநாசமாகும் எ-று. 208

காணடாவுலகிலெளி யார்கள்போலே
கவனமிகும்பெரியோர்கள் வருவதுண்டு
ஆணுவத்தாலலையாதே லவர்கள்பதம்பணிந்து
அனுசரித்தால்காயகற்ப மருளொடும்பொருளும்
ஊணவைப்பார்கூத்திபெண்டு கலையேகண்டு
ஊரியெமனேய்கொண்டு வொதுங்காதேஐயா
பேணிவிட்டசாஸ்திரங்கள் பெரியோராலே
பேருலகில்வந்ததைப் பிரித்துப்பாரே.

இ-ள். காண்பதற்கு உலகின்கண் எளியோர்கள்போலும் கவனமிகுந்த பெரியோர்கள் வருவதுண்டு. நீ ஆணுவத்தினுல் அலையாமல் அவர்களுடைய பாதம் பணிந்து அனுசரிப்பாயாகில் காயகற்பமும் அருளும் பொருளும் பெருகும். கூத்திப்பெண்டுகளைக் கண்டும் மனநோய் கொண்டும் ஒதுங்கிடாதே. யாவருக்கும் உபயோகமாகச் செய்து வைத்த சாஸ்திரங்கள் பெரியோர்களாலும் உற்பத்தியாகிய இதைப் பார்ப்பாயாகவும் எ-று. 209

பாரடாவதினுலே மனதுதேரும்
பாவிகளேயேன்வீணுய் அலைகிறீர்கள்
ஆரடாமைந்தர்களே யானுரைத்தநூலில்
அணுவளவும்பிசகாது அறிந்துகடைத்தேறு
நீரடாஆகும்வினை யென்பாடலாலே
நிலைத்துவைப்பதினில் ஞானம்நிலைக்கக்காணும்
பேரடாவைம்பதினி லிரண்டுசொன்னேன்
பேசாதமொழிதனில் பேணலாமே.

இ-ள். மேற்கூறியவண்ணம் பார்ப்பதினுல் மனமானது தேரும். பாபிகள்போல் வீணில் ஏன் அலைகின்றீர்கள்? யான் உரைத்த நூலில்

அணுவளவும் பிசகாது, அதையறிந்து கடைத்தேருவாய். ஆகும் வினைகள் என்னுடைய பாடலாலும் நிலைத்து ஐம்பதினில் ஞான மானது நிலைக்கக்காணும், ஐம்பதினில் இரண்டு சொன்னேன். அதைக்கண்டு பேசாத மொழியதனில் பேணலாகுமென்றனர் எ-று.

மொழியிதிலேராமதேவர் பாலினுள்வெண்ணெயைப்போல்
வுரைத்தநிகண்டைன்னூறை வுறுதியுடன்காணு
பிழையிலாவாயிரங்கா வியத்தைப்பாரு
பேசிவைத்தவைந்நூறு திரட்டைப்பாரு
உழையிலாமுன்னூறு வகையைப்பாரு
வுகந்தெடுத்தகண்டத்தின் உறுதிப்பாரு
மழையிலேமெய்ஞ்ஞான மழையுதாக
மாட்டிவிட்டார்முனிவர்சித்தர் மார்க்கந்தானே.

இ-ள். மொழியாகும் இராமதேவர் பாலினுள் வெண்ணெயைப் போல் உரைத்த நிகண்டு ஐந்நூறை மனமுறுதியாகப் பாரும், பிழை யில்லாமற்படிக்குக் காவியம் ஆயிரத்தையும்பாரும், அத்துடன் ஐந்நூ றையும்பாரும். மழையைப்போல் மெய்ஞ்ஞான மழையதாகும் வண் ணம் முனிவர்கள் சித்தர்கள் மார்க்கமாகவும் எ-று. 211

மார்க்கமென்னபலநூலைத் தேடிப்பாரு
மைந்தனேசிவயோகத் தறிவில்நில்லு
தீர்க்கமென்னயிதைவிடவேறு தீர்க்கமென்ன
மடையருடமக்களுக்கோ யின்னூல்கிட்டா
மூர்க்கமென்னரோமரிஷி நூலைப்பாரு.
நுவலுமதிசோதிடமும் நன்றாய்ச்சொன்னார்
ஏற்கையென்னயென்குருவாம் புஜண்டர்பாதம்
யிருனூற்றிப்பத்துசோதிடநூ லினிதுமுற்றே.

இ-ள். மார்க்கமென்னும் பலநூல்களையுந் தேடிப்பார்த்து சிவ யோகத்தில் நின்றுபார்க்க தீர்க்கம் இதைவிட வேறுகிடையாது. மடையருடைய மக்களுக்கு இந்நூல்கிட்டாதாம் உரோமரிஷியின் நூலைப்பாரும். அதில் சோதிடம் நன்றாகச் சொன்னார். என்னுடைய குருவாகிய புஜண்டரின் பாதம்போற்றி இருநூற்றிபத்து பாட லாகிய சோதிடம் முற்றுப்பெற்றனவாம் எ-று. 212

## உரோமரிஷி சோதிட சிந்தாமணி விளக்கம்-210

முற்றிற்று.

---

ஆக இரேகைசாஸ்திரம்-310 உள்பட 520-பாடல்கள்

முற்றிற்று.

---

# சோதிட

# சில்லரைக் கோர்வை

இப்பூமியின்கண் உதித்த மாந்தர்கட்கு நன்மையுண்டானபோது தீமையும், தீமையுண்டானபோது நன்மையும் உண்டாவதும், மேற்சொல்லியுள்ள நன்மையும் தீமையும் அனுபவித்தே தீரவேண்டுமாகையாலும், அந்நன்மையும் தீமையும் வருங்காலமறியும்வண்ணம் ஆதியில் கணிதசாஸ்திரம் ஜோதிடத்தால் அவைகளை அறிந்துகொள்ளுமாறு அநேக சித்தர்களால் பற்பல நூல்களை வடமொழியில் எழுதப்பட்டன. அவைகளைத் தமிழால் மொழிபெயர்த்தும் நம்போன்று சிற்றறிவுள்ளோரும் அதைப் பயனடையும்வண்ணம் பற்பல நூல்களை ஒன்று சேர்த்து 'சோதிட சில்லரைக் கோர்வை' என்று பெயரளித்து, முறையே அறிவாளரும் சிற்றறிவுடையோரும் இதைக் கைக்கொள்வாராயின் கோசாரம், ஆரூடம், காரகம், கிரகநிலை, இராசிநிலை, ஆரூடம் சொல்லும் விதம், கணிதம் செய்யும்விதம், திசைபுக்தி அந்தரம் பிரிக்கும் விபரம், திசைப்பலன் சொல்லல், மாரக திசையறிதல், யோகதிசை, உற்பன்னதிசை இவை யாவும் ஆசானின்றி அனைவரும் தெரிந்து பயனடையுமாறு எளியநடையில் மதுரை. தம்புசாமி நாயுடு அவர்கள் குமாரரும் சோதிட வல்லவருமாகிய த. குப்புசாமி நாயுடு அவர்களால் பற்பல ஏட்டுப் பிரதிகளைக்கொண்டும் எழுதப்பட்டு சுத்தப்பிரதியாக அச்சிட்டுள்ளோம். ஆகையால் இதை ஒவ்வொருவரும் கைக்கொள்வராயின் பெரிதும் பயன்பெறலாம். ஒவ்வொருவரும் எமது பதிப்பைக் கவனித்து வாங்கக் கோருகின்றனம். விலை ரூபா 2 8 0

எமது விலாசம்:

**அ. இரங்கசாமிமுதலியார் ஸ்ன்ஸ்**

24, தாண்டவராயப்பிள்ளைவீதி, சென்னை.

அனுபோக

# சோதிட பிரம்ம ரகசியம்

இந்த அனுபோக சோதிட பிரம்ம ரகஸ்யத்தில் அயனங்கள், ருதுக்கள், திதிகள், நட்சத்திரபாதம், வாரங்கள், யோகங்கள், கரணங்கள், வேளைகள், மாதங்கள் இவைகளின் பலாபலன் மிகத் தெளிவாய் அச்சிட்டிருப்பதால் இவைகளின் பலன்களெல்லாம் யாதாமொரு காரியம் துவக்கும்போது நன்மை தீமை யறிந்து நடப்பதுந்தவிர, குழந்தை ஜனனமாகும்போது அதுகளின் நிலைமைப்பிரகாரம் அவாளவாள் அமைப்பையும் அறிய அனுகூலமாயிருக்கும். இதுதவிர துவாதசபாவபலனும், கிரகதுடர்ச்சி கிரகங்களின் நட்பு பகை சமம் கிரகதத்துவங்களும், கோட்சாரம் ஆரூடம் பார்க்கும்விதமும், கோட்சார ஆரூடபலன்கள், நவாங்கிசபலாபலன் முதல்பாகமாகிய பிள்ளையின்குறி, பிள்ளை பிறக்குமிடம், அரிட்டம், அமிசை, மாலை, கொடி, மருவு, ஆயுள், தொழில் முதலியவைகளும், 2-ம் பாவகமாகிய நேத்திரம், ஊமை, வித்தை, தனவான், கர்மம், பொருளின் துகை, தின்னும் சுவை முதலியவைகளும், 3-ம் பாவகமாகிய சகோதரர், மூத்தவர், இளையவர், அங்கஹீனம், ஆபரணங்கள் முதலியவைகளும், 4-ம் பாவகமாகிய மாதுருபலன், வாகனங்கள், தாய்க்கரிஷ்டம், வீடுகள், சோரம் முதலியவைகளும், 5-ம் பாவகமாகிய புத்திரர், தத்துபுத்திரர் முதலியவைகளும், 6-ம் பாவகமாகிய வாழ்க்கை, கெண்டமும், 7-ம் பாவகமாகிய மனைவியின் ஜாதி, கலியாணம், மனைவிவரும் திசையும், 8-ம் பாவகமாகிய தீர்க்காயுசு, அற்பாயுசு, முன்னைய வயது, மாரகதிசை, மாரககரணமும், இடத்தையும் நடத்தையும், 9-ம் பாவகமாகிய பிதாவுக்கீனம், நலம், அரிட்டம், பாக்கியமும், 10-ம் பாவகமாகிய துர்க்காரியமும், 11-ம் பாவகமாகிய லாபமும், 12-ம் பாவகமாகிய சுகவாழ்வு முதலியவைகளும், பெண்கள் ஜாதகமும் சேர்த்து சுத்தமாய் அச்சிட்டிருக்கிறது.

ஒன்று விலை அணா 12

எமது விலாசம்:—

அ. இரங்கசாமி முதலியார் ஸன்ஸ்.

24. தாண்டவராயப்பிள்ளைவீதி, சென்னை.